அன்பார்ந்த நண்பர்களே!

இதோ உங்களிடம் பாய்ந்தோடி வரும் ''கதை அருவி'' – நூறு கதைகளின் தொகுப்பு. எல்லாக் குழந்தைகளிடமும் கதை உலகத்தைக் கொண்டு சேர்க்கும் முயற்சியே இந்தக் கதை அருவி.

## ஏன் இந்தக் ''கதை அருவி''?

பெரும்பாலான கிராமப்புறக் குழந்தைகள் முதல் தலைமுறைக் கற்போராக உள்ளனர். அவர்கள் படிப்பதற்குப் பாடப் புத்தகங்களைத் தவிர வேறு எதுவும் கிடைப்பதில்லை. பலவகையான கதைகள், புத்தகங்கள் படிக்க வாய்ப்புக் கிடைக்கும் போது குழந்தைகளின் கற்றல் திறன் மேம்படுகிறது. கதைகள் அவர்களின் மொழித் திறனை வளர்க்க மட்டுமல்லாமல் உலகைப் பார்க்கும் ஜன்னலாகவும் அமைகின்றன.

வெறும் எழுத்துக்கள், சொற்களைத் தொடர்பின்றிப் பயில்வது குழந்தைகளுக்குச் சலிப்பூட்டுவதாக இருக்கும். இயல்பான சூழல்களின் அடிப்படையில் கற்கும் பொழுது அவர்களால் பொருள் புரிந்து படிக்க முடிகிறது. கதைகளில் அவர்கள் விரும்பும் மகிழ்ச்சிகரமான சூழல்கள் பல உள்ளன. அவை அவர்களுடைய மனதைத் தொடுகின்றன. கற்பனையைத் தூண்டுகின்றன. கற்பது இயல்பாகிறது.

அச்சமின்றிச் சுதந்திரமாகப் புத்தகங்களைப் படிக்க, பகிர்ந்துக் கொள்ள, படைப்பாற்றலுடன் ஈடுபட ஏதுவான சூழலை வகுப்பறைக்குள்ளேயே உருவாக்க முடியும். இதன் அடிப்படையிலேயே ''கதை அருவி'' தயாரிக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு வகுப்பறையிலும் உள்ள கற்றல் மூலைகளில் (Learning corners) கதை அருவியை வைத்துக் குழந்தைகளைப் படிக்கச் செய்யலாம். புத்தகங்கள் படிக்கும் பழக்கத்தை வலுவூட்டக் கதை படிப்பது ஒரு சிறந்த அணுகுமுறை அல்லவா?

கதை அருவித் தொகுப்பில் உள்ள கதைகள் ஒவ்வொன்றும் தனித்தனி அட்டைகளில் அச்சிடப்பட்டுள்ளது. இதனால் அட்டைகளைத் தாமே கையாண்டு படித்து மகிழும் வாய்ப்பு குழந்தைகளுக்குக் கிடைக்கிறது. இந்தக் ''கதை அருவி'' யைத் தயாரிப்பதற்காக ஏராளமான கதைகளைப் படித்துப் பார்த்தோம். சிறந்த பல கதைகளைத் தேர்ந்தெடுத்தோம். குழந்தைகளின் தனி உலகத்தை மனதில் கொண்டு சில புதிய கதைகளையும் உருவாக்கினோம். எளிய நடையில் குழந்தைகளுக்கு ஏற்றவாறு எழுதி வடிவமைத்துள்ளோம்.

இத்தொகுப்பு வெளிவர உதவிய அனைவருக்கும் எங்கள் நன்றி கலந்த வணக்கங்கள்.

கதை அருவிக் குழு

P. சரஸ்வதி V. விஜயகாந்தி L.S. சரஸ்வதி S. ராஜலக்ஷ்மி

# குழந்தைகளின் மொழி வளர்ச்சிக்குக் கதையைப் பயன்படுத்தச் சில வழிமுறைகள்

கதைகளில் தான் குழந்தைகளுக்கு எத்தனை ஆர்வம்! குரலை ஏற்றி இறக்கி முகபாவங்களை மாற்றி நாம் சொல்லும் கதைகளில் அவர்கள் ஒன்றிவிடுகிறார்கள் அல்லவா? கதைகளைக் கேட்கும் பொழுது ஒவ்வொரு குழந்தையும் தன் விருப்பம் போலக் கதைகளுடன் தொடர்பு கொள்கிறது. தன் கற்பனையைச் சேர்க்கிறது. கதைகளை உயிரோட்டமுள்ளதாக்குகிறது.

## I. குழந்தைகளின் முன்னறிவோடு தொடர்புபடுத்துதல்

தலைப்பைப் பற்றி, கதாபாத்திரங்கள் பற்றி அவர்களுக்கு ஏற்கனவே தெரிந்த விபரங்களைச் சொல்லத்தூண்டவும். (எ–டு) நிலாக்கதை.

## II. கதையைப் புரிந்துக் கொள்ளுதல்:

1. கதை நிகழ்வுகளை வரிசைப்படுத்தல்.
2. மையக்கருத்தை அறிதல்: கதை எதைப் பற்றியது என்பதை குழந்தைகள் உணர்வது அவசியம். ஒரு பக்கம் அல்லது பத்தியைப் படித்தவுடன் நிறுத்தவும் கேள்விகள் மூலம் அப்பத்தியின் முக்கியமான கருத்துகளை வெளிப்படுத்தத் தூண்டவும்.
3. கற்பனை–உண்மைக்கதைகள்: எந்தெந்தக் கதைகள் கற்பனையானவை எவை உண்மைக் கதைகள் என்பதை கேள்விகள் கேட்டு சிந்திக்கச் செய்யவும்.
4. அடுத்து நடக்கப் போவதை யூகித்தல்: கதை படிக்கும் போதே "அடுத்த பக்கத்தில் என்ன நடக்கப் போகிறது?" என்று கேள்விகள் கேட்கவும். குழந்தைகள் தங்கள் யூகத்திற்குப் படங்களையும் பயன்படுத்தலாம்.
5. ஒப்பிட்டுப்பார்த்தல் : கதாபாத்திரங்களை ஒப்பிட்டு ஒற்றுமை வேற்றுமைகளைக் கண்டறியச் செய்யவும்.
6. கதைச் சுருக்கம்: கதை நிகழ்வுகளைச் சுருக்கமாகக் கூறச் செய்யவும்.
7. கதையை மீண்டும் கூறுதல்: கேட்டதை, படித்ததை மற்ற குழந்தைகளுக்கு விளக்கிக் கூறச் செய்யவும். குழந்தைகள் தம் சொந்த நடையில் கதையைச் கூற அனுமதிக்கவும்.

## III. சொற்களஞ்சியப் பெருக்கம்

குழந்தைகளுடன் கதையைப் படிக்கும் போது புதிய சொற்களைச் சிறுசிறு அட்டைகளில் எழுதவும். அவற்றின் பொருளை அறிந்துக் கொள்ளக் கலந்துரையாடவும், சொற்களைத் தொடர்களில் பயன்படுத்த ஊக்குவிக்கவும், கதைகளைப் படிக்கப்படிக்கச் சொல் அட்டைகள் குவியும், அவற்றை ஒரு பெட்டியில் போட்டு, வகுப்பறையில் தொங்கவிட்டு (பின்வருமாறு) பயன்படுத்தவும்.

1. ஒருவர் ஒரு சொல்லை உரக்கச் சொல்ல மற்ற குழந்தைகள் எழுதட்டும்.
2. ஏதேனும் ஒரு சொல்லை விடுகதைக்கான குறிப்புகளுடன் சொல்ல மற்றவர்கள் அது என்ன என்பதைக் கண்டுபிடிக்கட்டும்.













3. சொல் அட்டைகளை அகரவரிசைப்படுத்தட்டும்.
4. ஒத்த ஓசையுடைய / ஒரே எழுத்தில் தொடங்கும் சொற்களை வகைப்படுத்தட்டும்.
5. ஒரு வினைச் சொல்லைத் தேர்ந்தெடுக்கவும். அது எந்தெந்தக் கதைகளில் எவ்வாறெல்லாம் பயன்படுத்தப்பட்டிருக்கிறது என்பதைக் கவனிக்கச் சொல்லவும். பிறகு தொடர்களைப் பட்டியலிடட்டும்.

## IV. சொந்தக் கருத்துக்களை வெளிப்படுத்துதல்:

கேள்விகள் கேட்டு கதையைப் பற்றிப் பல கோணங்களில் சிந்திக்கத் தூண்டவும். (எ–டு) கதையில் உனக்கு மிகவும் பிடித்தது எது? ஏன்? நீ அந்தக் கதாபத்திரமாக இருந்திருந்தால் என்ன செய்திருப்பாய்? ஆசிரியர்கள் நீதிக் கருத்துக்களை முன் கூட்டியே சொல்லாமல் குழந்தைகள் தாமாக சிந்தித்து கருத்துக்களை வெளிப்படுத்த வாய்ப்பு அளிக்கவும்.

## V. படைப்பாற்றலை வெளிப்படுத்துதல்:

1. கதையை நாடகமாக்கி நடிக்கச் செய்யவும்.
2. ஒருவர் கதாபாத்திரமாக நடிக்க மற்றவர் அவரைப் பேட்டி காணச் செய்யவும். கற்பனை உரையாடலை உருவாக்கவும்.

3. அவரவர் கற்பனைக் கேற்ப கதைக்குப் புதிய படங்கள் வரையச் செய்யவும்.
4. கதை முடிவை மாற்றி அமைத்து, தகுந்த தலைப்பைக் கொடுக்கச் செய்யவும்.
5. கதையை நீட்டித்து அல்லது மாற்றிப் புதிய கதை உருவாக்கச் செய்யவும்.
6. குழுவில் ஒவ்வொருவரும் ஒரு தொடர் கூறி ஒரு கதையை உருவாக்கத் தூண்டவும்.
7. 3 – 4 பட/சொல் அட்டைகளை இணைத்து குழுவில் கதை தயரிக்கச் சொல்லவும்.
8. கதை நிகழ்வுகளைப் பொறுத்துக் கலை, கைவினைச் செயல்பாடுகளில் குழந்தைகளை ஈடுபடுத்தவும். (எ–டு) முகவுறைகள், நிகழ்விட மாதிரிகள்.
9. கவிதைகள், விடுகதைகள், சிரிப்புத் துணுக்குகள் ஆகியவற்றைச் சேகரித்துக் கதைப்பத்திரிக்கை தயாரிக்க உதவவும்.

## VI. மற்ற பாடங்களோடு ஒருங்கிணைத்தல் :

கணிதம், அறிவியல், சமூகவியல், மொழிப் பாடம் ஆகியவற்றை நடத்தும் போது இத் தொகுப்பிலுள்ள கதைகளைத் தொடர்புபடுத்தி அறிமுகப்படுத்தவும்.

ஒரு மையக்கருத்தை எடுத்துக் கொண்டு அதையொட்டிய கதைகளைத் தொடர்ந்து அறிமுகப்படுத்தலாம். அதே கருத்தை மையமாகக் கொண்ட பல கதைகளைக் குழந்தைகளிடம் சேகரிக்கச் செய்யலாம். இதன் மூலம் நூலகத்திலுள்ள பிற புத்தகங்களைப் படிக்கச் குழந்தைகளுச்குச் சிறந்த பயிற்சியும் வாய்ப்பும் கிட்டும்.

## VII. விடுகதைகள் :

குழந்தைகளை இரு குழுக்களாகப் பிரித்து ஒரு குழு விடுகதைகள் சொல்ல இன்னொரு குழு விடைகூறச் செய்யவும். பொருள்கள், விலங்குகள், பறவைகள் இவற்றின் பெயர்களைக் கொடுத்து அவற்றைக் குறித்துப் புதிதாக விடுகதைகளைத் தயார் செய்யச் சொல்லவும்.

**RAJALAKSHMI SRINIVASAN MEMORIAL FOUNDATION (RSMF )**

பேராசிரியர் ராஜலட்சுமி சீனிவாசன் (ராஜி) பன்முக ஆளுமை பெற்றவர். ஓர் ஆசிரியராக, நிர்வாகியாக, பெண்கள் செயல்பாட்டாளராக, தலைவியாக, சமூகப் பணியாளராகத் திகழ்ந்தார். புறக்கணிக்கப்பட்ட ஏழை மக்களுக்காகவும், அதிலும் குறிப்பாக பெண் குழந்தைகளுக்காகவும் தன் இறுதி மூச்சுவரை சேவை புரிந்தவர். அவர் கண்ட கனவுகளை நிறைவேற்ற RSMF உருவானது.
கதை அருவியை 2003ல் முதன் முதலாக சட்டநாத் அறக்கட்டளை வெளியிட்டது.
பிறகு RSMF எவ்வித லாபநோக்கமும் இன்றி பல இந்திய மொழிகளில் கதை அருவியை வெளிக்கொண்டு வந்து குழந்தைகளிடம் சேர்க்க உதவுகிறது.



CONTACT ADDRESS
RAJALAKSHMI SRINIVASAN MEMORIAL FOUNDATION
Flat No.2, Ramapriya Apartments, 58/A, Canal Bank Road,
Kandasamy Nagar, East Kottivakkam, Chennai - 600 041.
Ph : 9444032890, E-mail : rsmf1944@gmail.com
Website : www.rajifoundation.org.in

# கதைகளின் கதை!!



கதை என்றாலே சுவாரசியம்! உற்சாகம்! பரபரப்பு! அலுப்புப் பறந்து போகிறது! கதை கேட்பதும், சொல்வதும் யாருக்குத்தான் பிடிக்காது?

நாம் கேட்ட, சொன்ன கதைகள்தான் எத்தனை எத்தனை! கணக்கிட முடியுமா என்ன? மரங்கள், பூக்கள், விலங்குகள் கதைகள், ராஜா-ராணி கதைகள், புராணக் கதைகள், மாய மந்திரக் கதைகள், வரலாற்றுக் கதைகள், சிரிப்புக் கதைகள், அறிவுக் கதைகள், பாட்டி தாத்தா கதைகள்...என்று பட்டியல் நீண்டு கொண்டே போகிறது அல்லவா?





இதோ கதைகளைப் பற்றி சில கதைகள். ஒரு கிராமத்தில் முடி திருத்துபவர் ஒருவர் இருந்தார். ஒரு நாள் அவர் ஒரு ரகசியம் கேட்க நேர்ந்தது. அதை யாரிடமும் சொல்லாமல் இருந்ததால் அவர் உடல் பருமனாகிக் கொண்டே வந்தது. தாள முடியாமல் மனைவியிடம் சொல்லி விட்டார்.

இப்போது மனைவியின் உடல் பெருக்கத் தொடங்கிவிட்டது. அவள் ரகசியத்தை ஒரு குழியிடம் சொல்லி மண்ணைப் போட்டு முடிவிட்டாள். அந்த இடத்தில் ஒரு மரம் வளர்ந்தது. அதிலிருந்து செய்யப்பட்ட புல்லாங்குழல் ரகசியத்தை ஊர் முழுக்கப் பரப்பியது.

இதோ இன்னும் ஒரு கதை ஆப்பிரிக்காவிலிருந்து;



முன்னொரு காலத்தில் ஒரு சிறு சுண்டெலி இருந்தது. அது அங்கும் இங்கும் சுற்றித் திரியும். சுவரில் உள்ள சிறு பொந்தில் ஒளிந்து கொள்ளும். வீடுகளில் தான் கேட்கும் கதைகளை எல்லாம் ஒன்றுவிடாமல் சேகரிக்கும்.

சுண்டெலிக்கு இந்தக் கதைகள் மீது அபாரப் பிரியம். கதைகளை பத்திரமாக மரத்தடியில் உள்ள ஒரு குழியில் மறைத்து வைக்கும்.

ஒரு நாள் ஒரு நரி கதைகள் இருந்த குழியைத் தோண்டியது. ஐயோ! கதைகள் பயந்து நடுங்கின. அவை குழியில் இருந்து எல்லாத் திசைகளிலும் ஓடத் தொடங்கின.



உன்னிடமும், என்னிடமும் கூட ஓடி வருகின்றன. சிறு சிறு மாற்றங்களுடன் நம்மிடம் இருந்து நமது நண்பர்களிடம் ஓடுகின்றன. அவர்களிடமிருந்து அவர்கள் உறவினர்கள், நண்பர்களிடம் ஓடுகின்றன.

இப்படியே கதைகள் காலம்
காலமாகத் தொடர்ந்து
ஓடிக் கொண்டே இருக்கின்றன.



P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : Uma Krishnaswamy

# யானையும் நாயும்



ஒரு சமயம் பிரம்மதத்தன் என்னும் அரசன் காசியை ஆண்டு வந்தான். அவனிடம் ஒரு யானை இருந்தது. யானைப் பாகன் அதைக் கண்ணும் கருத்துமாய்க் கவனித்து வந்தான்.

தினமும் மதியம் யானைக்கு உணவு கொடுப்பான். அப்போது பாகனின் நாயும் அங்கு வந்துவிடும். யானையோடு சேர்ந்து சாப்பிடும். விரைவிலேயே யானையும் நாயும் நெருங்கிய நண்பர்களாகி விட்டன.



யானை நாய்க்காகத் தினமும் காத்திருக்கும். நாய் வராவிட்டால் யானை சாப்பிடவே சாப்பிடாது. நாயும் யானையுடன் விளையாடும். யானையின் துதிக்கையில் ஏறி ஊஞ்சலாடும்.



ஒரு சமயம் யானைப் பாகனுக்குப் பணம் தேவைப்பட்டது. அவன் தன் நாயை விற்றுவிட்டான். நாய் மனமுடைந்தது. வேறு வழியின்றிப் புதிய வீட்டுக்குச் சென்றுவிட்டது.

நண்பனைக் காணாத யானை சாப்பிட மறுத்தது. குளிக்கவும் வரவில்லை. சோகமாக இருந்தது.

யானை சாப்பிடாத செய்தி அரசனுக்குத் தெரிய வந்தது. மந்திரியை அனுப்பி யானையைப் பற்றி விசாரிக்கச் சொன்னார்.

மந்திரியும் யானையைப் பரிசோதித்தார். 'யானைக்கு உடலில் ஒரு குறையும் இல்லை. மனதில்தான் ஏதோ வருத்தம்,' என்று எண்ணினார். சுற்றியிருந்த எல்லோரையும் விசாரித்தார். "நாயைப் பிரிந்த ஏக்கத்தால் யானை சோகமாக இருக்கிறது," என்று அவர்கள் சொன்னார்கள்.

இந்தச் செய்தியை மந்திரி அரசரிடம் தெரிவித்தார். உடனே அரசன், "பாகனின் நாய் யாரிடம் இருக்கிறதோ அவர்கள் அதை உடனே விட்டுவிட வேண்டும். இது அரசனின் கட்டளை," என்று முரசு கொட்டி அறிவிக்கச் செய்தான்.

நாயை வாங்கியவன் இந்த அறிவிப்பைக் கேட்டான். மறுகணமே அதன் கயிறை அவிழ்த்து விட்டான். நாய் ஒரே பாய்ச்சலில் ஓடி யானையிடம் வந்து சேர்ந்தது.



இரு நண்பர்களுக்கும் ஒரே மகிழ்ச்சி. யானை துதிக்கையால் நாயைத் தூக்கியது. தன் தலையில் வைத்துக் கொண்டது. மகிழ்ச்சியால் அதன் கண்களில் நீர் வழிந்தது.

பாகன் யானைக்கு உணவு கொண்டு வந்தான். யானை முதலில் நாயைச் சாப்பிட வைத்தது. பிறகு மகிழ்ச்சியுடன் தானும் சாப்பிட்டது.

மூலம் : ஜாதகக் கதைகள்





P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : Uma Krishnaswamy

## 3 ஒன்பதா? பத்தா?



ஒரு வறண்ட பாலைவனம். அங்கு ஒரு வியாபாரி தன் பத்து ஒட்டகங்களுடன் பயணம் செய்து கொண்டிருந்தான். ஒரு ஒட்டகத்தின் மேல் அமர்ந்து அவன் முன்னே சென்று கொண்டிருந்தான். மற்ற ஒன்பது ஒட்டகங்களும் அவனைப் பின் தொடர்ந்தன.

‘எல்லா ஒட்டகங்களும் வருகின்றனவா?’
பின்னால் திரும்பி எண்ணிப் பார்த்தான்.
‘ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து,
ஆறு, ஏழு, எட்டு, ஒன்பது... ஐயோ!
இதென்ன ஒரு ஒட்டகம் குறைகிறதே!’ கீழே
குதித்தான். அங்கும் இங்கும் தேடினான்.



மீண்டும் எண்ணிப் பார்க்கலாமா! 'ஒன்று, இரண்டு......' என்ன ஆச்சரியம்! பத்து ஒட்டகங்களும் பத்திரமாக இருந்தன.

மகிழ்ச்சியுடன் ஒட்டகத்தின் மேல் ஏறினான். பயணத்தைத் தொடர்ந்தான். சிறிது தூரம் சென்றதும் மீண்டும் ஒட்டகங்களை எண்ணினான். ஒன்பது மட்டுமே இருந்தன!

குழப்பத்துடன் கீழே இறங்கினான். மறுபடியும் தேடினான். ஒட்டகத்தை எங்குமே காணவில்லை! ஒட்டகங்கள் இருக்கும் இடத்துக்குத் திரும்பி வந்தான். மீண்டும் எண்ணினான்.





"இதென்ன மாயம்! பத்து ஒட்டகங்களும் சரியாக இருக்கின்றனவே! இந்த வெயில் வேறு என் உயிரை எடுக்கிறது," என்று எரிச்சலுடன் ஒட்டகத்தின் மேல் ஏறினான். நான்காவது முறையாக ஒட்டகங்களை எண்ணினான். ஒன்பது ஒட்டகங்கள்தான் இருந்தன!

ஏன் ஒன்று குறைகிறது? வியாபாரிக்கு ஒன்றும் புரியவில்லை.

ஒரு முடிவுக்கு வந்தான். 'ஒட்டகத்தின் மேல் ஏறிச் சவாரி செய்தால் தானே ஒன்றை இழக்கிறேன். அவற்றுடன் சேர்ந்து நடந்தே செல்கிறேன்,' என்று கொளுத்தும் வெயிலில் ஒட்டகங்களுடன் நடக்க ஆரம்பித்தான்.






P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : S. P. Raju

# மாயப் பென்சில்



படம் வரைவது காசிமுக்கு மிகவும் பிடிக்கும். கூர்மையான கல்லையும் குச்சியையும் எடுத்துக் கொள்வான். மண் தரையில் எப்போதும் படம் வரைந்து கொண்டே இருப்பான். பென்சில் வாங்க அவனிடம் காசு இல்லை.

'பென்சில் மட்டும் இருந்தால் எல்லாப் படங்களையும் அழகாக வரையலாமே!' காசிம் நினைத்துக் கொண்டிருக்கும்போதே ஒரு முதியவர் அங்கு வந்தார். ஒரு பென்சிலைக் கொடுத்தார். "ஏழைகளுக்கு மட்டும் படம் வரைந்து கொடு," என்று கூறி மறைந்து விட்டார்.



காசிமுக்கு ஒரே மகிழ்ச்சி. முதலில் ஒரு கோழி வரைந்தான். என்ன ஆச்சரியம்! அது உண்மையான கோழியாக மாறி விட்டது. பூனை வரைந்தான். அது உண்மையான பூனையாக மாறிவிட்டது. ஆம்! அது ஒரு 'மாயப் பென்சில்!'

குழந்தைகளுக்குப் பந்து வரைந்தான். அது உண்மையான பந்தாகவே மாறிவிட்டது. நோட்டுப் புத்தகம் வரைந்தான். பம்பரம் வரைந்தான். சட்டை வரைந்தான். பழம் வரைந்தான். எல்லாமே உண்மைப் பொருள்களாக மாறிவிட்டன.
ஏழை மக்கள் கேட்டதை எல்லாம் வரைந்து
கொடுத்தான்.



இந்தத் தகவல் மன்னன் காதுக்கு எட்டியது. மன்னன் காசிமைக் கூப்பிட்டு, "எனக்குத் தங்கக் காசுகள் நிறைந்த ஒரு பெரிய மரம் வரைந்து தா!" என்று ஆணையிட்டான்.

காசிம், "அரசே, தங்களிடம் ஏராளமான செல்வம் உள்ளது. நான் ஏழைகளுக்கு மட்டும்தான் படம் வரைவேன்," என்று கூறி மறுத்துவிட்டான்.

மன்னனுக்குக் கோபம் வந்தது. "இவனைச் சிறையில் அடையுங்கள்," என்று ஆணையிட்டான்.



காசிம் சிறையில் சும்மா இருந்து விடுவானா? அவன் தான் புத்திசாலியாயிற்றே! பென்சிலை எடுத்தான். ஒரு சாவி வரைந்தான். அது உண்மையான சாவியாக மாறியது. சிறையின் பூட்டைத் திறந்தான். வெளியேறினான்.

மூலம் : மலேசியக்கதை





P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : S. P. Raju

# குரங்குகளின் தோட்ட வேலை



ஒரு சமயம் அரசன் ஒருவன் தன் நாட்டில் உள்ள அனைவருக்கும் விடுமுறை அளித்தான். எல்லோரும் விடுமுறையை மகிழ்ச்சியாகக் கொண்டாடச் சென்று விட்டனர். ஆனால், அரண்மனைத் தோட்டக்காரனால் மட்டும் செல்ல முடியவில்லை.

'நான் சென்று விட்டால் மரம், செடி, கொடிகள் எல்லாம் காய்ந்து விடுமே! என்ன செய்யலாம்?' யோசித்தான் தோட்டக்காரன். ஒரு முடிவுடன் தோட்டத்தில் இருந்த குரங்குகளிடம் சென்றான்.





தலைமைக் குரங்கிடம், "நீங்கள் இந்தத் தோட்டத்தில் சுதந்திரமாக வாழ்கிறீர்கள். பழங்களையும், கொட்டைகளையும் வேண்டிய அளவு சாப்பிடுகிறீர்கள். கிளைக்குக் கிளை தாவி விளையாடுகிறீர்கள். எனக்கு ஓர் உதவி செய்வீர்களா?" என்றான்.

"ஓ! தாராளமாக!! நாங்கள் என்ன செய்ய வேண்டும்?" என்றது தலைமைக் குரங்கு.

தோட்டக்காரன், "நீங்கள் எல்லோரும் சேர்ந்து இங்கு உள்ள செடி, கொடிகளுக்குத் தண்ணீர் ஊற்ற வேண்டும்.

மாலையில் வெயில் குறைந்த பிறகு தண்ணீர் ஊற்றுங்கள்; நிறைய ஊற்றுங்கள். ஆனால், அளவுக்கு அதிகமாக ஊற்றி விடாதீர்கள்," என்று எச்சரித்தான். பிறகு நிம்மதியாக ஊருக்குச் சென்று விட்டான்.

மாலை வந்தது. தண்ணீர்க் குடங்களை எடுத்துக் கொண்டு குரங்குகள் சுறுசுறுப்பாக வேலையில் இறங்கின. ஒவ்வொரு செடியாகத் தண்ணீர் ஊற்றத் தொடங்கின. தலைமைக் குரங்கு, "ஒவ்வொரு செடிக்கும் போதிய அளவு தண்ணீர் ஊற்றுங்கள்," என்றது.

"ஒவ்வொரு செடிக்கும் போதிய அளவு தண்ணீர் ஊற்றி விட்டோமா என்பதை எப்படித் தெரிந்து கொள்வது?" என்று குரங்குகள் கேட்டன.



தலைமைக் குரங்கு சிறிது நேரம் யோசித்தது. "ஒவ்வொரு செடியையும் பிடுங்குங்கள். நீண்ட வேருடைய செடிக்கு நிறையத் தண்ணீர் ஊற்றுங்கள். சிறிய வேருடைய செடிக்குக் குறைவாகத் தண்ணீர் ஊற்றுங்கள்," என்றது.

குரங்குகள் ஒவ்வொரு செடியாகப் பிடுங்கி, வேர்களின் நீளத்தைப் பார்த்தன. அடுத்த நாள், தோட்டக்காரன் விடுமுறை முடிந்து வேலைக்குத் திரும்பினான். ஐயோ பாவம்! எல்லாச் செடிகளும் தரையில் வாடி, வதங்கிக் கிடந்தன!

மூலம் : ஜாதகக் கதைகள்





P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : P. S. Raju

# உனக்குப் பாதி - எனக்குப் பாதி

உழவன் ஒருவன் வேர்க்கடலை பயிரிட விரும்பினான். காட்டுக்கு அருகில் இருந்த நிலத்தை நன்றாக உழுதான். அவனை தினமும் பார்த்துக் கொண்டிருந்தது ஒரு கரடி.

ஒரு நாள் அது அவன் அருகே வந்தது. "உழவா! உன்னைத் தின்னப் போகிறேன்!" என்று மிரட்டியது.





உழவன் நடுங்கினான். ஆனாலும் சமாளித்துக் கொண்டு, “கரடியாரே! என்னைத் தின்னாதீர். பயிர் விளைந்ததும் இருவரும் சமமாகப் பங்கிட்டுக் கொள்ளலாம்! வேர்ப் பகுதியை நான் எடுத்துக் கொள்கிறேன். தழைப் பகுதியை நீர் எடுத்துக் கொள்ளும்,” என்றான். கரடியும் ஒப்புக் கொண்டது.

உழவன் கடுமையாக உழைத்தான். வேர்க்கடலை செழிப்பாய் விளைந்தது. அறுவடை நாள் வந்தது. கரடி தன் பங்கைக் கேட்டது. ஒப்புக்கொண்டபடி உழவன், தழைப் பகுதியைக் கரடிக்குக் கொடுத்தான். வேர்ப்பகுதியைத் தன் வண்டியில் ஏற்றினான். வண்டி கிளம்பியது.

“நில்!” என்றது கரடி. “வேர்ப்பகுதியைக் கொடு. ருசித்துப் பார்க்கவேண்டும்,” என்றது.

கரடி வேர்ப்பகுதியைக் கடித்துப் பார்த்தது. "என்னை ஏமாற்றி விட்டாயே! வேர் ருசியாக உள்ளது. தழையில் எந்தச் சுவையும் இல்லை. இனிமேல் இந்தப் பக்கம் வராதே!" என்று கோபத்துடன் உறுமியது.

உழவன், "கோபப்படாதீர், கரடியாரே! அடுத்த முறை உமக்கு வேர்ப்பகுதி, எனக்குத் தழைப்பகுதி," என்று சமாதானப் படுத்தினான்.

அடுத்த ஆண்டு அதே இடத்தில் உழவன் மக்காச்சோளம் பயிரிட்டான். பயிர் செழிப்பாக வளர்ந்தது. அறுவடை நாள் வந்தது. கரடி தன் பங்கைக் கேட்டது. உழவன் வேர்ப்பகுதியைக் கரடிக்குக் கொடுத்தான். கதிர்களை வண்டியில் ஏற்றிக் கொண்டு வேகமாகச் சென்று விட்டான்.



கரடி வேரைத் தின்று பார்த்தது. “சீச்சீ! சுவையே இல்லை. உழவன் மீண்டும் என்னை ஏமாற்றி விட்டான். வரட்டும் அவன். ஒரு கை பார்க்கிறேன்,” என்று கோபத்துடன் காத்திருந்தது.

உழவன் அங்குத் திரும்பி வந்தால் தானே...!!




P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : Uma Krishnaswamy

# வீடு மாற்றம்



ஒரு ஊரில் ஒரு செல்வந்தர் இருந்தார். அவர் வீட்டுக்கு இடது பக்கத்தில் ஒரு கொல்லர் பட்டறை. வலது பக்கத்தில் ஒரு தச்சர் வீடு.



நாள் முழுவதும் கொல்லர் பட்டறையிலிருந்து சம்மட்டிச் சத்தம் காதைப் பிளக்கும்! தச்சர் வீட்டில் ரம்பத்தால் மரத்தை அறுக்கும் சத்தம்! செல்வந்தரால் அமைதியாக ஓய்வெடுக்க முடியவில்லை. நிம்மதியாகத் தூங்கவும் முடியவில்லை.

என்ன செய்யலாம்? செல்வந்தர் பல நாள்கள் யோசித்தார். ஒருநாள் கொல்லரையும், தச்சரையும் வரவழைத்தார். "ஐயா, என்னால் நிம்மதியாகத் தூங்க முடியவில்லை. தயவு செய்து நீங்கள் வீடு மாற்றிச் சென்றுவிடுங்கள். நான் உங்களுக்கு வேண்டிய அளவு பணம் தருகிறேன்," என்றார்.



“சரி, ஐயா. அப்படியே செய்கிறோம்!” என்று கூறி இருவரும் சென்று விட்டனர். சிறிது நேரம் கழித்து அவர்கள் சாமான்களை வண்டியில் ஏற்றினர். இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த செல்வந்தருக்கு ஒரே மகிழ்ச்சி.

‘அப்பாடா! இருவரும் வீட்டைக் காலி செய்துவிட்டார்கள். இனி நான் நிம்மதியாகத் தூங்குவேன்,’ என்று படுக்கப் போய்விட்டார்.



மறுநாள் காலை. மீண்டும் அதே சத்தம் காதைப் பிளந்தது. செல்வந்தர் அதிர்ச்சி அடைந்தார். தன் வேலையாளை வெளியே சென்று பார்த்து வரச்சொன்னார்.

திரும்பிவந்த வேலையாள், "இருவரும் வீடு மாற்றிவிட்டார்கள்! கொல்லர் வீட்டுக்குத் தச்சரும், தச்சர் வீட்டுக்குக் கொல்லரும் போய்விட்டார்கள்," என்றான்.

மூலம் : கொரிய நாட்டுக் கதை




P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : S. P. Raju



8

# பறவை யாருக்கு?



அது ஒரு விடியற் காலை நேரம். தோட்டத்தில் வண்ண வண்ணப்பூக்கள் பூத்துக் குலுங்கின. பறவைகள் கீச்சிட்டுக் கொண்டிருந்தன.

இளவரசன் சித்தார்த்தன் தோட்டத்தில் உலாவிக் கொண்டிருந்தான். திடீரென்று பறவைகள் பயந்து அலறும் சத்தம்.



'இந்தப் பறவைகளுக்கு என்ன ஆயிற்று?' சித்தார்த்தன் சுற்றும் முற்றும் பார்த்தான். அப்போது அவன் காலடியில் ஒரு அன்னப் பறவை விழுந்தது. அதன் உடலில் ஒரு அம்பு பாய்ந்திருந்தது. வலியால் அது துடித்துக் கொண்டிருந்தது.



சித்தார்த்தன் அன்னத்தைக் தூக்கினான். அதன் உடலில் பாய்ந்திருந்த அம்பை மெல்ல வெளியே எடுத்தான். காயத்துக்கு மருந்து போட்டான். அதை மடியில் வைத்துக் கொண்டான். பரிவுடன் அதன் உடலை வருடினான். பறவையின் நடுக்கம் குறைந்தது.

சற்று நேரத்தில் சித்தார்த்தனின் சகோதரன் தேவதத்தன் அங்கு ஓடிவந்தான். "பறவையைக் கொடு, அது என்னுடையது," என்றான்.



ஆனால் சித்தார்த்தனோ, "பறவை என்னுடையது. அதை நான்தான் காப்பாற்றினேன்," என்றான். பறவையை அணைத்துக் கொண்டு அரண்மனையை நோக்கி நடந்தான். தேவதத்தன் விடவில்லை. அவனைத் தொடர்ந்து சென்றான்.

இருவரும் அரசரிடம் சென்றனர். தேவதத்தன், "என் பறவையை சித்தார்த்தன் தரமாட்டேன் என்கிறான்," என்று புகார் செய்தான்.

சித்தார்த்தன், "தந்தையே! தேவதத்தன் பறவையின் மேல் அம்பு எய்து அதைக் காயப்படுத்தினான். ஆனால் நான் அதற்கு மருந்து போட்டேன். அதனால் பறவை எனக்குத்தான் சொந்தம்," என்றான்.



தேவதத்தன், "இல்லை அப்பா! நான்தான் முதலில் பறவையைப் பார்த்தேன். அதனால் பறவை என்னுடையது தான்," என்றான்.

அரசர் சற்று நேரம் சிந்தித்தார்.

"தேவதத்தா! நீ பறவையைக் கொல்ல நினைத்தாய். ஆனால் சித்தார்த்தனோ அதைக் காப்பாற்றி இருக்கிறான். எனவே பறவை சித்தார்த்தனுக்குத்தான் சொந்தம்," என்று முடிவு கூறினார்.




P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi
Rajalakshmi Srinivasan Memorial Foundation, Chennai
Artist : Uma Krishnaswamy

# ஒட்டகமும் நரியும்



"ஒட்டகம் அண்ணா! அதோ ஆற்றின் அந்தக் கரையில் இருக்கும் வயலைப் பார்! அங்கே ஏராளமான வெள்ளரிப் பழங்கள் கிடைக்கும். இன்று நாம் அங்கே போகலாமா?" என்று நரி ஆவலுடன் கேட்டது.

"ஓ! தாராளமாக!" என்று ஒட்டகம் நரியைத் தன் முதுகின் மேல் ஏற்றிக் கொண்டது. இரண்டும் ஆற்றைக் கடந்தன. வயலை அடைந்தன. பழங்களைத் தின்னத் தொடங்கின. பழங்கள் மிகவும் சுவையாக இருந்தன.





நரியின் வயிறு சிறியதல்லவா? இரண்டு மூன்று பழங்கள் சாப்பிட்டவுடனேயே அதன் வயிறு நிரம்பிவிட்டது. உற்சாகத்துடன் இங்குமங்கும் ஓடத் தொடங்கியது. ஒட்டகம் சாப்பிட்டுக் கொண்டே இருந்தது.

“அண்ணா! இன்னுமா நீ சாப்பிட்டு முடிக்கவில்லை?” என்றது நரி.

“என் வயிறு பெரியதாயிற்றே! இன்னும் பாதி வயிறுகூட நிரம்பவில்லை. கொஞ்ச நேரம் அமைதியாக இரேன்,” என்றது ஒட்டகம்.

ஆனால் நரியோ, “வயிறு நிறையச் சாப்பிட்டவுடன் என்னால் சும்மா இருக்க முடியாது. வானத்தைப் பார்த்து ஊளையிடுவது என் வழக்கம்,” என்று சொல்லி ஊளையிட ஆரம்பித்தது



சத்தம் கேட்டு அக்கம் பக்கத்தில் இருந்தவர்கள் கையில் கட்டைகளுடன் ஓடி வந்தனர். நரி வேகமாக ஓடித் தப்பிவிட்டது. ஆற்றங்கரையை அடைந்தது.

பாவம் ஒட்டகம்! ஓட முடியாமல் மாட்டிக் கொண்டது. பலமாக அடி வாங்கியது. வலியால் துடித்தபடியே ஆற்றங்கரையை அடைந்தது.

"ஐயோ! அண்ணா! உன்னை இப்படி அடித்து விட்டார்களே! எனக்கு வேதனையாக இருக்கிறது." நரி பரிதாபப்படுவது போல நடித்தது.

"பரவாயில்லை! என்மேல் ஏறிக்கொள்! இங்கிருந்து வேகமாகப் போய்விடலாம்," என்றது ஒட்டகம்.



இரண்டும் ஆற்றின் நடுப்பகுதியை அடைந்தன. ஒட்டகம் திடீரென்று நின்றது. இப்படியும் அப்படியும் சாய்ந்தாடத் தொடங்கியது.

நரி அதிர்ந்தது. "ஐயோ அண்ணா! ஏன் இப்படி ஆடுகிறாய்? நான் ஆற்றில் விழுந்து விடுவேனே!" என்று கேட்டது.

"ஒன்றுமில்லை தம்பி! வயிறு நிறையச் சாப்பிட்டதும் இப்படித் தண்ணீரில் ஆடுவது என் வழக்கம். நான் என்ன செய்வது?" என்று கூறி ஒட்டகம் மேலும் சாய்ந்து சாய்ந்து ஆடியது.

பாவம் நரி! தண்ணீரில் விழுந்துவிட்டது.

மூலம் : பஞ்சதந்திரக் கதைகள்





P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : Uma Krishnaswamy

# எப்படிச் சொல்வேன்? 





'பட்'... குச்சி ஒன்று கிளையில் இருந்து ஒடிந்து கீழே விழுந்தது.

விழுந்த குச்சி சும்மா இருந்ததா? இல்லவே இல்லை.



ஊரைச் சுற்றிப் பார்க்கக் கிளம்பியது.

வழியில் ஒரு ஆறு. குச்சி ஆற்று நீரில் மிதந்து சரிந்து விளையாடியது.

யாரோ பாடும் சத்தம். நிமிர்ந்து பார்த்தது. குயில் தான்!



குச்சி பாட்டை ரசித்துக் கேட்டது. குயிலைப் பாராட்ட நினைத்தது. ஆனால் பேச முடியவில்லை!



அருகில் அழகிய ரோஜா! அதைப் பார்த்து, 'நீ எவ்வளவு அழகாக இருக்கிறாய்,' என்று சொல்ல நினைத்தது.

ஆனால் முடியவில்லை. மௌனமாக நடந்தது.



வழியில் தவளை ஒன்று கவிதை எழுதிக் கொண்டிருந்தது. இரண்டு வரிகள் கூறி அதற்கு உதவ நினைத்தது.

ஆனால் தன் எண்ணத்தை வெளியிட முடியவில்லை.



சோர்வுடன் நடைபோட்டது. பின்னால் திரும்பிப் பார்த்தது.

'ஆ! இதென்ன? நான் நடந்து வந்த வழியெல்லாம் கோடு!' குச்சி ஆச்சரியப்பட்டது.



மேலும் மேலும் கோடுகள் வரைந்தது. கோலங்கள் போட்டது. அதற்கு ஒரே மகிழ்ச்சி, பரபரப்பு.

மரம், செடி, கொடி, விலங்குகள், பறவைகள் என்று உற்சாகமாக வரைந்து தள்ளியது.

காட்டில் இதுவரை யாருமே பார்த்திராத ஒரு அற்புதமான காட்சியை வரைந்தது.



குச்சி படங்கள் வரைவதை எல்லா விலங்குகளும் பார்த்து ரசித்தன. மரங்கள் தம் கிளைகளை ஆட்டி ஆமோதித்தன.



பறவைகள் சிறகுகளை அடித்தன. பூக்கள் மலர்ந்து சிரித்தன. பூச்சிகள் ரீங்காரமிட்டன. ஆனால், குச்சி இதையெல்லாம் கவனிக்கவே இல்லை. தன்னை மறந்து வரைந்து கொண்டே இருந்தது.



அப்போது 'பட பட' என்று மழை தூற ஆரம்பித்தது. ஐயோ! குச்சி வரைந்தது எல்லாம் தண்ணீரில் அழிகிறதே!

ஆனால், குச்சி கவலையே படவில்லை. அதற்குதான் வரையத் தெரிந்துவிட்டதே!

இனி எப்போது வேண்டுமானாலும் அது தன் எண்ணங்களை வெளிப்படுத்தலாம். குச்சி ஓடிப்போய் இலைகளுக்கு இடையே நின்று கொண்டது. மழை நிற்பதற்காகக் காத்து இருந்தது.



மூலம் : ஜான்லெக்னர் எழுதிய கிளவர் ஸ்டிக்





P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : Uma Krishnaswamy

# பழமே வேண்டாம்!



ஒரு அழகிய தர்பூசணித் தோட்டம். அதில் ஒரு குட்டிக் குரங்கு புகுந்தது. ஒரு தர்பூசணிப் பழத்தின் தோலைக் கடித்தது. சீச்சீ! ஒரே கசப்பு! பழத்தைத் தூக்கி எறிந்தது.

அருகே இருந்த ஆடு, "தர்பூசணியின் உள்பாகத்தைச் சாப்பிட வேண்டும். தோலை அல்ல!" என்று கூறியது.

"எனக்கு எல்லாம் தெரியும்! நீ ஒன்றும் சொல்ல வேண்டாம்!" என்று கூறிக் குட்டிக் குரங்கு ஓடி விட்டது.



அடுத்தபடியாகக் குரங்கு ஒரு கிர்ணிப்பழத் தோட்டத்தில் புகுந்தது. ஒரு பழத்தை உடைத்து உள்ளே இருந்த விதைகளைத் தின்றது.

அருகில் இருந்த கழுதை, "இப்படியில்லை. கிர்ணிப் பழத்தின் விதையைச் சாப்பிடக்கூடாது. தோலின் அடியில் இருக்கும் மிருதுவான பகுதியைத்தான் சாப்பிட வேண்டும்," என்று கூறியது.

"எல்லாம் எனக்குத் தெரியும்!" என்று கூறிக் கொண்டே குட்டிக் குரங்கு ஓடி விட்டது.





ஒரு பாதாம் மரத்தில் ஏறிப் பாதாம் காயைக் கடித்தது. அங்கிருந்த மரங்கொத்தி, "பாதாம் கொட்டையை உடைத்து உள்ளிருக்கும் பருப்பைத்தான் சாப்பிட வேண்டும்," என்றது.

மரங்கொத்தி சொல்லி முடிப்பதற்குள், கொட்டையைக் கடித்துவிட்டது குரங்கு! "ஐயோ, என் பல் உடைந்து விட்டதே!" என்று அலறிக் கொண்டே குட்டிக்கரணம் போட்டது.

அடுத்து குட்டிக் குரங்கு பேரிக்காய் மரத்தில் ஏறியது. ஒரு பேரிக்காயைப் பறித்து மரத்தில் அடித்து உடைத்தது. உள்ளே இருக்கும் விதையைக் கடித்தது. 'சீ! ஒரே கசப்பு!' விதையைத் துப்பியது.



அப்போது அங்கு வந்த மரங்கொத்தி, "பழம் நன்றாக இருக்கிறதா?" என்று விசாரித்தது.

குட்டிக் குரங்குக்கு வந்ததே கோபம்! கையில் இருந்த காயை வீசி எறிந்தது. "இனி பழங்களைச் சாப்பிடவே மாட்டேன்," என்றது.

மூலம் : சீன நாட்டுக் கதை







P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : Uma Krishnaswamy

# கண்டுபிடிப்போம் வா!





ஓட்டமாய் ஓடும்
உருண்டு உருண்டு ஓடும்
பள்ளத்தைக் கண்டால்
பாய்ந்து பாய்ந்து ஓடும் - *அது என்ன?*

ஏழை படுக்கும் பஞ்சணையை
எடுத்துச் சுருட்ட ஆளில்லை - *அது என்ன?*



உயிர் இன்றி ஊரெல்லாம் திரியும்
உருவம் இன்றி ஓடித் திரியும்
கைகள் இன்றித் தொட்டு விளையாடும்
கால்கள் இன்றிக் கண்ட இடமெல்லாம்
புகுந்து வரும் - *அது என்ன?*

தாளைக் கொடுத்தால் தின்பான்
தண்ணீர் கொடுத்தால் மடிவான் - *அது என்ன?*

எனக்கு மேல் ஒரு கூரை
நான் கிட்டப் போனால்
அது எட்டப் போகும் - *அது என்ன?*





விண்ணைச் சிரிக்கச் செய்வாள் - பார்த்தால்
கண்ணைப் பறிக்கச் செய்வாள் - *அது என்ன?*

சரசரவென்று அழுதுகொண்டே விழுவான்
கலகலவென்று பூமியைச் சிரிக்க வைப்பான்

- *அது என்ன?*



வெள்ளையாய் இருப்பேன்
கருப்பாய் மாறுவேன்
என்னையும் அறியாமல்
தண்ணீராய்ப் பொழிவேன் - *நான் யார்?*

எழுந்து விழுந்து தாவிடும்
இரவும் பகலும் இரைந்திடும்
எண்ணில்லாத உயிர்களை
இதமாய் வயிற்றில் அடக்கிடும்
கனத்த பொருளை விழுங்கிவிடும்
கட்டையைக் கொடுத்தால் உமிழ்ந்திடும்

- *அது என்ன?*





மனிதன் போடாத பந்தலிலே
மலர்ந்து கிடக்குது மல்லிகைப்பூ - *அது என்ன?*

ஏழு வண்ணத்தில் வில்லாம்
எட்டாத உயரத்தில் வில்லாம் - *அது என்ன?*

இவனின்றி பூமி இயங்காது
இவனின்றிப் பயிர்கள் விளையாது
இவனின்றி மழையும் பெய்யாது
இவனின்றி உறக்கம் கலையாது - *யார் அவன்?*

காலையில் ஒளிவான்
இரவில் வெளிவருவான் - *அவன் யார்?*

*காற்று, நெருப்பு, பூமி, தண்ணீர், வானம்,*
*சூரியன், மின்னல், நிலா, நட்சத்திரம்,*
*மழை, மேகம், வானவில், கடல்*



அக்காள் தங்கை உறவுண்டு
அண்டை அண்டை வீடுண்டு
கிட்ட கிட்ட வந்தாலும்
தொட்டுக்கொள்ள முடியாது - *அது என்ன?*

சொன்னதைக் கேட்பான்
சொல்லச் சொல்லக் கேட்பான்
கேட்டதைத் திரும்பச் சொல்லமாட்டான் - *அவன் யார்?*

இரண்டு பக்கம் பள்ளம்
இடையிலே பாலம் - *அது என்ன?*

உடலுக்கு ஒரு போர்வை
பாதுகாக்க ஒரு கவசம்
தொட்டால் தெரிந்து கொள்ளும் - சூடு
பட்டால் பதறிவிடும் - *அது என்ன?*

வீட்டுக்குள்ளே இருப்பான்
விந்தையாகப் பேசுவான்
வந்தவரை வா என்பான்
வாசல் தாண்டி வரமாட்டான் - *அவன் யார்?*

காது, மூக்கு, கண், நாக்கு, தோல்






P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi
Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : Uma Krishnaswamy

# எலி ஊர்வலம்



எலிகளைப் பிடிக்கப் பூனை ஒரு புதிய திட்டம் தீட்டியது.

ஒருநாள் பூனை எலிகளிடம், "இத்தனை காலமாக நான் உங்களுக்குத் தொல்லை கொடுத்துவிட்டேன். இனிமேல் உங்களை நிம்மதியாக வாழவிட ஆசைப்படுகிறேன். நீங்கள் காலையிலும் மாலையிலும் என்முன் வாருங்கள். வரிசையாக வணக்கம் கூறிச் செல்லுங்கள். அது போதும்," என்றது. எலிகளும் மகிழ்ச்சியுடன் ஒப்புக் கொண்டன.

பூனை தினமும் ஒரு சிம்மாசனத்தில் அமர்ந்து கொள்ளும். எலிகள் ஒன்றன் பின் ஒன்றாக வரிசையில் வந்து வணக்கம் கூறி நகர்ந்து செல்லும். கடைசியாக வரும் எலியைப் பூனை கவ்விப் பிடித்துக் கொள்ளும். இது மற்ற எலிகளுக்குத் தெரியாது.



இந்த எலிக் கூட்டத்தில் அம்போ - சம்போ என்ற இரண்டு புத்திசாலி எலிகள் இருந்தன. எலிகளின் எண்ணிக்கை குறைவதை அவை கண்டு பிடித்துவிட்டன.

இரண்டும் ஒரு திட்டம் தீட்டின. அம்போ வரிசையில் முதலாவதாகவும், சம்போ வரிசையில் கடைசியாகவும் நிற்க ஏற்பாடு செய்தன.



அம்போ முன்னால் நின்றுகொண்டு "சம்போ! நீ எங்கு இருக்கிறாய்?" என்று கூவும். உடனே சம்போ, "அம்போ! நான் இங்குதான் இருக்கிறேன்," என்று பின்னாலிருந்து கூவும். வரிசையில் நகரும் போது அடிக்கடி இப்படி ஒன்றுக்கு ஒன்று குரல் கொடுத்துக் கொண்டன.



பூனையால் ஒன்றும் செய்ய முடியவில்லை. கடைசியில் வரும் சம்போவைத் தின்றுவிட்டால் சூழ்ச்சி தெரிந்துவிடுமே! அன்று பூனை பட்டினி. தூங்கவும் இல்லை. 'இன்று நடந்தது தற்செயலாக இருந்திருக்கலாம். நாளை எப்படியும் கடைசி எலியைப் பிடித்து விடலாம்,' என்று எண்ணியது.

மறுநாள் சம்போ வரிசையின் முதலாவதாகவும், அம்போ கடைசியிலும் நின்று கொண்டன. ஒருவருக்கு ஒருவர் குரல் கொடுத்துக் கொண்டே நகர்ந்தன. பூனையால் அன்றும் எலிகளைப் பிடிக்க முடியவில்லை.

'இன்னும் ஒரு நாள் பொறுத்துப் பார்ப்போம்,' என்று பூனை தன் கோபத்தை அடக்கிக் கொண்டது.



அன்று இரவு அம்போவும் சம்போவும் தங்கள் கூட்டத்தினரை எச்சரித்தன. "பூனை முகத்தில் சிறிது கோபம் தெரியும் போதே ஓட்டம் பிடிக்க வேண்டும்," என்று யோசனை கூறின.

மறுநாள் எலிகளின் ஊர்வலம் தொடங்கியது. வழக்கம் போல "சம்போ நீ எங்கிருக்கிறாய்?" என்று குரல் கொடுத்தது அம்போ.



அவ்வளவுதான்! பூனையால் பொறுக்க முடியவில்லை! எலிகளின் நடுவே பாய்ந்தது.

எலிகள்தான் இதற்குத் தயாராக இருந்தனவே! மாட்டிக் கொள்ளுமா? மின்னல் வேகத்தில் ஓடி மறைந்தன.

மூலம் : திபெத்தியக் கதை










P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : Uma Krishnaswamy

# காலித் தொட்டி

சீன நாட்டில் பிங் என்ற ஒரு சிறுவன் இருந்தான். அவனுக்குப் பூக்கள் மிகவும் பிடிக்கும். அவன் எந்தச் செடியை நட்டாலும், அது செழித்து வளரும். பூத்துக் குலுங்கும். அந்த நாட்டு அரசருக்கும் பூக்கள் என்றால் உயிர். பூந்தோட்ட வேலையில் தானே ஈடுபடுவார். நாட்டில் எங்கு பார்த்தாலும் பூக்களின் மணம்.

ஒரு நாள் அரசர், தன் அமைச்சரிடம், "எனக்கு வயதாகிவிட்டது. அடுத்த அரசரைத் தேர்ந்தெடுக்க வேண்டும். நாட்டில் இருக்கும் சிறுவர் சிறுமியரை அரண்மனைக்கு வரச் சொல்லுங்கள்," என்றார்.

குழந்தைகளும் வந்தனர். அரசர், "குழந்தைகளே! நான் உங்களுக்குச் சிறந்த பூ விதைகளைத் தருகிறேன். இவற்றைக் கொண்டு யார் மிக அழகான பூச்செடியை வளர்க்கிறீர்களோ, அவரே இந்த நாட்டின் அடுத்த அரசர்," என்று கூறினார். விதைகளையும் கொடுத்தார்.



சிறுவன் பிங்கும் மகிழ்ச்சியோடு விதையைப் பெற்றுச் சென்றான். தொட்டியில் நட்டான். தன் செடியில்தான் மிக அழகான பூக்கள் பூக்கும் என்று நம்பினான். தினமும் தண்ணீர் ஊற்றினான். எப்போது செடி துளிர்விடும் என்று ஆவலுடன் காத்திருந்தான்.



நாட்கள் நகர்ந்தன. ஆனால் தொட்டியில் விதை முளைக்கவில்லை. பிங்குக்கு ஒரே கவலை. மண்ணை மாற்றிப் பெரிய தொட்டியில் வைத்தான். மேலும் இரண்டு மாதங்கள் ஓடிவிட்டன. பெரிய தொட்டியிலும் செடி துளிர் விடவில்லை. பிங் காத்துக் கொண்டே இருந்தான். வருடமும் முடிந்து விட்டது.



அரண்மனை செல்ல வேண்டிய நாளும் வந்தது. குழந்தைகள் புத்தாடை உடுத்தினர். வண்ண வண்ணப் பூச்செடிகளுடன் அரண்மனைக்குச் சென்று கொண்டு இருந்தனர்.







ஆனால் பிங் மனமுடைந்து இருந்தான். ‘என்னால் மட்டும் ஏன் செடி வளர்க்க முடியவில்லை? என் காலித் தொட்டியைப் பார்த்து எல்லோரும் கேலி செய்வார்களே!’ என்று வருந்தினான்.



பிங்கின் அப்பா, “நீ எப்போதுமே மிகச் சிறந்த பூச்செடிகளை வளர்த்திருக்கிறாய். இந்த முறையும் நீ முழு முயற்சி செய்தாய். அது போதும்! அரசரிடம் போகத் தயங்காதே!” என்று கூறினார்.

அரசர் குழந்தைகள் கொண்டு வந்த பூச்செடிகளை ஒவ்வொன்றாகப் பார்த்தார். பிங்கிடம் வந்தார். “நீ ஏன் காலித் தொட்டியைக் கொண்டு வந்திருக்கிறாய்?” என்று கேட்டார்.



பிங் அழத் தொடங்கினான். “நீங்கள் கொடுத்த விதையை நட்டு நான் தினமும் தண்ணீர் ஊற்றினேன். ஆனால் அது முளைக்கவில்லை. மண்ணை மாற்றிப் பார்த்தேன். அப்போதும் செடி வளரவில்லை,” என்றான்.







அரசர் முகத்தில் புன்சிரிப்பு. எல்லாரையும் பார்த்து, "இவன்தான் இந்த நாட்டுக்கு அரசனாகும் தகுதி உடையவன்," என்றார். எல்லாருக்கும் ஒரே வியப்பு!

அரசர், "மற்றவர்களுக்கு விதைகள் எங்கிருந்து கிடைத்தன என்று எனக்குத் தெரியாது. நான் கொடுத்த விதைகள் அனைத்தும் வேக வைத்தவை. அவற்றிலிருந்து செடிகள் வளர்ந்திருக்க முடியாது. காலித் தொட்டியுடன் என் முன் வந்திருக்கும் பிங்கின் நேர்மையைப் பாராட்டுகிறேன்," என்றார்.

மூலம் : சீன நாட்டுக்கதை




P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : S. P. Raju

# நிலாவும் தையற்காரரும் ⑮



அது குளிர்காலம். அன்று தையற்காரர் தன் கடையைச் சீக்கிரமே மூடிவிட்டார். எதையோ யோசித்துக் கொண்டே நடந்தார். அப்போது, "எனக்கு மிகவும் குளிராக இருக்கிறது. இரவில் நான் வெகு தூரம் பயணம் செய்ய வேண்டும். எனக்கு ஒரு கம்பளிச் சட்டை தைத்துத் தரமுடியுமா?" என்றது ஒரு மெல்லிய குரல்.

'குரல் எங்கிருந்து வருகிறது?' சுற்றும் முற்றும் பார்த்தார் தையற்காரர்.



"இதோ! நான் இங்கே இருக்கிறேன்!" பேசியது வேறு யாருமில்லை. நிலாதான்! அது நன்கு சுருங்கி ஒரு பிறையாகக் காணப்பட்டது. 'குளிரினால் சுருங்கி இருக்கிறது போலும்,' என்று நினைத்தார் தையற்காரர். சில நாட்களில் சட்டை தைத்துத் தருவதாக நிலாவுக்கு வாக்குக் கொடுத்தார்.

மிச்சம் மீதமுள்ள துணிகளைத் தேடி ஒரு பிறைவடிவச் சட்டை தைத்தார். நிலாவிடம் எடுத்துச் சென்றார்.

"மிகவும் அழகாக இருக்கிறதே," என்றபடி நிலா அதைப்போட்டுக் கொள்ள முயன்றது. ம்ஹூம்! நிலாவால் அதில் நுழையக் கூட முடியவில்லை.

"எனக்கு முன்பே தெரியும். நீ என்னுடைய அளவை எடுக்கவே இல்லை. இந்தச் சட்டை எப்படி எனக்குச் சரியாக இருக்கும்?" சிணுங்கியது நிலா.

"உன்னுடைய அளவை என்னால் எப்படி எடுக்க முடியும்?" என்றார் தையற்காரர்.

அவர்கள் இருவரையும் பார்த்துக் கொண்டிருந்த பருந்து, "தையற்காரரே! அளவு நாடாவை என்னிடம் கொடுங்கள். நிலாவை நான் அளந்து வருகிறேன்," என்றது.

பருந்து நிலாவைச் சுற்றிப் பறந்தது. கவனமாக அளவு எடுத்தது. தையற்காரரிடம் கொடுத்தது.

அது பண்டிகைக் காலம். தையற்காரரால் நிலாவின் சட்டையை ஒரு வாரத்திற்குப் பிறகுதான் தைக்க முடிந்தது. சட்டையில் விதவிதமான வேலைப் பாடுகளைப் பார்த்ததும் நிலாவுக்கு ஒரே மகிழ்ச்சி. சட்டையைப் போட்டுக் கொள்ளப் பரபரத்தது.



"நீயே பார்த்துக்கொள்! தின்று தின்று நீ எவ்வளவு பருத்துவிட்டாய்! இந்தச் சட்டை உனக்கு ஒருபோதும் சரியாக இருக்காது!" என்று கோபத்துடன் கத்தினார் தையற்காரர்.



"தப்பெல்லாம் உன்னுடையதுதான்! சட்டை தைக்க நீ ஏன் இவ்வளவு நாள் எடுத்துக் கொண்டாய்?" என்றது நிலா. பிறகு "தயவு செய்து இன்னொரு முறை தைத்துத் தாயேன்!" என்று கெஞ்சியது.



“இதைவிட இன்னும் பருத்துவிடமாட்டாயே!” என்று கூறியபடி தையற்காரர் சென்றுவிட்டார். நீலம், அரக்கு, கறுப்பு, மஞ்சள் என்று பல வண்ணத் துணித்துண்டுகளைச் சேர்த்து ஒரு பெரிய சட்டை தைப்பதற்குச் சிலநாட்கள் பிடித்தன. சட்டை பார்க்க அற்புதமாக இருந்தது.



தையற்காரர் அதை நிலாவிடம் எடுத்துச் சென்றார். ஆனால் நிலா இப்போது வட்டமாக இல்லையே! சட்டை மிகவும் பெரியதாக இருந்தது.

“தொள தொளவென்று இருக்கும் இந்தச் சட்டை என்னைக் குளிரிலிருந்து எப்படிப் பாதுகாக்கும்?” என்று நிலா புலம்பியது.

“எனக்கு எப்படித் தெரியும்?” கோபமாகக் கத்தினார் தையற்காரர். ‘மிகச்சிறந்த தையற்காரர்’ என்று அவர் பெற்ற பெயரெல்லாம் பாழாகி விட்டதே!

பாவம் தையற்காரர்! நிலாவைப் பார்க்கும் போதெல்லாம் ‘நறநற’ வென்று பல்லைக்கடிக்கிறார்!

**Adaptation of a Russian Tale**
**by Nirupama Raghavan**




P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : S. P. Raju

# மாய மாம்பழம்

நீண்ட காலத்திற்கு முன்னால் நடந்த சம்பவம் இது. ஒரு காட்டில் ஒரு பெரிய மாமரம் இருந்தது. அதன் உச்சிக் கிளையில் ஒரு பழுத்த மாம்பழம் இருந்தது. சாதாரணமான மாம்பழம் அல்ல அது. ஒரு மாய மாம்பழம்!

ஒரு நாள் பலத்த காற்று வீசியது. மாமரத்தை உலுக்கியது. மாயமாம்பழம் தொப்பென்று தரையில் விழுந்தது. நல்ல காலம்! அதற்குக் காயம் ஏதும் படவில்லை.

மாயமாம்பழத்துக்கு ஒரே மகிழ்ச்சி. உலகைச் சுற்றிப் பார்க்க ஒரு வாய்ப்புக் கிடைத்துவிட்டதே!

அது உருண்டு உருண்டு ஊருக்குள் நுழைந்தது.

முதன் முதலில் ஒரு ஆடு அதை பார்த்தது.



"நில்! நில்! நான் உன்னைச் சாப்பிடப்போகிறேன்" என்றது ஆடு.

மாயமாம்பழம் உரக்கச் சிரித்தது. இந்தப்பாட்டைப் பாடியது.

மாய மாம்பழம் நான்தானே!
ஊரைச் சுற்றிப் பார்ப்பேனே!
உன் கையில் அகப்படமாட்டேனே!
தெரிந்து கொள் இதை நீ தானே!!

என்று பாடியது.



மாயமாம்பழம் வேகமாக உருண்டு ஓடியது. ஆடு அதைத் துரத்திக் கொண்டே ஓடியது.

வழியில் ஒரு சிறுவன் பட்டம் விட்டுக் கொண்டிருந்தான். அவன் மாம்பழத்தைப் பார்த்து

"நில்! நில்! நான் உன்னைச் சாப்பிட வேண்டும்" என்றான்.

மீண்டும் மாம்பழம் சிரித்தபடி -

மாய மாம்பழம் நான்தானே!
ஊரைச் சுற்றிப் பார்ப்பேனே!
உன் கையில் சிக்கமாட்டேனே!
தெரிந்து கொள் இதை நீ தானே!!

என்று பாடியது.

மாம்பழம் இன்னும் வேகமாக உருண்டு ஓடி ஒரு தோட்டத்தில் நுழைந்தது. ஆடும், சிறுவனும் மாம்பழத்தைப் பின்தொடர்ந்து ஓடினார்கள்.



அப்பொழுது தோட்டத்தில் சில சிறுமிகள் விளையாடிக் கொண்டிருந்தனர்.

மாம்பழம் உருண்டு ஓடுவதைப் பார்த்துக் கூச்சலிட்டனர்.

"அட, நில்! நில்! நாங்கள் உன்னைச் சாப்பிட போகிறோம்" என்றனர்.

ஆனால் மாம்பழமோ யார் கையிலும் சிக்கவில்லை.

வெகு தூரம் சென்று தன் பாட்டைப் பாடியது -



மாய மாம்பழம் நான்தானே!
ஊரைச் சுற்றிப் பார்ப்பேனே!
உன் கையில் சிக்கமாட்டேனே!
தெரிந்து கொள் இதை நீ தானே!!

ஆடு, சிறுவன், சிறுமியர் எல்லோரும் மாம்பழத்தின் பின்னே ஓடினர். ஆனால் யாருக்கும் மாம்பழம் கிடைக்கவில்லை.

மாம்பழம் களைத்து விட்டது. உயரமான புற்களுக்கு இடையே ஒளிந்து கொண்டது. சிறிது நேரம் தேடிப்பார்த்து விட்டு எல்லோரும் திரும்பிப் போய்விட்டனர். களைப்பில் மாம்பழம் தூங்கிவிட்டது.

பல மாதங்கள் தூங்கிக் கொண்டே இருந்தது. திடீரென ஒரு நாள் தூக்கம் கலைந்தது. சூரியனது கதிர்கள் தன் மேல் விழுவதை மாம்பழம் உணர்ந்தது. அது மாறியிருந்தது. அதன் உள்ளிருந்து சிறு மாங்கன்று முளைத்து வெளிவந்து கொண்டிருந்தது.

ஆம்! இப்போது மாய மாம்பழம் ஒரு மாமரமாக வளர ஆரம்பித்து விட்டது.

மூலம் : பப்புவா கினி நாட்டுக்கதை







P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : Uma Krishnaswamy

# குருவி தந்த பரிசு





குபானும் சம்பாவும் அடுத்தடுத்த வீட்டில் வசித்து வந்தனர். குபான் பேராசைக்காரன். அடுத்தவரைப் பார்த்துப் பொறாமைப் படுவான். சம்பா இரக்க குணம் உடையவன். எல்லோரிடமும் அன்பாய்ப் பழகுவான்.

சம்பாவின் வீட்டின் முன் ஒரு மரம் இருந்தது. அதில் குருவிக் கூடு ஒன்று இருந்தது. ஒரு நாள் கூட்டிலிருந்து குருவிக் குஞ்சு ஒன்று 'தொப்' என்று கீழே விழுந்தது. அதன் கால் முறிந்தது.

சம்பா அதைப் பரிவுடன் எடுத்தான். அதன் காலுக்கு மருந்து போட்டான். கட்டுக் கட்டினான். பத்திரமாகக் கூட்டில் விட்டான்.

சில நாள்கள் சென்றன. குருவிக் குஞ்சு நன்றாகப் பறக்க ஆரம்பித்தது. குருவிக் குஞ்சு சம்பாவிடம், "நீ எனக்குப் உதவி செய்தாய். இதோ இந்தச் சோளத்தைப் பரிசாகத் தருகிறேன். இதை உன் தோட்டத்தில் பயிராக்கு," என்று கூறி மறைந்துவிட்டது.

சம்பா சோளத்தைத் தோட்டத்தில் விதைத்தான். தினமும் தண்ணீர் விட்டான். பயிர் செழித்து வளர்ந்தது. நாள்கள் பல சென்றன. கதிர் முற்றியது. என்ன ஆச்சரியம்! கதிர்களில் விலை உயர்ந்த கற்கள் ஜொலித்தன! சம்பா அவற்றை விற்றான். பெரிய பணக்காரன் ஆனான்.

குபானுக்கு ஒரே ஆச்சரியம். 'சம்பாவுக்கு இவ்வளவு பணம் எப்படிக் கிடைத்தது?' சம்பாவின் வீட்டுக்குச் சென்று விசாரித்தான். அவனும் நடந்ததை எல்லாம் மறைக்காமல் சொன்னான்.

'நானும் ஏன் இதைப் போல விலை உயர்ந்த கற்களைப் பெறக் கூடாது?' என்று குபான் யோசித்தான்.

தன் வீட்டுத் தோட்டத்தில் இருந்த குருவிக் கூட்டைப் பார்த்தான். ஒரு நீண்ட குச்சியை எடுத்துக் கூட்டைக் கலைத்தான். குருவிக் குஞ்சு ஒன்று 'தொப்' என்று கீழே விழுந்தது. அதன் கால் முறிந்தது.





குபான் அதை எடுத்து அதன் காலுக்கு மருந்து போட்டான். கட்டுக் கட்டினான். அதைக் கூட்டில் விட்டான்.

சில நாள்கள் சென்றன. குருவிக் குஞ்சு குபானிடம் ஒரு தானியத்தைக் கொடுத்தது. "இதோ! இதைப் பயிரிடு. என்ன விளைகிறது என்று பார்!" என்று கூறி மறைந்து விட்டது.

பயிர் மிக வேகமாக வளர்ந்தது. கதிர் எப்போது தோன்றும் என்று குபான் காத்திருந்தான். ஒரு நாள் தோட்டத்திற்குச் சென்றான். என்ன ஆச்சரியம்! அங்கே செடி இல்லை. கையில் வாளுடன் ஒரு பயங்கரமான மனித உருவம்!

மிரண்டு போன குபான் ஓட்டம் பிடித்தான். அவனைத் துரத்திக் கொண்டே வீட்டுக்குள் வந்தது அந்த உருவம். வீட்டிலிருந்த நகைகள், பணம் எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டு மறைந்துவிட்டது.

பாவம் குபான்!

மூலம் : திபெத்தியக் கதை





P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : Uma Krishnaswamy

# பொறுப்பான பொன்னுமணி





பொன்னுமணி அடிக்கடி தன் அத்தை வீட்டுக்குப் போவான். அத்தையும் அவனிடம் ஏதாவது கொடுத்து அனுப்புவாள்.

ஒருநாள் அத்தை அவனிடம் பிஸ்கட் கொடுத்தாள். பொன்னுமணி அதைக் கையில் இறுக்கிப் பிடித்தபடி நடந்தான். வீடு வந்து சேர்ந்தான். பிஸ்கட் எல்லாம் பொடியாகி விட்டது.



அம்மா, "பிஸ்கட்டை இப்படியா கொண்டு வருவது? ஒரு காகிதத்தில் கட்டித் தொப்பிக்குள் வைத்துக் கொண்டு வா. அப்போதுதான் வழியில் குரங்குகள் தொல்லை செய்யாது," என்றாள்.

அடுத்த வாரம் பொன்னுமணி மீண்டும் அத்தை வீட்டுக்குப் போனான். அத்தை வெண்ணெய் கொடுத்தாள். பொன்னுமணி அதைக் காகிதத்தில் மடித்துத் தலையில் வைத்தான். அதை மூடித் தொப்பியும் போட்டுக் கொண்டான்.



அன்று வெயில் கடுமையாக இருந்தது. வெண்ணெய் உருக ஆரம்பித்தது. வீட்டை அடைந்த போது அவன் முகம், சட்டை எல்லாம் வெண்ணெய்!

“அடக் கடவுளே! வெண்ணெயை இப்படியா கொண்டு வருவது? குளிர்ந்த நீரில் போட்டுக் கொண்டுவர வேண்டும்,” என்றாள் அம்மா.

மறு வாரம் அத்தை ஒரு நாய்க்குட்டி கொடுத்தாள். பொன்னுமணி அதைக் குளிர்ந்த நீரில் போட்டு வீட்டுக்குக் கொண்டுவந்தான்.

அம்மா அதிர்ந்தாள். "ஐயோ பாவம்! இந்த நாய்க்குட்டியை இப்படிச் செய்து விட்டாயே! அடுத்த முறை ஒரு கயிறை எடுத்துக் கொள். ஒரு முனையை கழுத்தில் கட்டி மறுமுனையை உன் கையில் பிடித்து இழுத்துக் கொண்டுவா!" என்றாள்.

விடுமுறையில் பொன்னுமணி அத்தைவீடு சென்றான். இந்த முறை அத்தை ரொட்டி கொடுத்தாள். பொன்னுமணி ரொட்டியைக் கயிற்றில் கட்டினான். கயிறை இழுத்துக் கொண்டே வீடு வந்து சேர்ந்தான். அதைப் பார்த்த அம்மாவுக்கு மயக்கமே வந்துவிட்டது.



மறு வாரம் அம்மா, "நீ அத்தை வீட்டுக்குப் போகவேண்டாம். இந்த முறை நானே போய் அத்தையைப் பார்த்து வருகிறேன். இங்கே வற்றல் காய வைத்திருக்கிறேன். பார்த்து நட!" என்று சொல்லிவிட்டு அத்தை வீட்டுக்குப் போய்விட்டாள்.

பொன்னுமணி வற்றல்களை உற்றுப்பார்த்தான். மிக ஜாக்கிரதையாக ஒவ்வொரு வற்றல் மீதும் காலை வைத்து நடந்தான்.

அவன் அம்மா திரும்பி வந்தபோது என்ன நடந்திருக்கும் என்பது யாருக்குத் தெரியும்?

தழுவல் : ஐரோப்பியக் கதை





P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : S. P. Raju

# தையற்சிட்டு





தையற்சிட்டு ஒன்று இலந்தை மரத்தில் உட்கார்ந்து பழங்களைச் சாப்பிட்டுக் கொண்டிருந்தது. மரத்தில் இருந்த முள்மீது உராய்ந்தது. 'ஆ!' சிட்டுக்கு முள் தைத்துவிட்டது.

"இந்த முள்ளை எடுங்களேன்," என்று அருகில் இருந்த மனிதனைக் கேட்டது. "போ! போ! நான் யார் தெரியுமா? அரசனின் பணியாளன்! அரசனுக்கு மட்டும்தான் வேலை செய்வேன்," என்று அவன் சிட்டை விரட்டினான்.

சிட்டு அரசனிடம் சென்று, "உன் பணியாளன் எனக்கு உதவி செய்யவில்லை. அவனுக்குத் தண்டனை கொடு," என்று புகார் செய்தது. அதைக் கேட்ட அரசன் சிரித்துக் கொண்டே இருந்தான். பதிலே சொல்லவில்லை.

சிட்டு எலியிடம் பறந்து சென்றது. "எலியே! எலியே! அரசன் தூங்கும்போது அவனை மெல்லக் கடித்துவிடு!" என்றது.

எலி, "இது என்னால் முடியாது!" என்று மறுத்துவிட்டது.



சிட்டு அங்கிருந்து கோபமாகப் புறப்பட்டுப் பூனையிடம் சென்றது. "பூனையே! பூனையே! எலியைப் பிடித்துத் தின்றுவிடு," என்றது.

பூனை, "எனக்குத் தூக்கமாக வருகிறது. இப்போது நான் எலியைப் பிடிக்கமாட்டேன்," என்று சொல்லி அனுப்பிவிட்டது.



சிட்டு 'விர்'ரென்று பறந்து ஒரு கோலிடம் சென்றது. "கோலே, கோலே! எனக்காக நீ பூனையை அடித்து விட்டுவா!" என்றது.



கோல், "பூனையை நான் ஏன் அடிக்க வேண்டும்? அது என்னை ஒன்றும் செய்ய வில்லையே!" என்றது.

ஏமாற்றமடைந்த சிட்டு நெருப்பைப் பார்த்து, "நீ கோலை எரித்து விடு," என்றது.



"இன்று நான் நிறையப் பொருள்களை எரித்துவிட்டேன். களைப்பாக இருக்கிறது. என்னை மன்னித்துக்கொள்," என்று நெருப்பு மறுத்துவிட்டது.

ஆத்திரம் அடைந்த சிட்டு, ஆற்றை நோக்கிப் பறந்தது. "ஆறே! ஆறே! நீ வந்து நெருப்பை அணைத்துவிடு," என்றது. ஆறு அதைக் காதில் வாங்கிக் கொள்ளாமல் அமைதியாக ஓடிக் கொண்டே இருந்தது.

சிட்டு யானையிடம் சென்று, "யானையே! யானையே! ஆற்று முழுவதையும் குடித்துவிடு," என்றது. "ஐயோ! அத்தனை நீரையு குடித்தால் என் வயிறு வெடித்துவிடுமே!" என்றது யானை.

சிட்டு சொல்வதை யாருமே சட்டை செய்யவில்லை. வேறு வழியின்றிச் சிட்டு கொசுக்களிடம் சென்றது. "நீங்கள் எல்லோரும போய் யானையைக் கடித்துவிடுங்கள்," என்றது. கொசுக்கள் உடே ஒப்புக் கொண்டன.

நாட்டில் இருந்த எல்லாக் கொசுக்களும் திரண்டு வந்தன. ஒரு பெரிய கொசுப்படை உருவானது. 'நொய்ங் நொய்ங்...' என்று கத்திக் கொண்டே யானையைச் சூழ்ந்து கொண்டது. எல்லோரும் மிரண்டு போயினர்.

*"ஆற்று நீரைக் குடித்துவிடுகிறேன்,"* என்றது யானை.

*"தீயை அணைத்துவிடுகிறேன்,"* என்றது ஆற்றுநீர்.

*"கோலை எரித்துவிடுகிறேன்,"* என்றது தீ.

*"பூனையை அடித்துவிடுகிறேன்,"* என்றது கோல்.

*"எலியைத் தின்றுவிடுகிறேன்,"* என்றது பூனை.

*"அரசனைக் கடித்துவிடுகிறேன்,"* என்றது எலி.



“பணியாளனைத் தண்டித்து விடுகிறேன்,” என்றான் அரசன்.

நடு நடுங்கிய பணியாளன் முள்ளை எடுத்து விட்டான். சிட்டு மகிழ்ச்சியுடன் பாடிக் கொண்டே பறந்தது.

மூலம் : வங்காள நாட்டுப்புறக்கதை





P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : Uma Krishnaswamy

# நண்பனைக் கண்டுபிடி





*அணில்* : பாடிக்கொண்டே எங்கே போகிறாய் இந்தக் காலை வேளையில்?

*முயல்* : என் புதிய நண்பனுடன் விளையாடப் போகிறேன்.



*அணில்* : யார் அந்தப் புதிய நண்பன்?

*முயல்* : நீயே கண்டுபிடி! என் நண்பனுக்கு நான்கு கால்கள்.

*அணில்* : அதோ நிற்கிறதே யானை. அதுதானே உன் நண்பன்.

*முயல்* : இல்லை! என் நண்பனுக்குத் துதிக்கை கிடையாது.





*அணில்* : அப்படியானால் இந்தக் காண்டாமிருகம் தான் உன் நண்பன். அதற்குத் துதிக்கை கிடையாதே!

*முயல்* : இல்லை! இல்லை! என் நண்பனின் முகத்தில் ஒற்றைக்கொம்பு இல்லை.

*அணில்* : ஓ! ஒட்டகம் தான் உன் நண்பன். அதற்கு நான்கு கால்கள் உண்டு. துதிக்கையும் இல்லை. ஒற்றைக்கொம்பும் இல்லை.

*முயல்* : ம்ஹூம்! என் நண்பனுக்கு ஒட்டகத்தைப் போல் முதுகில் திமில் இல்லை.

*அணில்* : அதோ! அந்த வரிக்குதிரைதானே உன் நண்பன்.

*முயல்* : ம்ஹூம்! என் நண்பனின் உடலில் வரிகள் கிடையாது.

*அணில்* : அப்படியானால் உன் நண்பன் கரடியாகத்தான் இருக்கவேண்டும். அதன் உடலில் வரிகள் இல்லையே!

*முயல்* : இல்லவே இல்லை. கரடி போல் என் நண்பனுக்கு அடர்ந்த உரோமம் இல்லை!





*அணில்* : அப்படியா! கொஞ்சம் இரு... உன் நண்பனின் உடலில் புள்ளிகள் இருக்கிறதா?

*முயல்* : ஓ! இருக்கிறதே!

*அணில்* : நிச்சயமாக உன் நண்பன் சிறுத்தைதான்.

*முயல்* : இல்லையே! சிறுத்தைக்கு இருப்பது போலக் கூர்மையான நகங்கள் என் நண்பனுக்கு இல்லை!

*அணில்* : சந்தேகமே இல்லை! உன் நண்பன் புள்ளிமான் தான்?



*முயல்* : இல்லவே இல்லை! என் நண்பனுக்கு நீண்ட கழுத்து உண்டு.

*அணில்* : கண்டுபிடித்துவிட்டேன்! உன் நண்பன் ஒட்டகச்சிவிங்கி தான்!

*முயல்* : அப்பாடா! இப்போதாவது கண்டுபிடித்தாயே! நீயும் என்னுடன் வா. என் நண்பன் முதுகில் ஏறி விளையாடலாம்.




P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : Uma Krishnaswamy

# கனவுகள்







வெளியே பலத்த மழை. வள்ளி சன்னல் வழியாகப் பார்த்துக் கொண்டிருந்தாள். அவளுக்கு மழை என்றால் மிகவும் பிடிக்கும்.

மழை நின்றது. வள்ளியும் அவள் தங்கை ராணியும் வெளியே ஓடினர். வீட்டுக் கூரையில் இருந்து சொட்டிக் கொண்டிருந்த மழைத் துளிகளைக் கையில் ஏந்தினர். கீழே அங்குமிங்கும் தேங்கிக் கிடந்த மழை நீரில் குதித்து விளையாடினர்.



அப்போது வானத்தில் ஒரு அழகிய வானவில் தோன்றியது. சிவப்பு, நீலம், மஞ்சள், ஊதா என்று பல வண்ணங்கள்! ஆச்சரியத்துடன் வள்ளி அதைப் பார்த்துக் கொண்டே இருந்தாள். வானவில் ஒரு பாலம் போல் தோன்றியது. இந்தப் பாலம் எங்கே போகிறது?





வள்ளி கற்பனையில் மிதந்தாள். மெல்லப் பாலத்தில் நடக்க ஆரம்பித்தாள். நடந்துகொண்டே விண்வெளி முழுவதும் சுற்றிப் பார்த்தாள்.

"அக்கா! அம்மா கூப்பிடுகிறார்கள்," என்ற தங்கையின் குரல் அவளைப் பூமிக்கு இழுத்து வந்தது. அவள் கனவு கலைந்தது.

மறுநாள் மாலை வள்ளியும் ராணியும் பள்ளியிலிருந்து வீடு திரும்பிக் கொண்டிருந்தனர். வழியில் வானத்தில் ஒரு நாரை பறந்து கொண்டிருப்பதைப் பார்த்தனர். வள்ளி ஒரு கணம் கண்ணை மூடினாள்.



கனவில் மூழ்கினாள். காடு, மலை, ஊர்கள் என்று எல்லாவற்றையும் கடந்தாள். பல அதிசயக் காட்சிகளைப் பார்த்தாள்.

அவள் ஊரில் பழங்காலத்துச் சிலைகள், கற்கோவில்கள் நிறைய இருந்தன. வள்ளி அவற்றைக் கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டே இருப்பாள். உடனே கனவுலகில் மிதப்பாள். அவளுக்குப் பிடித்தமான சிற்பங்களைச் செதுக்குவாள். தானும் ஒருநாள் சிற்பியாகப் போவதாகத் தங்கையிடம் அடிக்கடி சொல்லுவாள்.

அவள் வீட்டுக்கு அருகில் ஒரு குளம் இருந்தது. குளத்துப் படியில் உட்கார்ந்து மீன்கள் நீந்துவதைப் பார்ப்பாள். தானும் மீனாக மாறிவிடுவாள். கடலில் பாய்ந்து பாய்ந்து நீந்துவாள். கடலின் ஆழத்துக்குச் சென்று விடுவாள்.

“நீ என்ன யோசிக்கிறாய்? எனக்கும் சொல்லேன்,” என்று ராணி அவளை நச்சரிப்பாள். தன் கனவுகளைப் பற்றி வள்ளி விவரிப்பாள். ராணிக்கும் கனவு இனித்தது. “நீ போகும் இடத்திற்கெல்லாம் என்னையும் அழைத்துச் செல்கிறாயா?” என்பாள்.

“ஓ! நிச்சயமாக!” என்பாள் வள்ளி.




P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi
Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : Uma Krishnaswamy

# ஏன் இந்த ஓட்டம்?



உலகம் தோன்றிய போது நாய், பூனை, எலி மூன்றும் ஒற்றுமையாக வாழ்ந்து வந்தன. அவரவர் வேலையைச் செய்து கொண்டிருந்தன.

தங்களுக்குள் இருந்த ஒற்றுமை எப்போதுமே நீடிக்க வேண்டும் என்று எண்ணி அவை ஒரு ஒப்பந்தம் எழுதின. அதன்படி நாய் வீட்டுக்கு வெளியேயும், பூனையும் எலியும் வீட்டுக்கு உள்ளேயும் வேலைகளைப் பார்த்துக் கொண்டன. எழுதிய ஒப்பந்தத்தைப் பூனை பரண்மேல் பத்திரமாக வைத்தது.



சில நாள்கள் சென்றன. நாய்க்குத் தன் வேலையில் சலிப்பு ஏற்பட்டது. "நான் மட்டும் குளிரிலும், மழையிலும் வெளியே காவல் காக்கிறேன். ஆனால் நீயும் எலியும் சொகுசாக உள்ளே குளிர் காய்ந்து கொண்டிருக்கிறீர்கள்," என்று பூனையிடம் கோபித்துக் கொண்டது.

ஆனால் பூனையோ, "நாம் செய்து கொண்ட ஒப்பந்தம் உனக்கு நினைவு இல்லையா?" என்றது.

"எங்கே! அந்த ஒப்பந்தத்தை கொண்டு வா! மீண்டும் பார்க்கலாம்," என்றது நாய்.

பூனை பரண்மேல் ஏறியது. ஐயையோ! ஒப்பந்தம் எழுதிய தாளை எலி கடித்துக் குதறி விட்டிருந்தது! மெத்தைபோல் அதன்மேல் படுத்திருந்தது!





பூனைக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. எலியைத் துரத்தியது. துரத்தித் துரத்திக் களைப்புற்றது. சோர்வுடன் கீழே வந்தது.

நாய் ஒப்பந்தத்தைக் கேட்டது. பூனையால் கொடுக்க முடியவில்லை. கோபமடைந்த நாய் பூனையைப் பார்த்து உறுமியது. அதைத் துரத்தியது.



அன்றிலிருந்து பூனையைப் பார்க்கும் போதெல்லாம் ஒப்பந்தத்தைக் கேட்டு நாய் அதைத் துரத்துகிறது. எலி செய்ததை நினைத்துப் பூனை எலியைத் துரத்துகிறது. இன்றும் ஒன்றையொன்று துரத்திக் கொண்டுதான் இருக்கின்றன.

மூலம் : ருமேனியக் கதை





P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : Uma Krishnaswamy

# உண்ணா விரதம்



காட்டில் ஒரு காலை நேரம்.

பெரிய ஆல மரத்தடியில் ஒரு குரங்குக் கூட்டம். என்ன ஆச்சரியம்! குரங்குகள் ஓர் இடத்தில் அமைதியாக உட்கார்ந்து இருப்பதா!

ஆம்! அன்று குரங்குகளின் உண்ணாவிரத நாள். இதோ உண்ணாவிரதம் ஆரம்பிக்கப் போகிறது. குரங்குகள் ஒன்றையொன்று பார்த்தபடி உட்கார்ந்திருந்தன.

முதிய தலைமைக் குரங்கு எழுந்தது. "மாலையில் நாம் சாப்பிட வேண்டிய உணவைத் தயாராக வைத்துக்கொள்ள வேண்டும்," என்று அறிவுரை கூறியது. குரங்குகள் தலையாட்டின.



ஒரு நொடி தான்!
இளங்குரங்குகள் ஓடின.
சுவை மிகுந்த பெரிய வாழைப்பழக்
குலைகளுடன் திரும்பி வந்தன.

தலைமைக்குரங்கின் மனைவி பேச ஆரம்பித்தது. "இப்போதே பழங்களைப் பங்குவைத்து விடலாமா? விரதம் முடிந்து பின்னர் பங்குவைப்பதில் நேரத்தை வீணாக்க வேண்டாமே!. மாலையில் நாம் எவ்வளவு பசியோடு இருப்போம்!" என்று முடித்தது.

எல்லாக் குரங்குகளும் சம்மதித்தன. அவரவர் பங்கை வாங்கின.பத்திரமாகத் தம் பக்கத்தில் வைத்துக்கொண்டன. "ஒரே ஒரு பழத்தை மட்டும் உரித்துத் தயாராக வைத்துக் கொள்ளலாமா?" என்றது ஒரு குட்டிக்குரங்கு. "ஆமாம்! ஆமாம்! ஆமாம்!" ஆமோதித்துத் கத்தியது ஒரு குண்டுக் குரங்கு.





'எத்தனை நேரம் பழங்களைச் சாப்பிடாமல் பார்த்துக் கொண்டே இருப்பது?' இது அதன் கவலை.

"சரி! சரி! பழத்தை உரித்து வைத்துக் கொள்வோம். ஆனால் மாலை வரை யாரும் சாப்பிடக் கூடாது" என்று ஆணையிட்டது தலைமைக் குரங்கு. ஆஹா! இதுவும் நல்ல யோசனை தான்! எல்லாக் குரங்குகளும் தம் பழத்தை உரித்துத் தயாராக வைத்துக்கொண்டன.

கூட்டத்திலேயே மிகச் சிறிய குட்டி ஒன்று தன் அப்பாவின் காதில் ரகசியம் பேசியது. "வாழைப் பழத்தை வாயில் வைத்துக் கொள்ளட்டுமா அப்பா? மாலை வரை நிச்சயம் சாப்பிடமாட்டேன்," என்றது. அப்பாக்குரங்கு மற்ற குரங்குகளைப் பார்த்தது. அதற்கும் உண்ணாவிரதம் இருப்பது பிடிக்கவில்லை தான்! தன் மனைவியின் கட்டாயத்தால் ஒப்புக்கொண்டது.



“நாம் எல்லோரும் ஏன் வாழைப்பழத்தை வாயில் வைத்துக் கொள்ளக் கூடாது? மாலை உண்ணாவிரதம் முடிந்த மறுவிநாடி கடித்துச் சாப்பிட வசதியாக இருக்கும் அல்லவா?” என்றது.

அடுத்த நிமிடம் எல்லாக் குரங்குகளின் வாயிலும் உரித்த வாழைப்பழம்! ஒன்றையொன்று பார்த்தபடி அவை தர்மசங்கடத்தில் நெளிந்தன. அப்புறம் என்ன! கண்ணிமைக்கும் நேரத்தில் பழங்கள் தொண்டைக்குள் இறங்கி மறைந்தன. உண்ணாவிரதமும் இனிதே முடிந்தது!

கர்நாடக நாட்டுப்புறக்கதை







P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : S. P. Raju

# கண்டுபிடிப்போம் வா



ஆடத் தெரியாத அழகியை
ஆடு ஆடு என்கிறார் - *அவள் யார்?*

சுமையும் சுமப்பான்
உதையும் கொடுப்பான் - *அவன் யார்?*

படுத்து உறங்காத மிருகம்
பந்தயத்தில் ஓடும் மிருகம் - *அது என்ன?*

நாலு உலக்கை குத்திவர
இரண்டு முறம் புடைத்துவர
துடுப்பு ஒன்று துழாவி வர
சிறிய வால் ஆடி வர
ஊர்வலத்தில் வந்திடுமே - *அது என்ன?*



நன்றி உள்ளவன்
நட்பு மிக்கவன்
வீட்டைக் காப்பவன் - நட்புக்கு
உயிரையும் கொடுப்பவன் - *அவன் யார்?*





பதுங்கி வருவார் - கள்வர் அல்ல
பாய்ந்து பிடிப்பார் - காவலர் அல்ல
வீட்டிலே இருப்பார் - பிள்ளையும் அல்ல - *அவர் யார்?*

காலின் நீளம் நாலடி
கழுத்தை நீட்டினால் ஆறடி
வாலை அளந்தால் ஒரு முழமாம்
வனத்தில் அது வாழ்ந்திடும் - *அது என்ன?*

மஞ்சள் தாடிக்காரனுக்கு
மற்றவர்கள் பயப்படுவார்கள்
நெஞ்சு நிமிர்த்தி வரும்போது
நடுநடுங்கி ஒளிவார்கள் - *அவன் யார்?*

குதித்துக் குதித்து ஓடிடுவான்
குறிதவறாமல் பாய்ந்திடுவான்
முன்னும் பின்னும் மரம் ஏறிடுவான்
முதுகில் மூன்று கோடுடையான் - *அவன் யார்?*

முதுகு வளைந்திருக்கும்
முன் கழுத்து நீண்டிருக்கும்
மடி நிறையத் தண்ணீருடன்
மணலில் நடக்கும் நங்கை - *அவள் யார்?*



எட்டுக்கால்கள் உடையவன்
இடம் வலமாகவே நடப்பவன்
முன்னோக்கி நடக்க முடியாதவன் - *அவன் யார்?*

முட்டையிலிருந்து வந்தவனுக்கு...
பிறக்கும்போது வால் இருக்கும்
பெருக்கும்போது கால் முளைக்கும்
தரையிலே தாவுவான்
தண்ணீரிலே மூழ்குவான்
பூச்சியை விரட்டுவான்
வரட்டுவரட்டு என்று கத்துவான் - *அவன் யார்?*

நீரிலும் வாழும் நிலத்திலும் வாழும் - தவளை அல்ல
நீட்டிய தலையை உள்ளே இழுக்கும் - நத்தை அல்ல
பலத்த மேல் ஓடு பற்றியிருக்கும் - நண்டும் அல்ல
பையப்பைய நகர்ந்து செல்லும் - அட்டையும் அல்ல -*அது என்ன?*

தண்ணீரில் கொண்டாட்டம்
தரையில் திண்டாட்டம் - யாருக்கு?

குட்டிக்குப் பால் கொடுக்கும்
கூரையில் தலை கீழாய்த் தொங்கும்
இருட்டிலும் பறந்து திரியும்
எப்போதும் கனிகள் விரும்பி உண்ணும் - *அது என்ன?*

உடம்பெங்கும் மயிர்களாம்
உலவுவது மலைக் காட்டிலாம்
திடமான கரிய உருவமாம்
திகைக்க வைத்தே உறுமுமாம் - *அது என்ன?*

கட்டித் தழுவிய குட்டியுடன்
மரமேறித் தாவும்
கிளைகளிலே ஊஞ்சலாடும்
பார்த்த முகம் பல காட்டும் - *அது என்ன?*

வீட்டிற்குத் தோழன் இவன்
விஷப் பூச்சியை விழுங்குபவன்
விழாமல் சுவரில் ஒட்டுபவன்
உயிரைக்காக்க வாலையும் இழப்பவன்
- *அவன் யார்?*



*சிங்கம், யானை, நாய், அணில், கழுதை
குதிரை, ஆடு, குரங்கு, ஒட்டகச்சிவிங்கி,
ஒட்டகம், பூனை, நண்டு, தவளை, பல்லி
மீன், வௌவால், கரடி, ஆமை*






P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi
Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : Uma Krishnaswamy

# ஏலம்

நசுருதீன் ஒரு கழுதை வளர்த்து வந்தார். அது எப்போதும் சாப்பிட்டுக் கொண்டே இருக்கும். ஆனால் வேலை மட்டும் செய்யாது.

நசுருதீனுக்கு அந்தக் கழுதையைப் பிடிக்கவே இல்லை. எப்படியாவது அதை விற்றுவிட வேண்டும் என்று நினைத்தார்.



ஒருநாள் காலை சந்தைக்குக் கழுதையை ஓட்டிச் சென்றார். மாலையில் உரத்த குரலில் அட்டகாசமாகச் சிரித்துக் கொண்டே வீடு திரும்பினார்.

"நான் இன்று என்ன செய்தேன் என்று உனக்குத் தெரியுமா?" என்று சந்தையில் நடந்ததைத் தன் மனைவியிடம் சொல்லத் தொடங்கினார்.

"காலையில் நான் சந்தைக்குப் போனேன் இல்லையா? அங்கே ஏலம் விடுபவனிடம் நம் கழுதையை ஒப்படைத்தேன். நல்ல விலைக்கு விற்றுத்தரச் சொன்னேன்.



ஏலக்காரன் கழுதையைப் பற்றிப் புகழ ஆரம்பித்தான். ‘இதுபோன்ற சிறப்பான கழுதையை எங்கேயாவது பார்த்திருக்கிறீர்களா? வாருங்கள்! கழுதையைப் பாருங்கள்!’ என்று எல்லோரையும் அழைத்தான்.

ஒருவன் அதற்கு மூன்று பொற்காசுகள் தருவதாகச் சொன்னான். ஏலக்காரன் விடவில்லை. ‘கழுதையின் நீண்ட காதுகளைப் பாருங்கள்! உறுதியான கால்களைப் பாருங்கள்! இதன் பற்களைக் கவனியுங்கள்! இது மிகவும் இளமையான கழுதை!’ என்றெல்லாம் கூறினான்.



நேரம் ஆக ஆகக் கழுதையைப் பத்து பொற்காசு, பதினைந்து பொற்காசு என்று போட்டி போட்டுக் கொண்டு ஏலம் கேட்டார்கள். விலை ஏறிக் கொண்டே போனது. முடிவில்..." என்று நசுருதீன் சொல்லிக் கொண்டிருக்கும் போதே வீட்டு வாசலில் கழுதையின் குரல் கேட்டது.

நசுருதீனின் மனைவிக்கு அதிர்ச்சி. "முடிவில் என்ன ஆயிற்று? சீக்கிரம் சொல்லுங்கள்," என்றாள்.

"இத்தனை அற்புதமான கழுதையை ஏன் விற்க வேண்டும் என்று நினைத்தேன். முப்பது பொற்காசுகள் கொடுத்து நானே அதைத் திரும்ப வாங்கி வந்து விட்டேன்," என்று பெருமையாகச் சொல்லி முடித்தார் நசுருதீன்.







P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : S. P. Raju

# வேல மரத்தின் ஆசை



சாலையோரத்தில் ஒரு வேல மரம். அதன் உடல் எல்லாம் முட்கள். 'யாருக்குமே என்னைப் பிடிக்கவில்லை. முள்ளில்லாத மரங்கள் எத்தனை அழகாக உள்ளன!' வேல மரம் மிகவும் வருத்தப்பட்டது.

இப்படி நினைத்துக் கொண்டிருக்கும் போதே வேல மரத்தின் முட்கள் மறைந்துவிட்டன. மரத்தில் பச்சைப்பசேலென்று பெரிய பெரிய இலைகள். அதைப் பார்த்துப் பூரித்தது வேலமரம்.





ஆனால் அந்த மகிழ்ச்சி கொஞ்ச நேரம்தான். எங்கிருந்தோ வந்த ஆடு ஒன்று வேல மரத்தின் இலைகளைத் தின்னத் தொடங்கியது.

'ஐயோ! ஆடு தின்கிறதே! என்ன செய்வது! என் இலைகள் தங்க இலைகளாக மாறினால் எவ்வளவு நன்றாக இருக்கும்!' என்று நினைத்தது வேலமரம். என்ன ஆச்சரியம்! வேல மரத்தின் இலைகள் தங்கமாக மாறிவிட்டன.



அப்போது அந்த வழியாக ஒரு மனிதன் வந்தான். தங்க இலைகள் அவன் கண்ணைப் பறித்தன.



"ஆஹா! என்ன அற்புதம்! எனக்கு இத்தனை அதிர்ஷ்டமா!" என்றபடித் தங்க இலைகளை ஒன்றுவிடாமல் பறிக்க ஆரம்பித்தான். நொந்து போனது வேல மரம்.

'இது என்ன தொல்லை! மனிதர்கள் தங்கத்தை எடுத்துக் கொள்கிறார்களே! என் இலைகள் கண்ணாடி இலைகளாக மாறிவிட்டால் எவ்வளவு நன்றாக இருக்கும்?'



நினைத்துக் கொண்டிருக்கும் போதே வேல மரத்தில் கண்ணாடி இலைகள் தோன்றின.

வேல மரம் மகிழ்ந்தது. சற்று நேரத்தில் பலத்த காற்று வீசியது. ஐயோ! கண்ணாடி இலைகள் ஒன்றுடன் ஒன்று மோதி உடைந்து போயின.

"அடக்கடவுளே! என்னால் எப்பொழுதுமே நிம்மதியாக இருக்க முடியாதா? ஆடுகளால் மேய முடியாத, மனிதனால் எடுத்துக் கொள்ள முடியாத, காற்றால் உடைக்க முடியாத ஒரு மரமாக என்னால் இருக்க முடியாதா?" என்று வருத்தத்துடன் புலம்பியது.

வேலமரம் முழுவதும் மீண்டும் முட்கள் தோன்றின. அதன் பிறகு வேலமரம் என்றைக்குமே வருத்தப் படவில்லை.

மூலம் : இந்திய நாட்டுப்புறக் கதை





P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : S. P. Raju



27

# சிங்கமும் சிறுமுயலும்

காட்டு ராஜாவான சிங்கத்திற்கு வயதாகிவிட்டது. இரையைத் தேடி அதனால் வேட்டையாட முடியவில்லை.

ஒரு நாள் சிங்கம் எல்லா விலங்குகளையும் தன் இருப்பிடத்துக்கு வரவழைத்தது. "நண்பர்களே! நான் வேட்டையாட வரும்போது நீங்கள் அனைவரும் மிரண்டு ஓடுகிறீர்கள். ஆனால் நான் உங்களில் ஒருவரைத்தான் சாப்பிடுகிறேன். இனி இதுபோல் செய்ய வேண்டாம். தினமும் உங்களில் ஒருவர் உணவாக என்னிடம் வந்துவிடுங்கள்," என்று கூறியது.









'இது ஒரு நல்ல ஏற்பாடுதான்!' விலங்குகள் எல்லாம் மகிழ்ந்தன. அடுத்த நாள் உணவாகப் போகும் விலங்கை முதல்நாளே தேர்ந்து எடுத்தன. மற்றவை பயமின்றி அமைதியாக வாழ்ந்தன. இவ்வாறே சில நாள்கள் சென்றன.

ஒரு நாள் முயலின் முறை வந்தது. 'நானா சிங்கத்துக்கு இரையாவேன்! அதைக் காட்டில் இருந்தே ஒழிக்கப் போகிறேன்!' முயல் ஒரு திட்டம் தீட்டியது. சிங்கத்தின் குகையை நோக்கி மெல்ல நடந்தது.

நீண்ட நேரமாகியும் தனது இரை வராததால், சிங்கம் கோபம் கொண்டது. முயல் வந்ததும், "நீ தான் இன்று என் உணவா? ஏன் இத்தனை தாமதம்?" என்று கர்ஜித்தது.





முயல், "அரசே! நான் வீட்டிலிருந்து எப்போதோ கிளம்பி விட்டேன். வழியில், வேறு ஒரு சிங்கத்தைப் பார்த்தேன். அது என்னைச் சாப்பிட வந்தது. ஆனால் நானோ, 'என் அரசரிடம் போய்க் கொண்டிருக்கிறேன்,' என்றேன். அந்தச் சிங்கம், 'உன் அரசனா? யார் அவன்? என்னிடம் காட்டு! அவனைக் கொல்கிறேன்,' என்று மிரட்டியது. நான் எப்படியோ தப்பித்து இங்கு வந்துவிட்டேன்," என்று பணிவுடன் கூறியது.

சிங்கம் கடுங்கோபம் கொண்டது. "எங்கே, அந்தப் பொல்லாதவன்? அவன் இருக்கும் இடத்தை இப்போதே காட்டு!" என்றது. முயல் முன்னே நடக்கச் சிங்கம் அதன்பின் தொடர்ந்தது.

இருவரும் ஒரு கிணற்றை நெருங்கினர். முயல் "அரசே! இங்கேயே இருங்கள். நான் பார்த்து விட்டு வருகிறேன்," என்று மெதுவாகக் கிணற்றுக்குள் எட்டிப் பார்த்தது. அதன் சிறிய முகம் நீரில் தெளிவாகத் தெரிந்தது.



"அரசே, இதோ அந்தச் சிங்கம்!" என்று சொல்லிவிட்டு முயல் நகர்ந்து கொண்டது. கோபத்தோடு கர்ஜித்துக் கொண்டே சிங்கம் கிணற்றுக்குள் எட்டிப் பார்த்தது. தண்ணீரிலும் அதே கோபமான முகம் தெரிந்தது. சற்றும் யோசிக்காமல் சிங்கம் கிணற்றுக்குள் பாய்ந்தது. நீரில் மூழ்கியது.

குட்டி முயல் மகிழ்ச்சியோடு துள்ளிக் குதித்துக் கொண்டே வீடு சென்றது.



மூலம் : பஞ்ச தந்திரக் கதைகள்





P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : Uma Krishnaswamy

# குட்டையா? நெட்டையா?



*(ஒட்டகமும் பன்றியும் எப்போதும் ஒன்றையொன்று கேலி செய்து கொண்டே இருக்கும். ஒரு நாள் தோட்டத்தில்...)*

*ஒட்டகம்* : ஏ! குறு குறு என்று குறுகிப்போன
குள்ளப்பன்றியே! உனக்கு என்னைப்போல
நெட்டையாக இருக்க ஆசை இல்லையா?

*பன்றி* : நெடு நெடு என்று நீண்டு வளர்ந்த
நெட்டைக்கால் ஒட்டகமே! உன்னைப் போல
நெட்டையாக இருக்க நான் ஏன் ஆசைப்பட
வேண்டும்? நெட்டையாக இருப்பதைவிடக்
குட்டையாக இருப்பதே மேல்!





*ஒட்டகம்* : அது எப்படிச் சொல்கிறாய்? இதோ என்னைப் பார்! இந்தப் பெரிய சுவருக்கு மறு பக்கத்தில் இருப்பதை என்னால் பார்க்க முடிகிறது. அங்கே சாப்பிடுவதற்கு நல்ல நல்ல தின்பண்டங்கள் இருக்கின்றன. எனக்கு எட்டும்படி நல்ல தழைகளும், செடிகளும் இருக்கின்றன. உன்னால் அவற்றைப் பார்க்கக்கூட முடியவில்லையே! இப்போது புரிகிறதா! உயரமாக இருப்பது எவ்வளவு நல்லது என்று!

பன்றி : பொறு அண்ணா, பொறு! இந்தச் சுவரின் அடியில் ஒரு மடை இருப்பதைப் பார். நான் அதில் நுழைந்து அந்தப் பக்கம் போய்விடுவேன். அங்கிருக்கும் தின்பண்டங்களை ஆசை தீரத் தின்பேன். ஆனால் அதில் உன்னால் நுழையக்கூட முடியாதே! நான் தின்பதை இந்தப் பக்கத்திலிருந்து நீ பார்த்துக் கொண்டே இரு!

*(இப்படிச் சொல்லிவிட்டு மடையில் நுழைந்து மறுபக்கம் சென்றுவிட்டது பன்றி. திகைத்துப் போய் நின்றது ஒட்டகம்.)*

ஒட்டகம் : நீ சொல்வது சரிதான்.

நெட்டைக்கு நெட்டை! குட்டைக்குக் குட்டை!

# விரிசல் விழுந்த பானை

முனியன் தினந்தோறும் பலமுறை ஆற்றுக்குப் போவான். இரண்டு பானைகளில் வீட்டுக்குத் தேவையான தண்ணீரைக் கொண்டுவந்து கொண்டுவந்து நிரப்புவான். அவற்றில் ஒரு பானையில் விரிசல் இருந்தது. அதன் வழியாகத் தண்ணீர் ஒழுகியது. வீடு வந்து சேரும் போது அந்தப் பானையில் பாதித் தண்ணீர்தான் மிஞ்சியது.

விரிசல் இல்லாத பானை, "என்னைப் பார்! ஒரு சொட்டுக் கூடக் கீழே சிந்தாமல் தண்ணீரை முழுமையாகக் கொண்டு வந்து சேர்க்கிறேன்," என்று அடிக்கடி பெருமையாகச் சொல்லும்.



விரிசல் பானைக்கு மிகவும் வருத்தம். அது முனியனிடம், "என்னை மன்னித்துக் கொள்! எவ்வளவு கஷ்டப்பட்டு நீ தண்ணீர் சுமக்கிறாய்! ஆனால் நானோ பாதித் தண்ணீரை வீணாக்குகிறேன்," என்று வருந்தியது.

முனியன் மெல்லச் சிரித்தான். விரிசல் பானையை அன்புடன் பார்த்து, "நாம் வீடு திரும்பும் பாதையில் அழகான பூக்கள் மலர்ந்து உள்ளன. அவற்றைப் பாரேன்!" என்றான்.

ஆம்! பாதையில் அழகான பூக்கள் மலர்ந்து இருந்தன. விரிசல் பானை தன் கவலையை மறந்து பூக்களின் அழகை ரசித்தது. ஆனால் வீடு வந்து சேர்ந்ததும், தான் கொண்டு வந்த குறைந்த அளவு தண்ணீரைப் பார்த்தது. மீண்டும் வருந்த ஆரம்பித்தது. "அழகான பூக்களைக் காட்டி என் கவலையை மறக்கச் செய்தாய். ஆனாலும் என் தோல்வியை என்னால் மறக்க முடியவில்லை," என்றது விரிசல் பானை.

"நான் சொன்னதை நீ சரியாகப் புரிந்து கொள்ளவில்லை. பாதையின் ஒருபுறம் மட்டும் பூக்கள் இருப்பதைக் கவனி. தினமும் நாம் வீடு திரும்பும் போது நீ சிந்திய தண்ணீரால்தான் இந்தச் செடிகள் பூத்திருக்கின்றன. நான் வேறு ஒரு புதிய பானை வாங்கியிருக்கலாம். ஆனால் பூச்செடிகள் செழிப்பாக வளரட்டும், பலர் அவற்றைப் பார்த்து மகிழ்ச்சி அடையட்டும் என்று நினைத்தேன். நீ தான் அதற்கு உதவி செய்திருக்கிறாய்," என்றான் முனியன்.

மூலம் : இந்திய நாட்டுப்புறக்கதை



# எறும்பு தைத்த செருப்பு





எறும்பு ஒன்று இரவு முழுதும் தூங்காமல் ஒரு ஜோடி செருப்பு தைத்தது. விடிந்ததும் அவற்றை விற்கக் கிளம்பியது.

எதிரே ஒரு குரங்கு வந்தது. "குரங்கு மாமா! குரங்கு மாமா! இந்தச் செருப்புகளை வாங்கிக் கொள்ளேன்!" என்றது எறும்பு.

"எனக்கோ நான்கு கால்கள்! இரண்டு செருப்புகள் எப்படிப் போதும்?" என்றது குரங்கு.

எறும்பு வீடு திரும்பியது. அன்றும் தூங்காமல் ஒரு ஜோடி செருப்பு தைத்தது.

விடிந்ததும் நான்கு செருப்புகளையும் தூக்கிக் கொண்டு குரங்கிடம் சென்றது. குரங்கு செருப்புகளைக் கையில் எடுத்துப் பார்த்தது.







“இந்தச் செருப்பு சிறியது என் காலுக்குப் பத்தாது உன்னைப் போன்ற எறும்புக்குத்தான் சரியாக இருக்கும்!” என்று கூறிச் செருப்பை வாங்க மறுத்துவிட்டது.

செருப்புகளை எடுத்துக் கொண்டு எறும்பு மற்றொரு எறும்பிடம் சென்றது. எறும்பு நண்பனோ, “நான்கு செருப்புகளை வாங்கி நான் என்ன செய்வது? நமக்கெல்லாம் ஆறு கால்கள். மறந்துவிட்டாயா?” என்றது.

ஏமாற்றத்துடன் வீடு திரும்பிய எறும்பு இன்னும் இரண்டு செருப்புகள் தைத்தது. மறுநாள் நண்பனிடம் ஆறு செருப்புகளையும் எடுத்துச் சென்றது.





ஒரு செருப்பைப் போட்டுப் பார்த்த எறும்பு நண்பன், "இது மிகவும் லேசாக இருக்கிறது. இரண்டே நாளில் அறுந்து விடும் எனக்கு வேண்டாம். ஒன்று செய்! நேராக எட்டுக்கால் பூச்சியிடம் போ! அது வாங்கிக் கொள்ளும்!" என்று கூறியது.



எறும்பு சோர்ந்து போனது. ஆறு செருப்புகளையும் சுமந்து கொண்டு எட்டுக்கால் பூச்சியின் வீட்டுக்குச் சென்றது. வாசலிலேயே நின்று கொண்டு பூச்சியை அழைத்தது. உள்ளே சென்றால் வலையில் மாட்டிக் கொள்ளுமே!

எட்டுக்கால் பூச்சி எறும்பைப் பார்த்தது. "ஏன் தம்பி சோர்வாக இருக்கிறாய்?" என்று கேட்டது. நடந்ததையெல்லாம் எறும்பு விவரமாகச் சொன்னது.







"நீ இப்படி அலையாமல் இருக்க ஒரு வழி சொல்கிறேன். அட்டைப் பூச்சியிடம் போ. அதற்கு ஏராளமான கால்கள். தினமும் இரண்டு இரண்டு செருப்பாக உன்னிடம் வாங்கிக் கொண்டே இருக்கும்," என்றது.

எறும்பு மகிழ்ச்சியுடன் வீடு திரும்பியது.







P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : Uma Krishnaswamy

# ஓவியர் யாங்

நெடுங்காலத்துக்கு முன் சீனாவில் யாங் என்ற சிறுவன் இருந்தான். அவன் தன் மாமாவிடம் வளர்ந்து வந்தான். மாமா ஒரு சிறந்த ஓவியர். ஓவியம் வரையும்போது யாங் அவர் அருகிலேயே மணிக் கணக்காக உட்கார்ந்து இருப்பான். அவர் வரைவதை உன்னிப்பாகக் கவனிப்பான்.

ஓவியத்தில் அவனுக்கு ஆர்வம் இருப்பதை மாமா உணர்ந்தார். அவனையும் ஓவியம் வரைய ஊக்குவித்தார். அவன் வரையும் படங்களை அடிக்கடி வாங்கிப் பார்த்தார்.





ஒரு நாள், "உன் ஓவியங்கள் மிக அழகாக இருக்கின்றன! என்னைவிடச் சிறப்பாக வரைகிறாய்! ஊரில் எல்லோரையும் அழைத்துக் காண்பிக்கலாம்," என்றார் மாமா.

நண்பர்கள் வந்தனர். படங்களை ரசித்துப் பார்த்தனர். யாங்கிடம், "இந்தப் படங்கள் உண்மையான உருவங்கள் போல் உள்ளன. நீ வரைந்த தேன் கூட்டையும், பூக்களையும் பார்த்துத் தேனீக்களும் வந்துவிடும். பறவைகளும் ஏமாந்துவிடும்," என்று கூறி வியந்தனர்.



ஒரு நாள் மாமா,
"உன் ஓவியங்களை
வெளியூரில் உள்ள என்
நண்பரிடம் காட்டி வா.
இதோ அவர் முகவரி,"
என்றார். யாங் தன்
மாமாவை விட்டுப் போக
மனமில்லாமல் கிளம்பினான்.

வழியில் யாங் ஒரு காட்டைக் கடக்க நேர்ந்தது. காட்டில் இருந்த மரம், செடி, கொடிகள், பறவைகள் எல்லாமே அவன் மனத்தைக் கவர்ந்தன. அங்கங்கே நின்று அவன் ஓவியம் வரைந்தான். மரங்களின் மேல் இருந்த சிறு சிறு வீடுகளில் பல நாள்கள் தங்கினான். அங்கிருந்து பார்த்தபடி ஏராளமான படங்களை வரைந்து மகிழ்ந்தான்.

ஒரு நாள் அவன் ஒரு பன்றியைப் பார்த்தான். அதை வரைந்து வண்ணம் தீட்டினான். அப்போது திடீரென ஒரு அலறல். எதிரே ஒருவன், "புலி! புலி!" என்று தலைதெறிக்க ஓடி வந்தான்.

'என்ன செய்யலாம்?' யாங்குக்குச் 'சட்'டென்று ஒரு யோசனை தோன்றியது. தான் வரைந்த பன்றிப் படத்தைப் புதரின் முன் வைத்தான். இருவரும் தப்பி ஓடினர்.

துரத்தி வந்த புலி பன்றியைப் பார்த்து அங்கேயே நின்றுவிட்டது. உறுமியது. புலியின் கவனம் படத்தின் மேல் இருக்கும்போதே இருவரும் மரத்தில் ஏறி வீட்டுக்குள் புகுந்து கொண்டனர்

மூலம் : சீனக் கதை





P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : P. S. Raju

# சிறந்த மாணவன்





பாண்டவர்களும், கௌரவர்களும் துரோணரிடம் எல்லா வித்தைகளையும் கற்று வந்தனர். அவற்றில் வில் வித்தையும் ஒன்று.

அர்ஜுனன் வில்வித்தையில் மிகுந்த ஆர்வம் காட்டினான். அதில் முழுக் கவனத்துடன் ஈடுபட்டான். மற்ற எல்லோரையும் விடச் சிறந்த மாணவனாக விளங்கினான்.



அர்ஜுனனின் திறமை துரோணரைக் கவர்ந்தது. அவர் அவனிடம் தனிப் பிரியம் காட்டினார். இது துரியோதனனுக்கும் அவன் தம்பிகளுக்கும் பிடிக்கவில்லை. எப்போதும் அர்ஜுனனைப் பொறாமையோடு பார்த்தனர்.

ஒரு நாள் துரோணர் தம் மாணவர்களின் திறமையைச் சோதிக்க நினைத்தார். மரத்தால் செய்யப்பட்ட பறவை ஒன்றை ஒரு கிளையில் தொங்கவிட்டார்.



“மாணவர்களே! அதோ அந்தப் பொம்மைப் பறவையைப் பாருங்கள். சரியாகக் குறி பார்த்து அதன் கண்ணில் அம்பை எய்ய வேண்டும்,” என்று கூறினார். மாணவர்கள் எல்லோரும் தயாராக நின்றனர்.

முதலில் தருமனை அழைத்து முயற்சி செய்யச் சொன்னார். குறி பார்த்து அவன் அம்பைவிடத் தயாரானபோது, “தருமா! உன் கண்ணில் இப்போது என்ன தென்படுகிறது?” என்று கேட்டார்.

தருமன் "குருவே! நீங்கள் தெரிகிறீர்கள். மரம் தெரிகிறது. இலைகள் தெரிகின்றன. பறவை தெரிகிறது," என்றான்.



துரோணர், "நகர்ந்துகொள் தருமா! உன்னால் சரியாகக் குறி பார்த்து அடிக்க முடியாது," என்றார்.

அடுத்து துரியோதனனை அழைத்தார். அவனிடம் கேட்டபோது, "குருவே நீங்கள் மட்டுமா தெரிகிறீர்கள்! சுற்றியுள்ள மற்றவர்களும் தெரிகிறார்கள்! மரம், கிளைகள், இலைகள், பறவை எல்லாமே நன்றாகத் தெரிகின்றன!" என்றான் கர்வத்துடன்.

"நகர்ந்துகொள் துரியோதனா! உன்னாலும் சரியாகக் குறிபார்த்து அடிக்க முடியாது!" என்றார் துரோணர்.

இவ்வாறே பீமன், நகுலன், சகாதேவன் மற்றும் எல்லோரையும் கேள்விகள் கேட்டார். எல்லோரும் இதே போன்ற பதிலைத்தான் அளித்தனர்.



முடிவில் அர்ஜுனன் வந்தான். வில்லையும், அம்பையும் தயாராக வைத்துக் கொண்டான். மெய்மறந்து பறவையையே பார்த்துக் கொண்டிருந்தான்.

துரோணர், "அர்ஜுனா! உனக்கு என்ன தெரிகிறது?" என்று கேட்டார்.

அர்ஜுனன், "குருவே எனக்குப் பறவையின் கண் மட்டும்தான் தெரிகிறது!" என்றான்.

அர்ஜுனனின் முழுக் கவனமும், சரியான நோக்கும் துரோணரை மிகவும் கவர்ந்தன.

உடனே அவர், "இப்போது நீ அம்பை விடலாம்!" என்றார். அர்ஜுனன் அம்பை எய்தான்.

ஆ ஹா! அம்பு நேராகப் பொம்மையின் கண்ணில் பாய்ந்தது.





P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : Uma Krishnaswamy

# யானையின் எடை

முன்னொரு காலத்தில் ஓர் ஊரில் செல்வந்தர் ஒருவர் இருந்தார். அவர் வீட்டில் யானை ஒன்று இருந்தது.

ஒருநாள் அவர் தன் நண்பர்களிடம், "என் யானையின் எடை எவ்வளவு இருக்கும்? உங்களால் கண்டுபிடித்துச் சொல்ல முடியுமா?" என்று சவால் விட்டார்.



"அவ்வளவு பெரிய தராசு எங்குமே இல்லையே. எப்படி எடை போட முடியும்?" என்றார் ஒரு நண்பர். "யானையைத் துண்டு துண்டாக வெட்டினால்தான் எடை போட முடியும்! அப்படிச் செய்ய முடியாதே," என்றார் மற்றொருவர்.





ஒரு சிறுவன் இதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்தான்.

யானையின் எடையை எப்படிக் கண்டு பிடிப்பது? சிறுவன் ஆற்றங்கரையில் உட்கார்ந்து பல நாட்கள் யோசித்தான்.

ஒரு நாள் ஆற்றில் மிதந்து கொண்டிருந்த படகின்மேல் அவன் பார்வை படிந்தது. சட்டென்று அவனுக்கு ஒரு யோசனை தோன்றியது.

"கண்டுபிடித்து விட்டேன்! கண்டுபிடித்து விட்டேன்!" கத்திக் கொண்டே செல்வந்தரிடம் ஓடினான்.

"யானையை ஆற்றங்கரைக்கு அழைத்து வாருங்கள்! அதன் எடையைக் கண்டு பிடிக்க ஒரு வழி சொல்கிறேன்," என்றான்.

யானை ஆற்றங்கரைக்கு வந்தது. சிறுவன் அதைப் படகில் ஏற்றச் செய்தான்.





யானை ஏறியதும் படகு ஆடியது. அதன் எடையின் அழுத்தத்தால் படகு நீரில் சிறிது அமிழ்ந்தது. படகு நீரில் அமிழ்ந்திருக்கும் அளவைச் சிறுவன் கருப்பு வண்ணத்தால் குறியிட்டான்.

பிறகு யானையைக் கரையில் இறக்கச் செய்தான். ஆட்களை அழைத்துப் படகில் பெரிய பெரிய கற்களை ஏற்றச் செய்தான். கற்கள் ஏற, ஏறப் படகு மெதுவாக அமிழ்ந்தது. கருப்புக் குறியீடு வரை படகு நீரில் அமிழ்ந்ததும் கற்கள் ஏற்றுவதை நிறுத்தச் செய்தான்.

"படகில் உள்ள கற்களின் எடையும் யானையின் எடையும் சமம் அல்லவா? எனவே, கற்களை எடை போடுங்கள், யானையின் எடை தெரிந்துவிடும்!" என்றான் சிறுவன். அவனது அறிவுக் கூர்மையை எல்லாரும் பாராட்டினர்.






P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : S. P. Raju

# கதை எப்பொழுது முடியும்? 

முன்னொரு காலத்தில் ஒரு அரசன் இருந்தான். அவனுக்குக் கதை கேட்பது மிகவும் பிடிக்கும். ஒரு நாள், மிக நீண்ட கதை சொல்பவருக்கு ஆயிரம் பொற்காசுகள் என்று அறிவித்தான்.

செய்தி அறிந்த பலர் அரசனிடம் கதை சொல்ல வந்தனர். ஒருவர் சொன்ன ஒரு கதை முடிய ஒரு வாரம் ஆனது. இன்னொருவர் சொன்ன கதை முடியப் பத்து நாள்கள் ஆனது. மற்றொருவர் சொன்ன கதை ஒரு மாதம் நீடித்தது.

ஆனால் அரசனோ, "நீங்கள் சொன்ன எந்தக் கதையுமே நீண்ட கதை இல்லை," என்று பரிசு அளிக்காமல் அவர்களைத் திருப்பி அனுப்பிவிட்டான்.

இதை அறிந்த புத்திசாலிப் புலவர் ஒருவர் எப்படியாவது பரிசைப் பெற வேண்டும் என்று நினைத்தார். அரசனிடம் சென்று, "அரசே! எனக்கு மிக மிக நீண்ட கதை தெரியும். அதைச் சொல்லி முடிக்க என் வாழ்நாள் முழுதுமே போதாது," என்றார்.

அரசன் ஆவலுடன் "ஓ! அப்படியா! சொல்லுங்கள்," என்றான்.



புலவர் "ஆனால் ஒரு நிபந்தனை! கதை கேட்கும்போது நீங்கள் 'பிறகு....,' 'பிறகு....,' என்று கேட்டுக் கொண்டே இருக்க வேண்டும்," என்றார்.

அரசனும் ஒப்புக் கொண்டான். புலவர் கதையை ஆரம்பித்தார்.

"ஒரு நாட்டில் ஒரு முறை நன்கு மழை பெய்தது. ஏராளமான நெல் விளைந்தது. எங்கு பார்த்தாலும் நெல் மலை மலையாகக் குவிந்திருந்தது.

அதைப் பார்த்த அந்நாட்டு மந்திரி, "மிகப் பெரிய களஞ்சியம் கட்டுங்கள். நாடு முழுதும் உள்ள நெல்லைக் களஞ்சியத்தில் சேமித்து வையுங்கள். பஞ்சம் வந்தாலும் கவலைப்பட வேண்டாம்," என்றார்.

அதன்படியே மிகப் பெரிய களஞ்சியம் கட்டப்பட்டது. அது போன்ற களஞ்சியம் எந்த நாட்டிலுமே இல்லை. அந்தப் பிரம்மாண்டமான களஞ்சியத்தைப் பார்க்க மக்கள் திரண்டு வந்தனர்.

களஞ்சியத்தின் உள்ளே காற்றுப் போக ஒரு சிறிய ஓட்டை இருந்தது. ஒரு நாள் களஞ்சியத்தைச் சுற்றி ஒரு சிட்டுக் குருவி பறந்து கொண்டிருந்தது. களஞ்சியத்தின் ஓட்டை அதன் கண்ணில் பட்டது. ஓட்டை வழியாக விர்ரென்று களஞ்சியத்துக்குள் நுழைந்தது. ஒரு நெல்லைக் கொத்திக் கொண்டு வெளியே வந்தது. தன் கூட்டில் வைத்தது," என்று கூறி நிறுத்தினார் புலவர்.

"பிறகு...," என்று அரசன் கேட்டான்.



“குருவி மீண்டும் பறந்து களஞ்சியத்துக்குள் நுழைந்தது. ஒரு நெல்லைக் கொத்திக் கொண்டு வெளியே வந்தது. தன் கூட்டில் வைத்தது,” என்றார் புலவர்.

“பிறகு...,” என்று கேட்டான் அரசன். மீண்டும் மீண்டும் குருவி உள்ளே போவதையும், நெல்லை வெளியே எடுத்து வருவதையுமே சொல்லிக் கொண்டிருந்தார் புலவர்.

அரசன் பொறுமை இழந்தான். ‘களஞ்சியத்தின் நெல்லை ஒவ்வொன்றாகக் குருவி எடுத்துக் கொண்டே இருக்கப் போகிறது. என் வாழ்நாள் முடிந்துவிடும். ஆனாலும் நெல் தீராது. அவர் சொல்வதைக் கேட்டு எனக்குப் பைத்தியம்தான் பிடிக்கப் போகிறது,’ என்று நினைத்தான்.

ஐயோ! புலவரிடமிருந்து எப்படித் தப்பிப்பது? “ஆயிரம் பொற்காசுகளை உடனே கொண்டு வாருங்கள்,” என்று அரசன் கட்டளையிட்டான்.

நிம்மதியாகப் பெருமூச்சு விட்டான்.



மூலம் : இந்திய நாட்டுப்புறக்கதை




P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : S. P. Raju

# நந்திரியாவும் முதலையும்



நந்திரியா ஒரு துணிச்சலான குரங்கு. வீரச் செயல்களில் பயமில்லாமல் ஈடுபடும். மனம் போனபடிக் காட்டில் தன்னந் தனியாகச் சுற்றித் திரியும்.

ஒருநாள் அது ஓர் ஓடையை அடைந்தது. ஓடையின் நடுவே ஒரு தீவு. அதில் ஏராளமான மாமரங்கள். ஒவ்வொரு மரத்திலும் நிறையப் பழங்கள்.

நந்திரியா அந்தத் தீவுக்குப் போக ஆசைப்பட்டது. ஆனால் ஓடை அகலமாய் இருந்தது. 'எப்படித் தீவை அடைவது?' என்று யோசித்தது. அப்போது ஓடையின் நடுவில் இருந்த ஒரு பாறை அதன் கண்ணில் பட்டது.



நந்திரியா ஒரே பாய்ச்சலில் அந்தப் பாறையை அடைந்தது. அங்கிருந்து ஒரே தாவலில் தீவை அடைந்தது. ஆபத்தான வேலைதான்! ஆனாலும் அதுதான் துணிச்சலான குரங்கு ஆயிற்றே.

நந்திரியா தீவில் மாம்பழங்களைத் தின்று மகிழ்ந்தது. மீண்டும் பாறையின் மேல் தாவி வீடு திரும்பியது. அம்மா அப்பாவிடம் தீவைப் பற்றிச் சொன்னது. நண்பர்களையும் தீவுக்கு அழைத்தது. “தீவு மிகத் தொலைவில் இருக்கிறது. நாங்கள் வரவில்லை,” என்று நண்பர்கள் மறுத்துவிட்டனர். நந்திரியா மட்டும் எப்போது பசித்தாலும் தீவுக்குச் சென்று வந்தது.

இதை ஒரு முதலை பார்த்துக் கொண்டே இருந்தது. ‘எப்படியாவது இந்தக் குரங்கைப் பிடித்துத் தின்றுவிட வேண்டும்,’ என்று நினைத்தது.

அது மழைக்காலம். ஓடையில் நீர் மட்டம் ஏற ஏறப் பாறை தெரிவது குறைந்துகொண்டே வந்தது. ஒருநாள் நந்திரியா ஓடைக்கு வந்தபோது பாறையின் சிறு பகுதி மட்டுமே தெரிந்தது. நந்திரியா மிகுந்த கவனத்துடன் பாறையின் மேல் தாவியது.



தீவை அடைந்தது. மாம்பழங்களைத் தின்று மகிழ்ந்தது.

திரும்பும்போது பாறையின் மேல் தாவப்போன நந்திரியா திடீரென நின்றது. 'பாறை பெரிதாகத் தெரிகிறதே! நீர் மட்டம் குறையவே இல்லையே! இதில் ஏதோ சூழ்ச்சி இருக்கிறது,' என்று நினைத்தது. ஒரு தந்திரம் செய்தது.

"பாறை அண்ணா! நீ நலமாக இருக்கிறாயா?" என்றது. பதிலே இல்லை! "நீ ஏன் இன்று பேசமாட்டேன் என்கிறாய்?" என்று மீண்டும் கேட்டது.

'இந்தப் பாறை தினமும் குரங்குடன் பேசும்போல் இருக்கிறது,' என்று பாறைமேல் ஒளிந்திருந்த முதலை நினைத்தது.

"என்ன சொன்னாய் தம்பி?" என்றது முதலை. முதலையின் வால் பகுதியும், தலைப் பகுதியும் நீரில் மறைந்திருந்தன.

நந்திரியாவுக்கு முதலையின் சூழ்ச்சி புரிந்துவிட்டது.

"ஓ!.... முதலையா! உனக்கு என்ன வேண்டும்?" என்றது குரங்கு. "உன்னைத் தின்ன வேண்டும்?" என்றது முதலை ஆத்திரத்துடன்.



'முதலையிடமிருந்து எப்படித் தப்பிப்பது?' நந்திரியா ஒரு திட்டம் தீட்டியது.

"முதலை அண்ணா! உன் ஆசையை நிறைவேற்றுகிறேன். வாயை அகலமாகத் திறந்து வைத்துக் கொள். நேராக உன் வாயில் குதித்து விடுகிறேன். ஆனால் கண்களை இறுக மூடிக் கொள். கொஞ்சம் தவறினாலும் கண்களில் காயம் பட்டுவிடும்," என்றது.

முட்டாள் முதலையும் கண்களை இறுக மூடிக் கொண்டது. வாயை அகலமாகத் திறந்து வைத்துக் கொண்டது. நந்திரியா குறிபார்த்து முதலையின் முதுகில் குதித்தது. மறுபாய்ச்சலில் எதிர்க் கரைக்குத் தாவி விட்டது.

"முதலை அண்ணா! என்னை உன்னால் பிடிக்கவே முடியாது," என்று சிரித்துக் கொண்டே ஓடிவிட்டது.

மூலம் : ஜாதகக் கதைகள்






P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : Uma Krishnaswamy

# இயற்கையின் விந்தை

ஒரு நாள் நண்பகல். வெயில் கடுமையாக இருந்தது. விவசாயி ஒருவன் ஒரு பாதாம் மரத்தடியில் ஓய்வு எடுத்துக் கொண்டிருந்தான். எதிரே வயல் முழுவதும் தர்பூசணிக் கொடிகள் தரையில் பரவிக் கிடந்தன. கொடிகளுக்கு இடையே பெரிய பெரிய தர்பூசணிப் பழங்கள்.

விவசாயி தலையை நிமிர்த்தி மேலே பார்த்தான். மரத்தில் அங்கும் இங்குமாகச் சிறுசிறு பாதாம் பழங்கள்.

"மெல்லிய கொடியில் இவ்வளவு பெரிய தர்பூசணிப் பழங்கள்! பெரிய வலிமையான மரத்தில் சிறுசிறு பாதாம் பழங்கள்! இயற்கையின் படைப்பு விந்தையாக இருக்கிறதே!" என்று விவசாயி தனக்குள் சிரித்துக் கொண்டான்.



இப்படி யோசித்துக் கொண்டிருக்கும் போதே, அவன் தலையில் 'பட்' என்று ஒரு பாதாம் பழம் விழுந்தது. விவசாயி திடுக்கிட்டான்.

"ஆஹா! இப்போதுதான் புரிகிறது. பாதாம் மரத்துக் காய்கள் தர்பூசணி அளவுக்குப் பெரியதாக இருந்திருந்தால், இந்நேரம் என் நிலைமை என்ன ஆகியிருக்கும்?"

இயற்கையின் படைப்பை எண்ணி வியந்தான்.

மூலம் : ஈரான் நாட்டுக் கதை

# வழிப்போக்கனும் தேங்காயும்

மார்க்கோஸ் ஏராளமான தேங்காய்களுடன் குதிரையின் மேல் பயணம் செய்து கொண்டிருந்தான்.

வழியில் அவன் ஒரு சிறுவனைப் பார்த்தான். தான் செல்லவேண்டிய ஊர்ப் பேரைச் சொன்னான். அங்குப் போக எவ்வளவு நேரம் ஆகும் என்று கேட்டான்.

சிறுவன் குதிரையை உற்றுப் பார்த்தான். "நீங்கள் மெதுவாகச் சென்றால் சீக்கிரம் ஊர் போய்ச் சேருவீர்கள். ஆனால் வேகமாகப் போனால் நீண்ட நேரம் ஆகும்," என்றான்.



மார்க்கோஸ் சிறுவனை வியப்புடன் பார்த்தான். 'சிறுவன் உளறுகிறான்!' என்று நினைத்தபடியே குதிரையை வேகமாக ஓட்டினான். சற்று தூரம் போனதும் தேங்காய்கள் ஒவ்வொன்றாகக் கீழே விழ ஆரம்பித்தன. குதிரையை நிறுத்தித் தேங்காய்களைச் சேகரித்தான்.

"ஐயோ! நேரமாகிவிட்டதே! சீக்கிரம் ஊர் போய்ச் சேர வேண்டும்," என்று மீண்டும் குதிரையை வேகமாக ஓட்டினான். நாலாபுறமும் காய்கள் சிதறி விழுந்தன. குதிரையை நிறுத்திக் காய்களைச் சேகரித்தான். இப்படியே வழி நெடுகக் குதிரையை நிறுத்தி நிறுத்தி ஊர் போய்ச் சேர்வதற்குள் இருட்டிவிட்டது.

'ஓ! மெதுவாகச் சென்றால் சீக்கிரம் ஊர் போய்ச் சேரலாம் என்று சிறுவன் சொன்னது இதனால்தானோ!' மார்க்கோஸுக்கு இப்போதுதான் புரிந்தது.

மூலம் : பிலிப்பைன்ஸ் நாட்டுப்புறக்கதை







P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : Uma Krishnaswamy

# கண்டுபிடிப்போம் வா





வட்டத்தட்டைப் போலிருக்கும்
வடிவழகு இலைகள் மிதக்கும்
நெட்டையாக உயர்ந்து நிற்கும்
நடு நடுவே மலர்களாம்! - *அது என்ன?*

பல்லுப் போன்ற வெள்ளைப் பூ
பள பளக்கும் குண்டுப்பூ
நல்ல மணம் வீசும் பூ
நங்கையர் விரும்பி அணியும் பூ - *என்ன பூ?*

அடுக்கடுக்கா இலை இருக்கும்
அரும்பரும்பா முள் இருக்கும் - *அது என்ன?*

மஞ்சள் இதழ் பெரும் பூவாம்
சூரியனை நோக்கி மலருமாம் - *அது என்ன?*

கொடிக்கு மேலே கொத்து கொத்தாம்
கொஞ்சிச் சிரிக்கும் வெள்ளைக் கொத்தாம்
சின்னக் கொத்து இதழ் விரித்தால்
தேசமெங்கும் நறுமணமாம் - *அது என்ன?*

இது மாதத்தின் பெயர்
ஆனால் மலருக்கும் பெயர் - *அது என்ன?*

*சூரியகாந்தி, தாழம்பூ, மல்லிகைப்பூ, தாமரை, முல்லை, டிஸம்பர் பூ*





பச்சைப் பச்சை நிறத்தழகி
பவள வாய்ச் சொல்லழகி
வீட்டிலும் இருப்பாள்
காட்டிலும் திரிவாள் - *அவள் யார்?*

உச்சியிலே பூ - பறிக்க யாருமில்லை
காலிலே முள் - எடுக்க ஆளில்லை
- *அது என்ன?*

உடல் எல்லாம் பளபளப்பு - பட்டாடை அல்ல
உச்சியிலே கொண்டை இருக்கும் - சேவலும் அல்ல
கழுத்து உயர்ந்திருக்கும் - ஒட்டகம் அல்ல
கண்கள் அநேகம் உண்டு - *அது என்ன?*

மாட மாளிகையில் இருப்பான் - மன்னன் அல்ல
கூட கோபுரத்தில் இருப்பான் - கடவுளும் அல்ல - *அவன் யார்?*

நீந்தத் தெரியும் - மீனும் அல்ல
நடக்கத் தெரியும் - மனிதன் அல்ல
இறகு கொண்ட பறவைதான் - *அது என்ன?*





கறுப்புச் சட்டைக்காரன்
வேலையில் சுறுசுறுப்பானவன்
ஒருவனை நாம் கூப்பிட்டால்
ஊரையே அழைப்பவன் - *அவன் யார்?*

இருப்பது இரண்டு கால்
ஓடுவது குதிரைவேகம்
இறக்கை உண்டு பறக்காது - *அது என்ன?*



இரவிலே கத்தும்
இருட்டிலே வேட்டையாடும்
மரப் பொந்திலே மறைந்து
பகல் பொழுதிலே தூங்கிடும் - *அது என்ன?*



பறந்து பறந்து இலைகளை சேர்த்திடுவாள்
நெய்து நெய்து வீடு கட்டிடுவாள்
ஒய்யாரமாக ஊஞ்சலாடிடுவாள் - *அவள் யார்?*

கூரிய வளைந்த அலகுடையது
கூர்மையாகப் பார்க்கும் திறனுடையது
சீரிய முரட்டு இறகுடையது
வானுயரப் பறக்கக் கூடியது - *அது என்ன?*



ஒற்றைக் காலில் நிற்கிறாள்
ஓடையிலே மீன் பிடிக்கிறாள் - *அவள் யார்?*



கருமை நிறத்தழகி
காடெல்லாம் சுற்றி வருவாள்
கானமழை பொழிகிறாள்
கண்டவுடன் ஓடுகிறாள் - *அவள் யார்?*

பழுப்பு நிற உடலில் கருப்பு நிறத்தலை
கண்களைச் சுற்றி மஞ்சள் வளையம்
கால்கள் மஞ்சள், அலகு மஞ்சள்
மனிதக் குரலைக் கேட்டுப் போலிக்குரல் கொடுக்கும் - *அது என்ன?*

*காகம், பருந்து, மயில், கிளி, குயில், மாடப்புறா, கொக்கு, சேவல், ஆந்தை,*
*மைனா, நெருப்புக்கோழி, தூக்கணாங்குருவி, வாத்து*






P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : Uma Krishnaswamy

# கடப்பதா வேண்டாமா?



ஒரு பசுமையான மலை. அதன் அருகே ஒரு குதிரையும் அதன் குட்டியும் வாழ்ந்து வந்தன. குட்டிக் குதிரை ஒரு நிமிடம் கூடத் தன் அம்மாவை விட்டு எங்கும் போகாது.

ஒரு நாள் அம்மா, "நீ இன்னும் சிறு குழந்தையைப் போல் என்னையே சுற்றிச் சுற்றி வருகிறாயே! எப்போது தான் வேலை செய்யக் கற்றுக் கொள்ளப் போகிறாய்?" என்று கேட்டது.



"வேலையா? நான் தயார்! கொடுங்கள் செய்கிறேன்" என்றது குட்டி.

"அப்படியா! இதோ இந்த மூட்டை நெல்லை ஆலைக்கு கொண்டு போ, பார்க்கலாம்!" என்றது அம்மா.

குட்டி சுறுசுறுப்பாக இயங்கியது. மூட்டையை முதுகில் ஏற்றிக் கொண்டது. மகிழ்ச்சியாக ஆலையை நோக்கி நடைபோட்டது. கொஞ்ச தூரம் தான் நடந்திருக்கும். தீடீரென்று நின்றுவிட்டது. "ஐயோ! இதென்ன! ஆறு! தண்ணீர் ஓடிக் கொண்டிருக்கிறதே! இதைக் கடப்பதா வேண்டாமா?" குழப்பத்துடன் சுற்றும் முற்றும் பார்த்தது.

அருகே ஒரு காளை புல் மேய்ந்து கொண்டிருந்தது. "காளை மாமா! இந்த ஆற்றை நான் கடக்கலாமா?" என்றது குட்டி.



பார்த்தாலே தெரியவில்லையா?
தண்ணீர் என் முழங்கால் அளவு
கூட இல்லை.
உன்னால்
ஏன் கடக்க
முடியாது?"
என்றது காளை.



குட்டிக் குதிரைக்குத் தைரியம் வந்தது. தண்ணீரை நோக்கி நடந்தது.

"ஏய்! நில்...நில்... அவசரப்படாதே," என்று ஒரு குரல் கேட்டது.

"யாரது? குட்டி தலையை நிமிர்த்தி மேலே பார்த்தது. மரக்கிளையில் ஒரு அணில்.

"அந்தக் காளை சொல்வதை நம்பாதே. ஆறு ஆழமானது. இந்த ஓடும் நீர் நேற்று என் நண்பனை இழுத்துச் சென்று விட்டது," என்றது.

'ஆறு ஆழமானதா இல்லையா?' குட்டிக் குதிரைக்கு ஒரே குழப்பம். 'வீட்டுக்குப் போய் அம்மாவைக் கேட்போமா?' குட்டிக் குதிரை வீடு திரும்பியது. அம்மாவுக்கு ஆச்சரியம்.

"அதற்குள் ஏன் திரும்பிவிட்டாய்?" என்று கேட்டது.

"வழியில் ஒரு ஆற்றைப் பார்த்தேன். அது ஆழமானதாமே," என்றது குட்டி.



"யார் சொன்னது? நான் தினமும் எத்தனையோ முறை போய் வருகிறேன்," என்றது அம்மா. "இல்லை அம்மா! காளை மாமா ஆற்றைக் கடக்கலாம் என்கிறார். ஆனால் அணிலோ ஆற்று நீர் அடித்து சென்று விடும் என்கிறது. நான் என்ன செய்வது?" என்று கேட்டது குட்டி.

அம்மா முகத்தில் ஒரு புன்சிரிப்பு. "காளை மாமாவின் உயரம் என்ன? அணிலின் உயரம் என்ன? அணிலையும் உன்னையும் ஒப்பிட்டுப் பார். யார் உயரமானவர்? நன்றாக யோசித்துப் பார்! ஆற்றைக் கடக்க முடியுமா முடியாதா என்பது உனக்கே புரியும்". என்று சொல்லி முடித்தது.

'ஆஹா இப்போது புரிந்து விட்டது. ஆறு ஆழமில்லை இது ஏன் முன்பே எனக்கு புரியவில்லை?' குட்டி மகிழ்ச்சியுடன் துள்ளியபடி மீண்டும் ஆற்றை நோக்கி நடந்தது.



சீன நாட்டுக் கதை





P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : Uma Krishnaswamy

# எங்கள் பூனைக்குட்டி





பானுவும் வேணுவும் ஒரு பூனை வளர்த்து வந்தனர். ஒரு நாள் அது காணாமல் போய்விட்டது. எங்குத் தேடியும் கிடைக்கவில்லை. மூன்று நாட்கள் ஓடிவிட்டன.

நான்காவது நாள்...

"மியாவ்... மியாவ்..."

'சத்தம் எங்கிருந்து வருகிறது?' பானு ஏணியில் ஏறிப் பார்த்தாள். "நம் பூனை பரண்மேல் இருக்கிறது வேணு. அதற்குக் குட்டிகள்கூட இருக்கின்றன. சீக்கிரம் வந்து பார்." என்றாள். வேணுவும் மேலே ஏறிப் பார்த்தான்.



அங்கே அவர்களது பூனை ஒரு கூடையில் படுத்திருந்தது. அதனுடன் ஐந்து குட்டிகள் இருந்தன.

பானுவுக்கும் வேணுவுக்கும் ஒரே பெருமை. வீட்டுக்கு யார் வந்தாலும் பூனைக் குட்டிகளைக் காட்டி மகிழ்ந்தனர்.

குட்டிகள் வளர்ந்து அங்குமிங்கும் ஓடத் தொடங்கின. ஒன்றின் மேல் ஒன்று ஏறிப் புரண்டன. உருண்டு விளையாடின. சண்டையிட்டன. பானைகளிலும் பாத்திரங்களிலும் புகுந்து உருட்டித் தள்ளின.

பானுவும் வேணுவும் சாம்பல் நிறக் குட்டியைத் தங்களிடம் வைத்துக் கொண்டனர். மற்ற நான்கையும் நண்பர்களுக்குக் கொடுத்துவிட்டனர். சாம்பல் குட்டிக்குத் தினமும் அவர்கள் உணவு கொடுப்பார்கள். நேரம் போவதே தெரியாமல் அதனுடன் விளையாடுவார்கள். அதைத் தங்களுடனேயே தூங்க வைப்பார்கள்.

ஒரு நாள் பானுவும் வேணுவும் சாம்பல் குட்டியை வெளியே தூக்கிச் சென்றார்கள். அருகில் ஒரு வைக்கோல் போர் இருந்தது. காற்றில் அசையும் வைக்கோலைப் பிடிக்கச் சாம்பல் குட்டி தாவித் தாவிக் குதித்தது.

அதன் விளையாட்டைப் பார்த்துக் குழந்தைகள் சிரித்தனர். சிறிது நேரம் கழித்துக் குழந்தைகள் வேறு விளையாட்டில் இறங்கினர். பூனைக் குட்டியை மறந்துவிட்டனர்.

இருட்டிவிட்டது. வீடு திரும்ப நினைத்தபோது பூனைக் குட்டியைக் காணவில்லை. எங்குத் தேடியும் அது கிடைக்கவில்லை. அழுது கொண்டே இருவரும் வீட்டுக்கு வந்தனர்.

'ஐயோ பாவம்! சாம்பல் குட்டிக்கு யார் பால் கொடுப்பார்கள்? இந்தக் குளிரில் அது எங்கே தூங்கும்?' என்று அதைப் பற்றியே பேசிக் கொண்டிருந்தனர். அவர்கள் கையில் புத்தகம் இருந்தது. ஆனால் மனமெல்லாம் பூனைக்குட்டி மேல்தான் இருந்தது.



திடீரென்று மூலையில் இருந்த தொப்பி நகர ஆரம்பித்தது. “ஐயோ! தொப்பி நகர்கிறதே,” என்றாள் பானு. இருவரும் மிரண்டுபோய் அடுத்த அறைக்கு ஓடினர். தொப்பி நகர்ந்து நகர்ந்து அவர்களைப் பின் தொடர்ந்தது.

“அம்மா! அம்மா! இங்கே பாருங்கள்! தொப்பி தானாக நகர்கிறது!” என்று கத்தினர். அம்மாவும் ஓடி வந்தாள். தொப்பிக்கு வெளியே சாம்பல் நிற வால் தெரிவதைக் காட்டிச் சிரித்தாள்.

“ஓ! இது நம் பூனைக் குட்டிதான்!” என்றாள் பானு.

“நீ இங்கேதான் ஒளிந்திருக்கிறாயா? உன்னை எங்கெல்லாம் தேடினோம் தெரியுமா?” என்று கூறிக் குழந்தைகள் பூனைக் குட்டியை அன்புடன் அணைத்துக் கொண்டனர்.

தழுவல் : ரஷ்யக் கதை






P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : S. P. Raju

# மாய மத்தளம்



ஜப்பான் நாட்டில் முன்னொரு காலத்தில் ஜென்கோரா என்ற ஒரு சிறுவன் இருந்தான். அவனிடம் ஒரு மத்தளம் இருந்தது. அதன் ஒரு பக்கத்தைத் தட்டி, "நீள மூக்கு, நீள மூக்கு," என்று சொன்னால் உடனே மூக்கு நீண்டுவிடும். அதன் மறுபக்கத்தைத் தட்டிச் "சப்பை மூக்கு, சப்பை மூக்கு," என்றால் மூக்கு சப்பையாகிவிடும்.

யாருக்கெல்லாம் மூக்கு நீளமாக வேண்டுமோ அல்லது சப்பையாக வேண்டுமோ அதற்கு ஏற்றபடி ஜென்கோரா மத்தளத்தைத் தட்டி உதவுவான்.



ஒருநாள் அவன் மாய மத்தளத்தைத் தட்டித் தன் மூக்கை எவ்வளவு தூரம் நீட்ட முடியும் என்று பார்க்க ஆசைப்பட்டான்.

ஒரு விளையாட்டு மைதானத்தை அடைந்தான். மத்தளத்தைத் தட்ட ஆரம்பித்தான். மூக்கு நீண்டு கொண்டே போனது. அவனால் நிற்க முடியவில்லை. தரையில் படுத்துக் கொண்டான். மத்தளத்தைத் தட்டிக் கொண்டே இருந்தான்.

மரத்தின் உயரத்துக்கு மூக்கு நீண்டது. பிறகு மலையையும் தாண்டியது. கடைசியாக விண்ணை எட்டியது.



அங்கே விண் உலகில் தச்சர்கள் பாலம் கட்டிக் கொண்டிருந்தனர். அவர்கள் சிறுவனின் மூக்கு நுனியைப் பாலத்தோடு சேர்த்து ஆணி அடித்துவிட்டனர்.

தன் மூக்கு நுனியில் ஏதோ நடப்பதைச் சிறுவன் உணர்ந்தான். அதற்கு மேல் மத்தளத்தைத் தட்டி மூக்கை நீட்ட முடியவில்லை. சிறுவன் மூக்கின் நீளத்தைக் குறைக்க எண்ணி மத்தளத்தின் மறுபக்கத்தைத் தட்டினான்.



மூக்கின் நீளம் குறைய ஆரம்பித்தது. ஆனால் அதுதான் ஆணியில் மாட்டிக் கொண்டிருந்ததே! நீளம் குறையக் குறையச் சிறுவன் வானத்தை நோக்கித் தூக்கிச் செல்லப்பட்டான். அங்கே மூக்கு நுனி பாலத்தோடு இணைந்திருப்பதைப் பார்த்தான்.

ஆணியைப் பிடுங்கினான். ஆ! கீழே விழத் தொடங்கினான். நல்ல வேளை! கீழே இருந்த ஒரு குளத்தில் 'தொப்'பென்று விழுந்தான்.

நீந்தத் தொடங்கினான். சிறிது சிறிதாக அவன் கைகால்கள் உடல் எல்லாம் மீனைப்போல மாறின. இன்றும் அந்தக் குளத்தில் வாழும் மீன்களெல்லாம் ஜென்கோராவின் குடும்பத்தினர்தான் என்று சொல்கிறார்கள்.

மூலம் : ஜப்பானிய நாட்டுப்புறக் கதை



# கவிஞர் ஏழுமலை



ஏழுமலை எப்போதும் கற்பனையில் மிதந்து கொண்டே இருப்பான். சன்னலருகே உட்கார்ந்து மணிக்கணக்கில் வெளியே பார்த்துக் கொண்டே இருப்பான். யாராவது, "என்ன செய்கிறாய்?" என்று கேட்டால், பாட்டுக் கட்டுவதாகக் கூறுவான்.

*"வட்டமான பள்ளம், பள்ளம் நிறைய வெள்ளம், கட்டுக்கட்டாய்க் கரும்பு, கரும்பு தின்னும் எறும்பு,"* என்று சொற்களைக் கோர்த்துக் கோர்த்துச் சொல்லுவான். "இதோ, கவிஞர் ஏழுமலை வருகிறார்!" என்று சிறுவர்கள் அவனைக் கேலி செய்வார்கள்.

ஒருநாள் ஏழுமலை தன் பாட்டி ஊருக்குப் போய்க் கொண்டிருந்தான். வழிநெடுக மரங்கள், தோட்டங்கள், பறவைகள்! மிக அழகாக இருந்தன.



சட்டைப் பையிலிருந்த பட்டாணியைக் கொறித்துக் கொண்டே சுற்றிலும் நோட்டம் விட்டான் ஏழுமலை. அருகில் ஒரு பனைமரம்! உடனே ஏழுமலை, *"நெட்டைப் பனைமரம் நிற்குமாம் போலே போலே..."* என்று பாடினான்.

மேலும் சிறிது தூரம் நடந்தான். ஆந்தை ஒன்று அவன் கண்ணில் பட்டது. அதைப் பார்த்து, *"ஆந்தை முழிக்குமாம் போலே போலே,"* என்று பாடினான். ஏழுமலைக்கு உற்சாகம் பொங்கியது.

*"நெட்டைப் பனைமரம் நிற்குமாம் போலே போலே*
*ஆந்தை முழிக்குமாம் போலே போலே,"*

என்று பாடிக் கொண்டே நடந்தான்.



தூரத்தில் நாய் ஒன்று மண்ணைத் தோண்டிக் கொண்டிருந்தது. ஏழுமலையின் கண்ணுக்கு அது நரிபோல் தெரிந்தது. உடனே, *"நரி வளையைத் தோண்டுமாம் போலே போலே,"* என்று பாடினான்.

ஆகா! அற்புதம்! ஏழுமலைக்குத் தலைகால் புரியவில்லை.

*"நெட்டைப் பனைமரம் நிற்குமாம்*
*போலே போலே*
*ஆந்தை முழிக்குமாம்*
*போலே போலே*
*நரி வளையைத் தோண்டுமாம்*
*போலே போலே,"*



பாடிக் கொண்டே பாட்டி வீட்டை அடைந்தான். அப்போது இருட்டிவிட்டது. ஐயோ! இதென்ன! பாட்டி வீடு பூட்டி இருக்கிறதே! ஏழுமலை ஏமாற்றம் அடைந்தான். அருகே ஒரு பாழடைந்த வீடு. வீட்டுத் திண்ணையில் படுத்துத் தூங்கிவிட்டான். நடு இரவில் ஏதோ சத்தம். திடுக்கிட்டு எழுந்தான்.

சன்னல் வழியாகப் பார்த்தான். இரண்டு நீண்ட கால்கள் தெரிந்தன. தூக்கக் கலக்கத்தில் இருந்த ஏழுமலைக்கு அவை பனை மரம் போலத் தெரிந்தன. *"நெட்டைப் பனைமரம் நிற்குமாம் போலே போலே,"* என்று பாடினான்.

பாட்டைக் கேட்டு உள்ளே இருந்த திருடன் 'திருதிரு' என்று முழித்தான்.

அதைக் கண்ட ஏழுமலை, *"ஆந்தை முழிக்குமாம் போலே போலே,"* என்று பாடினான்.

'யாரோ வருகிறார்கள், திருடியதைப் புதைத்து வைப்போம்,' என்று எண்ணித் திருடன் மண்ணைத் தோண்ட ஆரம்பித்தான்.

அதைக் கண்ட ஏழுமலை, *"நரி வளையைத் தோண்டுமாம் போலே போலே,"* என்று பாடினான். திருடன் கையில் இருந்ததைப் போட்டுவிட்டு ஓட ஆரம்பித்தான்.

உடனே ஏழுமலை "திருடன். . . திருடன். . ." என்று கத்தினான். அக்கம்பக்கத்தில் இருந்தவர் எல்லோரும் ஓடி வந்து திருடனைப் பிடித்தனர். ஏழுமலையைப் பாராட்டினர். அன்று முதல் கவிஞர் ஏழுமலையின் பாட்டை எல்லோரும் ரசித்துக் கேட்டனர்.






P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : S. P. Raju

# வருவது யார்?

சர்ர்ர்ரக். . . . சர்ர்ர்ரக். . . .

சர்ர்ர்ரக். . . . சர்ர்ர்ரக். . . .

சர்ர்ர்ரக். . . . சர்ர்ர்ரக். . . .

என்ன சத்தம் இது?

ஆந்தை தன் பெரிய கண்களை உருட்டி உருட்டிப் பார்த்தது. அதற்குத்தான் மிக மெல்லிய ஒலி கூடத் தெளிவாகக் கேட்குமே! காதைத் தீட்டிக் கொண்டு கேட்டது.

சத்தம் கேட்டு முயல் அதிர்ந்தது. பொந்துக்குள் புகுந்து கொண்டது. தலையை மட்டும் வெளியே நீட்டிப் பார்த்தது.





பாம்பும் சத்தத்தைக் கேட்டது. சட்டென்று தலையைத் தூக்கிப் படம் விரித்தது. சுற்று முற்றும் பார்த்தது.

சர்ர்ர்ரக். . . . . சர்ர்ர்ரக். . . . .
சத்தம் மெள்ள அருகே நெருங்கியது.



பச்சோந்தியும் சத்தத்தைக் கேட்டது. அதுதான் தந்திரமாக ஒளிந்து கொள்ளுமே! உடனே தன் நிறத்தை மாற்றியது. இலைகளுக்குள் இலையாகத் தோன்றியது.

வண்ணத்துப்பூச்சி தன் சிறகுகளைப் படபடவென அடித்தது. பிறகு சிறகுகளை மடக்கி வைத்துக் கொண்டது. பூக்களுக்கு இடையே அசையாமல் அமர்ந்தது. அதுவும் பூவின் இதழைப்போல் தோன்றியது.



ஊர்ந்து கொண்டிருந்த நத்தை நின்றது. உடலை ஓட்டுக்குள் இழுத்துக் கொண்டது. கல்லோடு கல்லாகக் கிடந்தது.





சர்ர்ர்ரக். . . . . சர்ர்ர்ரக். . . . .

முள்ளம்பன்றி உடலைச் சிலிர்த்தது. முட்களை நிமிர்த்தித் தயாராக நின்றது.



நடந்து கொண்டிருந்த நண்டு வளைக்குள் மறைந்தது.



இலையில் அமர்ந்து பாடிக்கொண்டிருந்த தவளையும் சத்தத்தைக் கேட்டது. ஒரே தாவலில் தண்ணீரில் குதித்து விட்டது.

சர்ர்ர்ரக். . . . சர்ர்ர்ரக். . . . சத்தம் நெருங்கிக் கொண்டே வந்தது. சத்தம் வந்த திசையையே எல்லாம் பார்த்துக் கொண்டிருந்தன.



அந்த வளைந்த பாதையில் யார் வருகிறார்கள்?

ஓ! நம் அட்டைப் பூச்சிதான்!

அதன் ஒவ்வொரு காலிலும் ஒரு செருப்பு! நடக்கத் தெரியாமல் நடந்து வந்து கொண்டிருந்தது.







P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : Uma Krishnaswamy

# ஓட்டப் பந்தயம்



அது ஒரு கோடைக்காலம். யானை ஒன்று குளத்தில் நன்றாக நீந்தி மகிழ்ந்தது. பிறகு தன் வீட்டை நோக்கி நடந்தது. வழியில் எறும்புகள் சாரை சாரையாகச் சென்று கொண்டிருந்தன. அவற்றைப் பார்த்த யானைக்குக் கோபம் வந்தது. “நான் வருவது உங்களுக்குத் தெரியவில்லையா? அற்பப் பிராணிகளே!” என்றது.

இதைக் கேட்ட ஒரு தைரியசாலி எறும்பு, “நாங்கள் சிறியவர்கள்தான். ஆனால் அற்பமானவர்கள் அல்ல,” என்றது.



யானை, “சிறிய எறும்பே! என்ன தைரியம் உனக்கு? எதிர்த்தா பேசுகிறாய்! உன்னால் யாருக்கு என்ன பயன்? என்னைப் பார்! வலிமையானவன். என்னால் எதை வேண்டுமானாலும் செய்ய முடியும்!” என்றது.

“நாங்கள் மட்டும் குறைந்தவர்களா? நீ செய்வதை எல்லாம் எங்களாலும் செய்ய முடியும்,” என்றது எறும்பு சளைக்காமல்.

“ஓ! அப்படியா! என்னுடன் ஓட்டப் பந்தயத்தில் உன்னால் ஓட முடியுமா?” என்றது யானை கேலியாக.



“ஓ! தாராளமாக. உன்னை நிச்சயம் தோற்கடித்தும் விடுவேன்,” என்றது எறும்பு தன்னம்பிக்கையுடன்.



யானை கோபத்துடன் பிளிறியது. “முட்டாள் எறும்பே! என்னுடைய சில தப்படிகளைக் கடக்க உனக்கு ஒரு யுகம் பிடிக்கும்! இரு இரு! உனக்கு நான் ஒரு பாடம் கற்பிக்கிறேன். இப்போதே வா பந்தயத்திற்கு!” என்றது.

பந்தயம் தொடங்கியது. யானை மெல்ல ஓடியது. சிறிது தூரம் சென்றதும் சிரித்துக் கொண்டே கீழே பார்த்தது. ஆ! எறும்பு! “அட! நீ இன்னுமா ஓடுகிறாய்?” வியந்தபடியே மேலும் ஓடியது யானை.

‘எறும்பு எங்கே இவ்வளவு தூரம் வந்திருக்கப் போகிறது!’ என்று நினைத்துக் கொண்டே மீண்டும் யானை கீழே பார்த்தது. என்ன ஆச்சரியம்! மிக அருகில் எறும்பு!

யானை வேகமாக ஓடத் தொடங்கியது. மலைகளைக் கடந்தது. பாறைகளைத் தாண்டியது. வளைந்த பாதைகளில் செடி கொடிகளை

மிதித்துத் தள்ளியபடி ஓடியது. 'வெற்றி நிச்சயம் எனக்குத்தான்,' என்று நினைத்தபடி கீழே பார்த்தது. அப்போதும் எறும்பு கூடவே வந்து கொண்டிருந்தது.

யானைக்குக் களைப்பாக இருந்தது. மூச்சு வாங்கியது. 'இனிப் பந்தயத்தை முடித்து விடலாம்,' என்று கீழே பார்த்த போதெல்லாம் எறும்பு கூடவே வருவதைப் பார்த்தது. "நானா தோற்பேன்," என்று யானை இன்னும் வேகமாக ஓடியது.

போட்டியைப் பற்றி அறிந்த மற்ற விலங்குகள், "சபாஷ்! ஓடு எறும்பே! ஓடு," என்று கத்தின. இந்தக் குரல்கள் யானையின் கோபத்தை மேலும் அதிகரித்தது. அதன் கால்கள் வலித்தன. யானையால் ஓடவே முடியவில்லை. தள்ளாடியபடி ஒரு பள்ளத்தில் விழுந்தது.



நிமிர்ந்து மேலே பார்த்த போது, அங்கே எறும்பு! "நான் உன்னைத் தூக்கமாட்டேன் போ," என்றபடி எறும்பு நகர்ந்து சென்றது. எல்லா விலங்குகளும் குழியிலிருந்த யானையை வேடிக்கை பார்த்தன. "யாராவது என்னைக் குழியிலிருந்து வெளியே எடுங்களேன்," என்று கெஞ்சியது யானை. விலங்குகள் யானை மேல் இரக்கம் கொண்டன. அது வெளியே வர உதவின.

'பந்தயத்தில் எறும்பு எப்படி வென்றது?' குழம்பியபடி யானை வீட்டை நோக்கி நடந்தது.

பாவம் யானை! அதற்குத் தெரியவே தெரியாது. ஒவ்வொரு முறையும் அது பார்த்தது வெவ்வேறு எறும்புகள்! ஏராளமான எறும்புகள் எங்கும் ஓடிக் கொண்டிருக்கின்றன அல்லவா! அவற்றைத்தான் யானை பார்த்திருக்கிறது. தான் முதலில் பார்த்துப் பேசிய எறும்புதான் பந்தயத்தில் ஓடியது என்று நினைத்துவிட்டது.

மூலம் : இந்திய நாட்டுப்புறக் கதை







P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : Uma Krishnaswamy

# நிலா இரவில் ஏன் வருகிறது? 43

முன்னொரு காலம். ஒரு நாள் நிலா சூரியனை உற்றுப் பார்த்தது. 'ஓ! இந்தச் சூரியன் என்னைவிடப் பெரியதாகவும் பிரகாசமாகவும் இருக்கிறதே!' தூங்கிக் கொண்டு இருந்த ஆந்தையை நிலா எழுப்பியது. "சூரியன் தன் ஒளியை எங்கு ஒளித்து வைக்கிறது என்று கண்டுபிடித்து வருவாயா?" என்றது நிலா.

"ஓ! தாராளமாக," என்றது ஆந்தை. "நன்றி! நாளை சூரியன் மறைந்தபின் அந்த முள் புதரின் பின்னால் சந்திப்போம்," என்று ரகசியமாகக் கூறியது நிலா.

ஆந்தை பறந்து சென்றுவிட்டது. ஆனால் நிலாவால் நிம்மதியாக இருக்க முடியவில்லை.



'சூரியனின் ஒளி எங்கே இருக்கிறது என்று ஆந்தையால் எப்படிக் கண்டுபிடிக்க முடியும்? ஐயோ! ஆந்தை சூரியனை எழுப்பி விட்டால்..... இல்லை! இல்லை! ஆந்தை ஒரு போதும் அப்படிச் செய்யாது!' இப்படிப் பலவாறாக சிந்தித்தது நிலா.

மறுநாள் நிலாவால் மாலை வரை காத்திருக்க முடியவில்லை. பொழுது விடிந்ததுமே முள்புதருக்குச் சென்றது. சூரியன் மறையும்வரை அங்கேயே காத்திருந்தது. ஆந்தை வருகிறதா என்று அவ்வப்போது எட்டி எட்டிப் பார்த்துக் கொண்டே இருந்தது.

ஆந்தை வந்ததும், "ஆ! வந்துவிட்டாயா? எனக்குக் கவலையாக இருந்தது," என்றது நிலா பதற்றத்துடன்.

"தூங்குவதற்கு முன் சூரியன் தன் ஒளியை ஒரு பெட்டிக்குள் வைக்கிறது," என்று உற்சாகமாகச் சொன்னது ஆந்தை. "மிக்க நன்றி, அந்த ஒளியில் எனக்குக் கொஞ்சம் கொண்டு வந்து தருவாயா?" என்றது நிலா தயங்கியபடி.



“ஓ! நிச்சயமாக!” என்றது ஆந்தை. “நாளை இதே இடத்தில் இதே நேரத்தில் சந்திப்போம்!” என்று கிசுகிசுத்தது நிலா. ஆந்தை சூரியனின் வீட்டை நோக்கி மீண்டும் பறந்தது.

‘ஆந்தை பிடிபட்டுவிட்டால்... ஓசைப்படாமல் அது உள்ளே நுழையுமா?’ அன்று கவலையுடன் தூங்கியது நிலா.

மறு நாள் மாலை. ஒரு துண்டு சூரிய ஒளியுடன் ஆந்தை புதருக்கு வந்து சேர்ந்தது. நிலா அதை அணிந்து கொண்டது. “அதற்குள்ளேயே நீ பிரகாசமாகிவிட்டாயே!” என்று புகழ்ந்தது ஆந்தை.

இதே போல் சில மாதங்கள் நடந்து வந்தது. ஒரு நாள் சூரியன் நிலாவைப் பார்த்தது. தன்னையும் பார்த்துக் கொண்டது. ‘ஓ! என்னுடைய ஒளியை நிலா திருடுகிறது!’ சூரியனுக்குப் புரிந்துவிட்டது.



அன்று இரவு சூரியன் தூங்கவில்லை. தன் ஒளியை ஆந்தை திருடுவதைப் பார்த்து விட்டது. ஆந்தையைப் பின்தொடர்ந்தது. ஆந்தை நிலாவிடம் ஒளியைத் தருவதையும் நிலா அதை அணிவதையும் பார்த்தது.

சூரியன் நிலாவின் முன் நேருக்குநேர் நின்று, "நீ ஏன் என் ஒளியைத் திருடிக் கொண்டே இருக்கிறாய்?" என்று அதிகாரமாகக் கேட்டது. "நீ என்னைவிடப் பிரகாசமாய் இருக்கிறாய்! அதனால்தான்!" என்றது நிலா.

கோபம் கொண்ட சூரியன் நிலாவிடமிருந்து அத்தனை ஒளியையும் உருவிக் கொண்டது. "இனி நீ பகல் முழுதும் தூங்கிக் கொண்டே இரு! இரவில் மட்டும்தான் வெளி வருவாய்," என்று தண்டித்தது.

இன்றும் ஆந்தையின் உதவியுடன் நிலா சூரிய ஒளியைத் திருடிக் கொண்டுதான் இருக்கிறது. ஆனால் விடிவதற்குள் திரும்பக் கொண்டுபோய் வைத்துவிடுகிறது.

**An American Indian Tale Retold by Nirupama Raghavan**





P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan Memorial Foundation, Chennai

Artist : Uma Krishnaswamy

# சிபியும் பருந்தும்





முன்னொரு காலத்தில் சிபி என்னும் ஓர் அரசன் இருந்தான். அவன் எல்லா உயிர்களிடமும் அன்பும் இரக்கமும் கொண்டவன். ஒரு நாள் சிபி தோட்டத்தில் உலவிக் கொண்டிருந்தான். அப்பொழுது ஒரு புறா வேகமாகப் பறந்து வந்தது. "காப்பாற்றுங்கள், காப்பாற்றுங்கள்," என்று கதறியது.



"பயப்படாதே! என்னை நம்பி வந்தவர்களை நான் ஒரு போதும் கைவிடமாட்டேன். நான் உன்னைக் காப்பாற்றுகிறேன்," என்றான் சிபி. புறாவை அணைத்துக் கொண்டான். அப்போது புறாவைத் துரத்திக் கொண்டு ஒரு பெரிய பருந்து அங்கே வந்தது. "புறாவை என்னிடம் தா! அது என்னுடைய இரை!" என்று சிபியிடம் கேட்டது.

"புறாவைக் காப்பாற்றுவதாகக் கூறி விட்டேன். சொன்ன சொல்லை மீறமாட்டேன். புறாவிற்குப் பதிலாக நீ எதைக் கேட்டாலும் தருகிறேன்," என்றான் சிபி.

"எனக்கு வேறு எதுவும் வேண்டாம். இந்தப் புறாதான் வேண்டும்," என்று பருந்து பிடிவாதம் செய்தது. சிபி பலவாறு அதைச் சமாதானப்படுத்த முயன்றான். முடியவில்லை. இறுதியில் பருந்து, "சரி! புறாவின் எடைக்குச் சமமாக உன் உடம்பிலிருந்து சதையைத் தருவாயா?" என்றது.

மகிழ்ச்சியுடன் சம்மதித்தான் சிபி. ஒரு தராசு கொண்டுவரச் செய்தான். புறாவை ஒரு தட்டில் வைத்தான். மற்றொரு தட்டில் தன் தொடையில் இருந்து சதையை அறுத்து வைத்தான்.



எல்லோரும் அதிர்ச்சியுடன் பார்த்துக் கொண்டிருந்தனர். புறா இருந்த தட்டு கீழேயே இருந்தது. மேலும் மேலும் தன் உடல் சதையை அறுத்து வைத்துக் கொண்டே இருந்தான் சிபி. ஆனாலும் புறாவின் தட்டு கீழேயே இருந்தது.



கடைசியில் சிபி தானே ஏறித் தட்டில் உட்கார்ந்தான். இரு தட்டுகளும் சம நிலையை அடைந்தன.

இந்த அதிசயத்தைக் கண்ட தேவர்கள் மனம் நெகிழ்ந்தனர். பூக்கள் தூவிச் சிபியை வாழ்த்தினர். புறாவும், பருந்தும் தேவர்களே. சிபியைச் சோதிக்கவே அவர்கள் தம் உருவங்களை மாற்றிக் கொண்டு வந்திருந்தனர்.

"சிறிய பறவைதானே என்று நினைக்காமல் உன் உயிரையே கொடுத்துப் புறாவைக் காப்பாற்றினாய். உன்னை உலகமே போற்றும்," என்று சிபியை வாழ்த்தி அவர்கள் மறைந்தனர்.




P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi
Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai
Artist : Uma Krishnaswamy

# பணிவான சீடர்கள்!

முன்னொரு காலத்தில் ஒரு குரு தன் நான்கு சீடர்களுடன் மாட்டு வண்டியில் பயணம் செய்து கொண்டிருந்தார். இதமான காற்று வீசிக் கொண்டிருந்தது.

குரு வண்டியில் சாய்ந்து தன்னையும் அறியாமல் தூங்கி விட்டார். பாதை மேடு பள்ளமாக இருந்ததால் வண்டி ஆடியது. அப்போது குருவின் தலைப்பாகை வண்டியிலிருந்து கீழே விழுந்து விட்டது.



சீடர்கள் தலைப்பாகை கீழே விழுவதைப் பார்த்தனர். என்ன செய்வது என்று தெரியாமல் திகைத்தனர். "என்னைக் கேட்காமல் எந்தக் காரியமும் செய்யக் கூடாது," என்று குரு சொல்லி இருக்கிறாரே! சீடர்கள் தலைப்பாகையை எடுக்காமல் விட்டுவிட்டனர்.

சிறிது நேரத்தில் குரு கண் விழித்தார். "எங்கே என் தலைப்பாகை?" என்று சீடர்களை விசாரித்தார். அவர்கள் நடந்ததைச் சொன்னார்கள்.

"அட முட்டாள்களே! தலைப்பாகை கீழே விழுவதைப் பார்த்துக் கொண்டே இருந்திருக்கிறீர்கள். ஆனாலும் எடுக்கவில்லை," என்று கடிந்து கொண்டார். "இனி வண்டியில் இருந்து எது விழுந்தாலும் உடனே எடுக்க வேண்டும் புரிகிறதா?" என்று கட்டளையிட்டார்.

குரு மீண்டும் கண் அயர்ந்தார். வண்டியில் இருந்து எது விழுந்தாலும் எடுத்து விடவேண்டும் என்று சீடர்கள் கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டே வந்தனர். திடீரென்று மாடு சாணம் போட்டது. சீடர்கள் உடனே அதை ஒரு கூடையில் சேகரித்து வண்டியில் வைத்தனர்.



கண் விழித்த குரு வண்டியில் சாணம் இருப்பதைப் பார்த்து அதிர்ந்தார். "என்ன இது?" என்று கூச்சலிட்டார்.

சீடர்கள், "நீங்கள் வண்டியில் இருந்து விழுவதை எல்லாம் எடுக்கச் சொன்னீர்கள் இல்லையா! அப்படியே செய்திருக்கிறோம்," என்றனர் பெருமையுடன்.

குரு செய்வதறியாது திகைத்துப் போனார். சாணத்தைத் தூக்கி எறியச் சொன்னார். பிறகு வண்டியிலிருந்து எது எது விழுந்தால் எடுக்க வேண்டும், எது எது விழுந்தால் எடுக்கக் கூடாது என்று ஒரு பட்டியல் போட்டார். "இனி இதுபோல் தவறு செய்யக் கூடாது," என்று கூறிப் பட்டியலை சீடர்களிடம் கொடுத்தார். மீண்டும் தூங்கிவிட்டார்.

வண்டி ஒரு கரடு முரடான பாதையில் சென்று கொண்டிருந்தது. எதிர்பாராமல் வண்டி சாய்ந்தது. குரு ஒரு குழியில் விழுந்துவிட்டார்.

"ஐயோ! என்னைக் குழியிலிருந்து வெளியே எடுங்களேன்!" குரு அலறினார்.



சீடர்கள் பட்டியலைப் பார்த்தனர். "நீங்கள் போட்ட பட்டியலில் உங்கள் பெயர் இல்லை. நாங்கள் உங்களைக் குழியிலிருந்து எடுக்கமாட்டோம்," என்று சொல்லிவிட்டனர். குரு எவ்வளவு கெஞ்சியும் சீடர்கள் மசியவில்லை. "நாங்கள் ஒரு போதும் உங்கள் கட்டளையை மீறமாட்டோம். எங்களைப் பரிசோதிக்கத்தான் நீங்கள் இப்படி செய்கிறீர்கள்," என்று சொல்லிவிட்டனர்.

வேறு வழியின்றிக் குரு பட்டியலையும், பேனாவையும் குழிக்குள் போடச் சொன்னார். பிறகு கிழே விழுந்தால் எடுக்க வேண்டிய பொருள்களின் பட்டியலில் தன் பெயரை அவசரமாகச் சேர்த்தார். பட்டியலைச் சீடர்களிடம் கொடுத்தார்.

அதன் பிறகுதான் சீடர்கள் அவரைக் குழியிலிருந்து எடுத்தனர்.






P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi
Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : S. P. Raju

# கிளியின் ஆலோசனைகள்



ஒரு வியாபாரியிடம் பேசும் கிளி ஒன்று இருந்தது. அதை அவன் வெள்ளிக் கூண்டில் வைத்திருந்தான். அன்புடன் வளர்த்து வந்தான். பழங்கள், கொட்டைகள் என்று கிளி கேட்பதை எல்லாம் கொடுத்து வந்தான்.

கிளி வியாபாரியிடம் மணிக்கணக்கில் பேசிக் கொண்டே இருக்கும். அவன் கேள்விகளுக்குப் புத்திசாலித்தனமாகப் பதில் கூறும். பேச்சு வாக்கில் அது வியாபாரியிடம், "என்னை விட்டுவிடு. நான் சுதந்திரமாக வாழ விரும்புகிறேன்," என்று கூறும்.





வியாபாரியோ "நீ வேறு எது வேண்டுமானாலும் கேள்! தருகிறேன்!" என்று கூறி மறுத்துவிடுவான்.

ஒரு நாள் கிளி "நீ என்னை விட்டுவிடு. நான் மூன்று ஆலோசனைகள் கூறுவேன். அவை என்றும் உனக்குப் பயன்படும்," என்றது. வியாபாரி சற்று யோசித்தான். பிறகு கூண்டைத் திறந்து விட்டான்.

கிளி அவன் கைமேல் தாவியது. "இதோ என் முதல் ஆலோசனை! செல்வத்தை இழந்துவிட்டால் வருந்தாதே!" என்றது. வியாபாரி "நீ புதிதாக ஒன்றும் சொல்லவில்லையே," என்றான் அசட்டையாக.

கிளி பாடிக்கொண்டே பறந்து சென்றது. வீட்டுக் கூரையில் அமர்ந்தது. "இதோ, என் அடுத்த ஆலோசனை! உன்னிடம் யார் எது சொன்னாலும் அப்படியே நம்பி விடாதே!" என்றது.



வியாபாரி எரிச்சலுடன், "இதெல்லாம் எனக்கு முன்பே தெரியும். எனக்குத் தெரியாத ஒன்றைச் சொல்," என்றான்.

கிளி, "உனக்குத் தெரியாததைச் சொல்லட்டுமா? என் வயிற்றில் விலை உயர்ந்த மாணிக்கக் கற்கள் இருக்கின்றனவே," என்று கூறிச் சிரித்தது.

வியாபாரி அதிர்ந்தான். "மாணிக்கக் கற்களா! ஐயோ! உன்னை விட்டுவிட்டேனே! நான் எவ்வளவு பெரிய முட்டாள்! வாழ்நாள் முழுதும் இதை நினைத்து நினைத்து வருந்தப் போகிறேன்," என்றான்.



கிளி, "பார்த்தாயா! செல்வத்தை இழந்து விட்டால் வருந்தாதே என்று இப்போது தானே சொன்னேன். அதற்குள் நீ வருந்துகிறாய். யார் எது சொன்னாலும் அப்படியே நம்பாதே என்றேன். ஆனால் என் வயிற்றில் மாணிக்கக் கற்கள் உள்ளன என்றதும் நம்பி விட்டாய். என் வயிற்றில் கற்கள் இருந்தால் நான் உயிருடன் இருக்க முடியுமா என்ன?" என்று கேலி செய்தது.

“இதோ! என் மூன்றாவது ஆலோசனை. யார் எது சொன்னாலும் புத்தியைப் பயன்படுத்தி ஆராய்ந்து பார். காதால் கேட்பதோடு மட்டும் நின்றுவிடாதே!” என்றது கிளி.



வியாபாரி வாயடைத்துப் போனான். கிளி பறந்து செல்வதைப் பார்த்தபடி நின்றான்.







P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : P. S. Raju

# கடலைக் கடந்த முயல்

ஒரு முயல் தினமும் மாலை வேளையில் கடற்கரைக்கு வரும். அங்குள்ள ஒரு பாறையின் மேல் உட்காரும். எதையோ யோசித்துக் கொண்டே இருக்கும்.

ஒரு நாள் சுறா மீன் ஒன்று கடலிலிருந்து துள்ளிக் கரைக்கு வந்தது. முயலைப்பார்த்து, "நண்பா நீ இங்கு தனியாக உட்கார்ந்து எதைப்பார்த்துக்கொண்டு இருக்கிறாய்?" என்று கேட்டது.



"கடலின் அந்தக் கரையில் உள்ள குன்றைப் பார்! எத்தனை அழகு!. கடலைக் கடந்து அந்தப்பக்கத்துக்குப் போக விரும்புகிறேன்" என்றது முயல்.

சுறா உரக்கச் சிரித்தது. "அடமுட்டாளே! உனக்கு நீச்சலே தெரியாது, பிறகு எப்படிக் கடலைக் கடப்பாய்?" என்றது.



"கடலைக் கடக்க ஏதாவது ஒரு வழியைத் தேடுவேன்" என்றது முயல்.

சுறாவின் முகத்தில் சிறிய புன்னகை. "நல்லது! நீ எப்படிக் கடக்கிறாய் என்று பார்க்கிறேன்" என்றது.

ஒரு நாள் முயலுக்கு ஒரு யோசனை தோன்றியது. அது சுறாவிடம்,

"நம் இருவரில் யாருக்கு அதிகமான நண்பர்கள் இருக்கிறார்கள், உனக்கா அல்லது எனக்கா?" என்று கேட்டது.

அதற்குச் சுறாமீன், "என்னிடம் தான் நிறைய நண்பர்கள், நான் உறுதியாகச் சொல்வேன்". என்றது.

"நல்லது. அப்படியானால் உன் எல்லா நண்பர்களையும் இந்தக் கரையில் இருந்து அந்தக் குன்று வரை ஒரே வரிசையில் நிற்கச் செய். நான் எண்ணிப் பார்க்க வேண்டும்" என்றது முயல்.

அதன்படியே எல்லாச் சுறா மீன்களும் ஒரே வரிசையில் நின்றுவிட்டன.

முயல் ஒரு சுறாமீனின் முதுகில் இருந்து அடுத்த சுறாமீன் மேல் தாவியபடி "ஒன்று, இரண்டு, மூன்று..." என்று





அப்பாடா! ஒரு வழியாக எதிர்க் குன்றுக்கு வந்துவிட்டது. அங்கு ஒரு பாறையின் மேல் குதித்தது.

"நன்றி! என் சுறா நண்பர்களே நீங்கள் அனைவரும் ஒரு பாலம் அமைத்துக் கொடுத்தீர்கள். கடலைக் கடக்க எனக்கு உதவி செய்தீர்கள்", என்று சொன்னது.

அப்போது தான் சுறா நண்பனுக்கு புரிந்தது - முயல் தன்னை முட்டாளாக்கி விட்டது என்று - சுறாவுக்கு கோபம் வந்தது.

ஆனாலும் முயலின் சாமர்த்தியத்தை நினைத்து மனதுக்குள் பாராட்டவும் செய்தது.

சுறா கரைக்கு வரும் போதெல்லாம் முயலைத் தேடும். ஆனால் முயல் அதன் கண்ணில் தென்படவேயில்லை. இப்படியே பல மாதங்கள் கழிந்தன.

திடீரென ஒருநாள் கரையில் அதே முயலைச் சந்தித்தது. முயல் நன்கு கொழுத்து இருந்தது. மகிழ்ச்சியுடன் சுறா நீரில் துள்ளியது. முயலைப் பார்த்துக் குரல் கொடுத்தது.

"நண்பா! நீ இப்போது திரும்பி வர விரும்புகிறாயா? இந்த முறை நீ என்னை முட்டாளாக்க முடியாது. கரையோரமாக நடந்து கொண்டே போ!" என்றது.

முயல் மிகுந்த தன்னம்பிக்கையுடன், "இல்லை, நானே மீண்டும் கடலைக் கடந்து அந்தக் கரைக்குச் சென்று விடுவேன்" என்றது.

பல நாட்கள் கடற்கரையில் உட்கார்ந்து முயல் யோசித்துக் கொண்டேயிருந்தது.

ஒரு நாள் அதற்கு ஒரு புதிய யோசனை உதித்தது.

மூலம் : ஜப்பானிய நாட்டுப்புறக்கதை



# கண்டுபிடிப்போம் வா



ஆடி அசைந்து வளைந்து ஆடும்
தங்க நிற மணிக்கொத்தால் தலை சாயும் - *அது என்ன?*

பூத்த பூக்கள் செடியிலிருக்க
சத்தான இதன் பயிர்கள்
கொத்துக் கொத்தாய் பூமிக்குள்
குவிந்திருக்கும் விந்தையாக - *அது என்ன?*

ஏறமுடியாத மரத்திலே
எண்ணாயிரம் காய்கள் - *அது என்ன?*

ஆடை உடுத்தியிருக்கும் - மனிதன் அல்ல
அதனுள்ளே முத்திருக்கும் - சிப்பியல்ல
தாடியுண்டு, மீசையுண்டு - கிழவனல்ல
தக்கதோர் உணவாகும் மக்களுக்கே - *அது என்ன?*

அடித்தால் வலிக்கும், கடித்தால் இனிக்கும் - *அது என்ன?*

என் குதிரை கறுப்புக் குதிரை
குளிப்பாட்டினால் வெளுப்புக் குதிரை - *அது என்ன?*

கோர்த்த முத்தும் கோர்க்கலாம்
கோபுரமும் கட்டலாம்
குலைந்த முத்து கோர்க்க யாராலும் முடியாது - *அது என்ன?*



*கேழ்வரகு, கரும்பு, நெல் பயிர், கம்பங்கதிர்,*
*வேர்க்கடலை, உளுந்து, மக்காச்சோளம்*







ஆறுகால் எனக்கு உண்டு
நறுமணம் அறிவேன்
நாற்றமும் அறிவேன்
தின்பண்டம் மீதும் அமருவேன்

*- நான் யார்?*



அடி மண்ணை மேல் அடுக்கிய
அற்புதச் சுரங்க மாளிகை
கோபுரம்போல் இருக்குது பார்
கொத்தும் பாம்பு குடியிருக்குதே பார் *- அது என்ன?*

வாயிலிருந்து நூல் எடுப்பான் - மந்திரவாதி அல்ல
வலைவிரித்துப் பதுங்கி இருப்பான் - வேடனும் அல்ல

*- அவன் யார்?*

இருந்தாலும், பறந்தாலும், இறந்தாலும்
இறக்கை மடக்காத பூச்சி *- என்ன பூச்சி?*



சின்னப்பட்டு சிகப்புப் பட்டு
நாம் எல்லோரும் விரும்பும்பட்டு
நாடெல்லாம் திரியும்பட்டு *- அது என்ன?*





அடர்ந்த கருங்காட்டில்
அடக்க ஆள் இல்லாமல்
விருப்பம்போல் வேட்டையாடி
வீரன்போல் உலாவுகிறான் - *அவன் யார்?*

வண்ண வண்ணப் பூக்களில் அமர்ந்து
உண்ணும் தேனை உறிஞ்சி உறிஞ்சி
தின்னத் தின்ன இனிப்பதென்ன
எழிலாய் திசையெங்கும் பறப்பது - *அது என்ன?*



நெருப்பைக் கட்டிக்கொண்டு பறக்கும்
இருட்டில் வெளிச்சம் கொடுக்கும் - *அது என்ன?*

டாக்டர் வந்தார், ஊசி போட்டார்
காசு வாங்காமல் பறந்து போனார் - *அவர் யார்?*

பாம்பு போன்ற சிறு பிராணி
கால்கள் நூறு இருக்கும்
நாம் வசிக்கும் வீட்டில் வாழும்
ஆபத்து மிக்க பிராணி - *அது என்ன?*









மண்ணிலே பிறந்து

மண்ணைக் குடைந்து

மண்ணையே உண்டு

மண்ணோடு வாழும் மாயாண்டி - *அவன் யார்?*

ஊர்ந்து தவழ்ந்து அலையும்

உழைப்பினில் உயரும்

கூர்ந்து நுகர்ந்து எங்கும்

கூடி இரையைச் சேர்க்கும் - *அது என்ன?*



இருட்டில் நான் இருப்பேன்

இடுக்குகளில் நான் வசிப்பேன்

ஈரத்தை நான் ரசிப்பேன்

சத்தம் கேட்டு ஓடிவிடுவேன் - *நான் யார்?*

ஆயிரம் பேர் கொண்ட அரண்மனையில்

அதிகாரம் ஒருத்திக்கே - *அவள் யார்?*

தொட்டாற் சுருங்கிக்கு

தொண்ணூறு கால் - *அது என்ன?*

*எறும்பு, ஈ, கொசு, பட்டுப்பூச்சி, மின்மினிப்பூச்சி, வண்ணத்துப்பூச்சி, பேன், கரையான், தட்டாம்பூச்சி, சிலந்தி, இராணித்தேனீ, மண்புழு, பூரான், மரவட்டை, கரப்பான் பூச்சி*







P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : Uma Krishnaswamy

# பேசாத பேச்சாளர்

முல்லா நசுருதீன் ஒரு புத்திசாலி. நல்ல பேச்சாளரும் கூட. எப்போதும் எல்லோரையும் சிரிக்க வைப்பார். சிந்திக்கவும் வைப்பார்.

ஒரு சமயம் அவரது ஊர் மக்கள் அவரை ஒரு கூட்டத்தில் பேச அழைத்தனர். முல்லாவிற்கு அதில் கலந்து கொள்ள விருப்பம் இல்லை. ஆனால் வேறு வழியின்றி ஒப்புக் கொண்டார். கடைசி நிமிடத்தில் எப்படியும் தப்பித்துக் கொள்ளலாம் என்று நினைத்தார்.



பேச வேண்டிய நாளும் வந்தது. முல்லா மேடையில் ஏறினார். கூட்டத்தினரைப் பார்த்து, "நான் என்ன பேசப் போகிறேன் என்று உங்களுக்குத் தெரியுமா?" என்று கேட்டார்.

"தெரியாது... தெரியாது..." என்று குரல்கள் வந்தன. முல்லாவுக்குக் கோபம் வந்துவிட்டது.

"எதுவுமே தெரியாதவர்கள் மத்தியில் நான் பேசத் தயாராக இல்லை," என்று சொல்லி விருட்டென்று கிளம்பி விட்டார்.

கூட்டத்தினர் குழப்பம் அடைந்தனர். அவர்களில் சிலர் முல்லாவின் வீட்டுக்குச் சென்றனர். அவரிடம் மன்னிப்புக் கேட்டனர்.



அடுத்த வெள்ளிக்கிழமை கூட்டத்தில் பேச அவரை மீண்டும் அழைத்தனர். முல்லாவும் ஒப்புக் கொண்டார். இந்த முறை முல்லாவுக்குக் கோபம் வராதபடி பார்த்துக் கொள்ள வேண்டும் என மக்கள் முடிவு செய்தனர்.



வெள்ளிக்கிழமை வந்தது. கூட்டம் துவங்கியது. முல்லா தன் பேச்சை ஆரம்பித்தார்.

"நான் என்ன பேசப் போகிறேன் என்று உங்களுக்குத் தெரியுமா?" என்று சென்ற வாரம் கேட்ட அதே கேள்வியைக் கேட்டார். திட்டமிட்டபடி அனைவரும் "தெரியும்! தெரியும்!!" என்று கத்தினர்.

"உங்களுக்கு ஏற்கனவே தெரிந்ததைப் பற்றி நான் ஏன் பேச வேண்டும்?" என்று கேட்டு விட்டு மேடையிலிருந்து நழுவிவிட்டார். என்ன செய்வது என்று தெரியாமல் எல்லோரும் திகைத்தனர். தங்களுக்குள் பேசி ஒரு முடிவுக்கு வந்தனர்.

மறு வெள்ளிக்கிழமையும் முல்லாவைப் பேச அழைத்தனர். முல்லாவும் வந்தார். "நான் என்ன சொல்லப் போகிறேன் என்று உங்களுக்குத் தெரியுமா?" என்று எப்போதும் போல் கேட்டார்.

முல்லாவைப் பற்றித்தான் எல்லோருக்கும் தெரியுமே! முன்பே முடிவு செய்தபடி பாதிப்பேர் "எங்களுக்குத் தெரியும்!" என்றனர். மீதிப்பேர் "எங்களுக்குத் தெரியாது" என்று பதில் கூறினர்.

"அப்படியா? நான் என்ன சொல்லப் போகிறேன் என்று தெரிந்தவர்கள் தெரியாதவர்களுக்குச் சொல்லுங்கள்," என்று கூறிவிட்டு முல்லா போய்விட்டார்.

கூட்டத்தினர் அசந்து விட்டனர்.




P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : P. S. Raju

# என் பெயர் என்ன?





தோட்டத்தில் பறந்து கொண்டிருந்த ஈ திடீரென்று தன் பெயரை மறந்துவிட்டது. அருகில் இருந்த கன்றுக் குட்டியிடம்,

*"கொழு கொழு கன்றே,*
*என் பெயர் என்ன?"* என்று கேட்டது. கன்று, "எனக்குத் தெரியாது. என் தாயைக் கேள்," என்றது. உடனே, ஈ பசுவிடம்

*"கொழு கொழு கன்றே,*
*கன்றின் தாயே, என் பெயர் என்ன?"* என்று கேட்டது.

பசு, "எனக்குத் தெரியாது. என்னை மேய்க்கும் ஆயனைக் கேள்," என்றது. உடனே, ஈ அவனிடம் போய்,

*"கொழு கொழு கன்றே,*
*கன்றின் தாயே,*
*தாயை மேய்க்கும் ஆயனே,*
*என் பெயர் என்ன?"* என்று கேட்டது.



ஆயன், "எனக்குத் தெரியாது. என் கையில் இருக்கும் கோலைக் கேள்," என்றான். ஈ, கோலைப் பார்த்து,

*"கொழு கொழு கன்றே,*
*கன்றின் தாயே,*
*தாயை மேய்க்கும் ஆயனே,*
*ஆயன் கைக்கோலே,*
*என் பெயர் என்ன?"* என்று கேட்டது.

உடனே, கோல், "அதோ தெரிகிறதே மரம், அதில் இருந்துதான் என்னை வெட்டினார்கள். அதைக் கேள்," என்றது. ஈ, மரத்தைப் பார்த்து,





*"கொழு கொழு கன்றே,*
*கன்றின் தாயே,*
*தாயை மேய்க்கும் ஆயனே,*
*ஆயன் கைக்கோலே,*
*கோல் வந்த கொடி மரமே,*
*என் பெயர் என்ன?"* என்று கேட்டது.







அதற்கு மரம், "எனக்குத் தெரியாது. என் கிளையில் இருக்கும் கொக்கைக் கேள்," என்றது. ஈ, கொக்கிடம்,

*"கொழு கொழு கன்றே,*
*கன்றின் தாயே,*
*தாயை மேய்க்கும் ஆயனே,*
*ஆயன் கைக்கோலே,*
*கோல் வந்த கொடி மரமே,*
*மரத்தில் இருக்கும் கொக்கே,*
*என் பெயர் என்ன?"* என்று கேட்டது.

கொக்கு "எனக்குத் தெரியாது. அதோ நான் வாழும் குளம். அதைக் கேள்," என்றது. ஈ, குளத்தைப் பார்த்து,

*"கொழு கொழு கன்றே,*
*கன்றின் தாயே, ....................*
*..........................................*
*மரத்தில் இருக்கும் கொக்கே,*
*கொக்கு வாழும் குளமே,*
*என் பெயர் என்ன?"* என்று கேட்டது.

அதற்குக் குளம், "இந்தப் பெரிய மீனைக் கேள்," என்றது. அதைக் கேட்ட ஈ, மீனிடம்,

*'கொழு கொழு கன்றே,*
*கன்றின் தாயே, ....................*
*..........................................*
*கொக்கு வாழும் குளமே,*
*குளத்தில் நீந்தும் மீனே,*
*என் பெயர் என்ன?"* என்று கேட்டது.

மீன் "எனக்கு எப்படித் தெரியும்? அதோ அந்த மீனவனைக் கேள்," என்றது. உடனே ஈ, மீனவனிடம் போய்,

*"கொழு கொழு கன்றே,*
*கன்றின் தாயே, ....................*
*..........................................*
*குளத்தில் நீந்தும் மீனே,*
*மீன் பிடிக்கும் மீனவா,*
*என் பெயர் என்ன?"*
என்று கேட்டது.

மீனவன், "எனக்குத் தெரியாது. இதோ, என் கையில் இருக்கும் கலயத்தைக் கேள்," என்று சொன்னான். ஈ கலயத்தைப் பார்த்து,

*"கொழு கொழு கன்றே,*
*கன்றின் தாயே, ....................*
*.............................................*
*மீன் பிடிக்கும் மீனவனே,*
*மீனவன் கைக் கலயமே,*
*என் பெயர் என்ன?"* என்று கேட்டது.

அதற்கு அந்தக் கலயம், "எனக்குத் தெரியாது. என்னைச் செய்த மனிதனைக் கேள்," என்றது. உடனே, ஈ, அவனிடம் சென்று,

*"கொழு கொழு கன்றே,*
*கன்றின் தாயே, ....................*
*.............................................*
*மீனவன் கைக் கலயமே,*
*கலயம் செய்யும் மனிதா,*
*என் பெயர் என்ன?"* என்று கேட்டது.

அதற்கு அவன், எனக்குத் தெரியாது. இந்த மண்ணைக் கேட்டுப் பார்," என்றான். உடனே, ஈ, மண்ணைப் பார்த்து,

*"கொழு கொழு கன்றே,*
*கன்றின் தாயே, ....................*
*.............................................*
*கலயம் செய்யும் மனிதா,*
*மனிதன் பிசையும் மண்ணே,*
*என் பெயர் என்ன?"* என்று கேட்டது.

அதைக் கேட்ட மண், "எனக்குத் தெரியாது. என் மேல் முளைத்திருக்கும் புல்லைக் கேள்," என்று கூறியது. உடனே, ஈ, புல்லைப் பார்த்து,

*"கொழு கொழு கன்றே,*
*கன்றின் தாயே, ....................*
*.............................................*
*மனிதன் பிசையும் மண்ணே,*
*மண்ணில் முளைக்கும் புல்லே,*
*என் பெயர் என்ன?"* என்று கேட்டது.



அதற்குப் புல், "எனக்கு எப்படித் தெரியும்? என்னை மேய்ந்து கொண்டிருக்கும் குதிரையைக் கேள்," என்றது. உடனே, ஈ, குதிரையிடம்,

*"கொழு கொழு கன்றே,*
*கன்றின் தாயே, ....................*
*..........................................*
*மண்ணில் முளைக்கும் புல்லே,*
*புல்லை மேயும் குதிரையே,*
*என் பெயர் என்ன?"* என்று கேட்டது.

குதிரை, "ஈ. . . ஈ. . . ஈ. . .," என்று கனைத்தது. அதைக் கேட்டதும் ஈக்குத் தன் பெயர் நினைவுக்கு வந்துவிட்டது.

"ஆகா! என் பெயர் ஈ! என் பெயர் ஈ!!" என்று பாடிக் கொண்டே பறந்து சென்றது.





P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : Uma Krishnaswamy

# ஏமாந்த பூதம்

காட்டிற்கு ஒரு புதிய குரங்குக் கூட்டம் வந்தது. அந்தக் கூட்டத்தின் தலைவன், "இந்தக் காட்டில் உள்ள ஒரு ஏரியில் பூதம் ஒளிந்து உள்ளது. அதனால் என்னைக் கேட்காமல் ஏரியில் நீர் குடிக்காதீர்கள்," என்று எச்சரித்தது.

ஒரு நாள் குரங்குகள் காட்டின் உள்ளே வெகு தூரம் சென்றுவிட்டன. ஒரு குட்டிக்குரங்கு "அம்மா! தாகமாக இருக்கிறது," என்றது.

"இதோ! ஏரி இருக்கிறதே! தண்ணீர் குடிக்கலாம் வா!" என்றது அம்மா!





"நில்லுங்கள்! ஏரிக்குப் போகாதீர்கள்! நம் தலைவன் எச்சரித்தது நினைவில்லையா?" என்றது இன்னொரு குரங்கு.

அதற்குள் தலைமைக் குரங்கே அங்கு வந்து விட்டது. "தண்ணீர் வேண்டுமா? பொறுங்கள்! நான் போய்ப் பார்த்து வருகிறேன்," என்றது.

தலைமைக் குரங்கு ஏரியின் அருகில் சென்றது. கூர்ந்து கவனித்தது. 'ஆ! எல்லாக் காலடிச் சுவடுகளும் ஏரியை நோக்கியே உள்ளன! ஏரியிலிருந்து திரும்பிய சுவடுகளைக் காணவில்லையே! பூதம் இங்குதான் ஒளிந்திருக்க வேண்டும்,' என்று யூகித்தது.

"இது ஒரு ஆபத்தான ஏரி. இதில் இறங்க வேண்டாம்," என்று தலைவன் சொல்லிக் கொண்டிருக்கும்போதே "ஹ...ஹ்...ஹா...ஹா" என்ற சத்தம் கேட்டது.



ஏரியிலிருந்து ஒரு பூதம் வெளியே வந்தது. "ஏரியில் யார் இறங்கினாலும் நான் அவர்களை விழுங்கி விடுவேன்," என்று மிரட்டியது.

"நாங்கள் யாரும் ஏரியில் இறங்கப் போவதில்லை," என்றது தலைமைக் குரங்கு.

"அப்படியானால் தண்ணீர் குடிக்காமல் இறக்கப் போகிறீர்களா?" பூதம் கேலி செய்தது.

"இல்லை! நாங்கள் தண்ணீர் குடிக்கத்தான் போகிறோம்," என்றது தலைவன் உறுதியுடன்.

"அது எப்படி?" என்றது பூதம் ஆச்சரியத்துடன்.

"பார்த்துக் கொண்டே இரு," என்று தலைவன் மற்ற குரங்குகளை அழைத்தது. அருகில் இருந்த மூங்கில் தண்டுகளைச் சேகரிக்கச் செய்தது. ஒவ்வொரு தண்டிலும் குழல் போல் உள்ளே துளை இருக்கிறதா என்று பார்த்தது.

பிறகு ஒரு தண்டை மற்றொன்றுக்குள் நுழைத்து நீண்ட குழாயை உருவாக்கியது. குழாயின் ஒரு முனையை ஏரிக்குள் செலுத்தியது. மற்றொரு முனை வழியாகத் தண்ணீரை வேகமாக உறிஞ்சியது.

தண்ணீர் பீறிட்டு அடித்தது. எல்லாக் குரங்குகளும் நனைந்தன. "ஹையா! என்ன சுவை!" ஆசை தீரத் தண்ணீர் குடித்தன.

பூதம் ஏமாந்து போனது. கோபத்துடன் ஏரிக்குள் மூழ்கி மறைந்தது.

மூலம் : ஜாதகக் கதைகள்




P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : S. P. Raju

# மேரியின் மகிழ்ச்சி

மேரியின் கையில் ஒரு தாள். அதில் ஒரு படம். "அட! இது என்ன? படமா? எங்கே காட்டு பார்க்கலாம்!" என்றாள் தீபா.

மேரியின் கண்ணில் கண்ணீர்! திடுக்கிட்டாள் தீபா. "ஏன் அழுகிறாய்?" என்று கேட்டாள்.



"நான் உன் வீட்டுத் தோட்டத்தை வரைந்தேன். ஆனால் ரகு அதைப் பார்த்துச் சிரிக்கிறான். நன்றாக இல்லை என்று கேலி செய்கிறான். நான் இனிமேல் படம் வரையப் போவதே இல்லை," என்று விசும்பினாள் மேரி.

"நன்றாக இல்லையா? அழகாகத்தான் வரைந்திருக்கிறாய். நாம் எல்லோரும் வெவ்வேறு வகையாகப் பார்க்கிறோம். சிந்திக்கிறோம். அவரவர் விருப்பம் போல வரைகிறோம். எல்லோரும் ஒரே மாதிரியாக வரையத் தேவையில்லை. நீ அழாதே!" என்றாள் தீபா. மேரிக்கு அது ஆறுதலாக இருந்தது.



மறு வாரம் தீபாவின் வீட்டுக்கு அவளது உறவினர் வந்திருந்தனர். அவர்களுடன் தீபா, மேரி இருவரும் கடற்கரைக்குச் சென்றனர். தீபா வண்ணப் பென்சில்களும், காகிதங்களும் கொண்டு வந்திருந்தாள்.

கடற்கரையில் சில மீனவர்கள் ஒரு படகைப் பழுது பார்த்துக் கொண்டிருந்தனர். எதிரே சிலர் மீன் பிடித்துக் கொண்டிருந்தனர். அதைப் பார்த்தபடி எல்லோரும் படம் வரைய ஆரம்பித்தனர்.

மேரி, "எனக்கு வரையத் தெரியாது," என்று முதலில் தயங்கினாள். பிறகு தன்னை அறியாமலேயே வரைவதில் மூழ்கிவிட்டாள்.

வரைந்து முடித்தபின் எல்லோரும் அவரவர் படங்களைக் காட்டினர். அவர்கள் பார்த்த கடற்கரைக் காட்சி ஒன்றுதான். ஆனால் ஒவ்வொருவரும் அதை ஒவ்வொரு விதமாக வரைந்திருந்தனர்.



இப்போது மேரிக்குப் புரிந்துவிட்டது. ‘அன்று தீபா சொன்னது சரிதான். எல்லோரும் ஒரே விதமாகப் பார்ப்பதில்லை. சிந்திப்பதில்லை. வரைவதும் இல்லை.’

உற்சாகத்துடன் மேரி தான் வரைந்த படத்தை எடுத்தாள். அதை வைத்து ஒரு கதை சொன்னாள். எல்லோருக்கும் ஒரே ஆச்சரியம். “நீ நன்றாகக் கதை சொல்கிறாயே!” என்று மேரியைப் பாராட்டினர். அன்று மேரி மிகவும் மகிழ்ச்சியாக இருந்தாள்.

இப்போதெல்லாம் மேரி தனக்குத் தோன்றியதை வரைகிறாள். யார் பாராட்டுகிறார்கள் என்றெல்லாம் பார்ப்பதில்லை. வரைந்து முடித்ததும் படங்களை வைத்து நிறையக் கதைகள் சொல்கிறாள்.




P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : S. P. Raju

## 53 பூமி பிளந்தது

ஒரு நாள் முயல் ஒரு சிறிய பனைமரத்தின் நிழலில் தூங்கிக் கொண்டிருந்தது. அருகில் ஒரு பெரிய வில்வமரம். அதிலிருந்து பழம் ஒன்று 'தொப்' என்று பனை ஓலையில் விழுந்தது.

திடுக்கிட்டுக் கண் விழித்தது முயல். 'ஐயோ! பூமி பிளந்துவிட்டது!' என்று நினைத்து ஓட ஆரம்பித்தது. ஒன்றும் புரியாமல் எல்லா முயல்களும் அதைப் பின்தொடர்ந்து ஓடின.

வழியில் மான், "ஏன் இப்படித் தலை தெறிக்க ஓடுகிறீர்கள்?" என்று ஒரு முயலைக் கேட்டது.



"பூமி பிளந்துவிட்டது. ஓடு! ஓடு!" என்றது முயல். மானும் ஓட ஆரம்பித்தது. வழியில் கரடி, "மானே நில்! ஏன் இப்படி ஓடுகிறாய்?" என்று கேட்டது.

"நீயும் ஓடு. பூமி பிளந்துவிட்டது!" என்று கூறி நிற்காமல் ஓடியது மான். கரடியும் ஓடியது.

கரடியைப் பார்த்த நரி, "கரடி அண்ணா! என்ன ஆயிற்று? எல்லோரும் ஏன் இப்படி ஓடுகிறீர்கள்?" என்று கேட்டது.

"பூமி பிளந்துவிட்டது! ஓடித் தப்பித்துக்கொள்!" என்று கத்திக் கொண்டே கரடி ஓடியது. இப்படியே எருமை, பன்றி, காண்டாமிருகம், யானை, புலி என்று ஓடும் விலங்குகளின் கூட்டம் பெருகிக் கொண்டே வந்தது.

தூரத்தில் விலங்குக் கூட்டம் ஓடி வருவதைப் பார்த்த சிங்கம் வியப்படைந்தது.



அவை அருகே வந்ததும், "நில்லுங்கள்! எல்லோரும் ஏன் இப்படி பயந்து ஓடுகிறீர்கள்?" என்று கேட்டது.

பேசமுடியாமல் திணறிய புலி, "பூமி பிளந்து விட்டது. ஓடு! ஓடு!" என்று சொல்லிக் கொண்டே ஓடியது.

'பூமி பிளந்துவிட்டதா? எதையோ தவறாக நினைத்து இந்த விலங்குகள் குழம்பி இருக்கின்றன. இவை ஓடுவதை உடனே நிறுத்த வேண்டும்,' என்று சிங்கம் நினைத்தது. காடே அதிரும்படி மூன்று முறை கர்ஜித்தது.

ஓடிக்கொண்டிருந்த விலங்குகள் 'கப் சிப்' என்று நின்றுவிட்டன. "பூமி பிளந்துவிட்டது என்று யார் சொன்னது? சொல்லுங்கள்," என்று கேட்டது சிங்கம்.



உடனே புலி, "எனக்கு யானைதான் சொன்னது," என்றது. யானையைக் கேட்டபோது, "எனக்கு எருமைதான் சொன்னது," என்றது. இப்படியே காண்டாமிருகம், கரடி, நரி, பன்றி, மான் என்று ஒவ்வொன்றும் மற்றது சொன்னதாகக் கூறின.

கடைசியாக முயலைக் கேட்டபோது, "ஆம்! பூமி பிளந்த சத்தத்தை நான்தான் கேட்டேன்" என்றது. "எங்கே! அந்த இடத்தைக் காட்டு," என்றது சிங்கம்.

தான் தூங்கிய இடத்தை முயல் காட்டியது. அந்த இடத்தின் அருகில் ஒரு வில்வப்பழம் உடைந்து கிடந்தது. எல்லோரும் அதைப் பார்த்துக் கொண்டிருக்கும் போதே 'தொப்' என்று இன்னொரு வில்வப்பழம் பனை ஓலையில் விழுந்தது.

"பார்த்தீர்களா! இந்தச் சத்தத்தைத்தான் முயல் கேட்டிருக்கும். தூக்கக் கலக்கத்தில் பூமி பிளந்து விட்டதாக நினைத்துவிட்டது," என்று சிங்கம் சிரித்தது.

எல்லா விலங்குகளும் சிரித்தன.

மூலம் : ஜாதகக் கதைகள்







P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : S. P. Raju

# கிராமத்தைக் காத்த சிறுவன் (54)



அது ஒரு கடற்கரைக் கிராமம். அங்கு அடிக்கடிப் புயல் வீசும். கடல்நீர் ஊருக்குள் புகுந்து பெரும் சேதத்தை ஏற்படுத்தும். எனவே ஊர் மக்கள் கடற்கரையை ஒட்டி நீண்ட தடுப்புச் சுவரைக் கட்டி வைத்தனர்.



தடுப்புச் சுவரை ஒட்டி நீண்ட பாதை இருந்தது. ஹான்ஸ் இந்தப் பாதை வழியாகத்தான் தினமும் பள்ளிக்குச் செல்வான். அவன் பள்ளி மூன்று கிலோ மீட்டர் தொலைவில் இருந்தது.



அது குளிர்காலம். சீக்கிரமே இருட்டி விட்டது. பலத்த காற்றும் வீசியது. எந்த நேரமும் புயல் வரும் போலத் தோன்றியது. பள்ளிக் கூடம் முடிந்து ஹான்ஸ் வேக வேகமாக வீடு திரும்பிக் கொண்டு இருந்தான்.

அப்போது பாதையில் நீர் இருப்பதைக் கண்டு திடுக்கிட்டான். 'எங்கிருந்து நீர் வருகிறது?' சுற்றும் முற்றும் பார்த்தான். தடுப்புச் சுவரிலிருந்து நீர் கசிவதைக் கண்டுபிடித்தான்.

'ஐயோ! சுவரில் சிறுதுளை இருக்கிறதே! இது பெரிதாகிவிட்டால் சுவர் உடைந்து விடுமே! வெள்ளம் புகுந்து கிராமமே அழிந்துவிடுமே! என்ன செய்யலாம்?' என்று யோசித்தான்.

துளையை அடைக்கக் கற்கள் கிடைக்குமா என்று தேடினான். அங்கு எதுவும் கிடைக்கவில்லை. "யாராவது வந்து உதவுங்களேன்," என்று உரக்கக் கூவினான். அக்கம் பக்கத்தில் யாருமே இல்லை. அவனுக்கு வேறுவழி எதுவும் தோன்றவில்லை. சட்டென்று தன் கையை வைத்துத் துளையை அடைத்தான்.

'ஹான்ஸ் ஏன் இன்னும் வீடு திரும்பவில்லை? மற்ற சிறுவர்கள் எல்லோரும் பள்ளியிலிருந்து வந்து விட்டார்களே!' அவன் பெற்றோர் கவலைப்பட்டனர். தேடத் தொடங்கினர்.

அவன் அப்பா கையில் விளக்குடன் பள்ளி செல்லும் பாதையில் நடந்தார். ஒரு இடத்தில் பாதை ஈரமாக இருப்பதைக் கவனித்தார்.



'நீர் எங்கிருந்து வருகிறது?' உற்றுப் பார்த்தார். தடுப்புச் சுவரோரம் யாரோ உட்கார்ந்து இருப்பதைப் பார்த்தார். அருகில் சென்றார்.

என்ன ஆச்சரியம்! அதுவேறு யாருமில்லை. ஹான்ஸ்தான்.

ஹான்ஸ் குளிரில் நடுங்கிக் கொண்டிருந்தான். களைத்துப் போய் இருந்தான். அப்பாவைப் பார்த்ததும் அவனுக்கு ஒரே மகிழ்ச்சி. "அப்பா, சுவரில் ஒரு துளை இருக்கிறது. என்னால் கையை எடுக்க முடியாது. நீங்கள் போய் ஆட்களை அழைத்து வாருங்கள். நான் இங்கேயே இருக்கிறேன்," என்றான்.

தான் போட்டிருந்த கம்பளிச் சட்டையை அப்பா அவன் மேல் பரிவுடன் போர்த்தினார். ஓடிச் சென்று ஆட்களை அழைத்து வந்தார். எல்லோரும் சேர்ந்து துளையை அடைத்தனர்.

அடுத்த நாள் காலை. ஊர்மக்கள் அனைவரும் ஹான்ஸ் வீட்டுக்குத் திரண்டு வந்தனர். பெரும் அழிவில் இருந்து கிராமத்தைக் காப்பாற்றியதற்காக ஹான்ஸைப் பாராட்டினர். பரிசுகள் அளித்தனர்.



மூலம் : ஹாலந்துச் சிறுகதை





Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : Uma Krishnaswamy

# விடாக்கண்டனும் கொடாக்கண்டனும் 

ஒரு ஊரில் இரண்டு நண்பர்கள் இருந்தனர். ஒருவனுக்கு அந்த ஊர் மக்கள் 'கொடாக்கண்டன்' என்ற பெயர் வைத்திருந்தனர். ஏனென்றால், அவன் யாருக்கும் எந்தப் பொருளையும் லேசில் கொடுக்கமாட்டான். இன்னொருவன் பெயர் 'விடாக்கண்டன்.' எத்தனை தடவை 'இல்லை' என்று சொன்னாலும் இவன் விடமாட்டான்.

ஒரு நாள் பலத்த மழை. விடாக்கண்டனிடம் குடை இல்லை. கொடாக்கண்டன் குடையை இரவல் கேட்டான். அதற்கு அவன், "நண்பா! நீ எப்போதும் உன் சொந்தக் காலிலேயே நிற்க வேண்டும் என்று நான் விரும்புகிறேன்.



இப்போது நான் உனக்குக் குடை கொடுத்து உதவினால் நீ குடை வாங்க மாட்டாய். எப்போது மழை பெய்தாலும் இரவல் வாங்குவாய்," என்று குடை தர மறுத்து விட்டான். விடாக்கண்டன் மழையில் நனைந்தபடியே திரும்பி விட்டான்.

மற்றொரு சமயம் நண்பர்கள் இருவரும் அஞ்சலகத்தில் சந்தித்தனர். அப்போது விடாக்கண்டன் ஒரு கடிதம் எழுத நினைத்தான். கொடாக்கண்டனிடம் பேனாவைக் கேட்டான். ஆனால் கொடாக்கண்டனா தருவான்?

"என் அருமை நண்பனே! இரவல் வாங்கியே காலத்தைக் கழிக்கும் குணம் உனக்கு வரக்கூடாது. அந்த அக்கறையால் தான் சொல்கிறேன். நீ உன் பேனாவை எடுத்து வந்து கடிதம் எழுது," என்றான்.



விடாக்கண்டனுக்கு ஒரே எரிச்சல். 'இந்தக் கொடாக்கண்டனுக்குச் சரியான பாடம் கற்பிக்க வேண்டும்,' என்று காத்திருந்தான்.

அந்த நாளும் வந்தது. நண்பர்கள் இருவரும் அடுத்த ஊரில் ஒரு விழாவிற்குச் சென்றனர். வழியில் ஒரு ஆறு. அதன் குறுக்கே ஒரு சிறிய மரப்பாலம். இருவரும் அதன்மேல் நடந்து கொண்டிருந்தனர்.

திடீரென்று கால் தவறிக் கொடாக்கண்டன் ஆற்றில் விழுந்து விட்டான். அவனுக்கோ நீச்சல் தெரியாது. "காப்பாற்று! காப்பாற்று!!" என்று கூக்குரலிட்டான்.



விடாக்கண்டன் இதுதான் சரியான வாய்ப்பு என்று நினைத்தான். "நண்பா! இப்போது நான் உன்னைக் காப்பாற்றி விடுவேன். ஆனால், நீ நீச்சல் கற்றுக் கொள்ளவே மாட்டாய். யாராவது வந்து காப்பாற்றி விடுவார்கள் என்று காத்து இருப்பாய். நீயே எப்படியாவது கரைசேர்," என்றபடி நடக்க ஆரம்பித்தான்.

கொடாக்கண்டன் தன் தவறை உணர்ந்தான். "ஐயோ! என்னை மன்னித்துவிடு. நீ காப்பாற்றாவிட்டால் நான் நீரில் மூழ்கிவிடுவேனே! இனிமேல் நான் உபதேசம் செய்யமாட்டேன்," என்று கெஞ்சினான்.

விடாக்கண்டனும் இரக்கப்பட்டு கொடாக்கண்டனைக் காப்பாற்றினான். அன்று முதல் அவர்கள் இருவரும் நெருங்கிய நண்பர்கள் ஆயினர். ஊர் மக்கள் முருகன், கந்தன் என்ற அவர்களது உண்மைப் பெயரைக் கூறி அழைத்தனர். இப்போதுதான் இருவர் குணங்களும் மாறிவிட்டனவே!



மூலம் : தமிழ்நாட்டு நாட்டுப்புறக்கதை





P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : S. P. Raju

# காணாமல் போன நிலா



கண்ணம்மா தன் முகத்தைத் திருப்பிக் கொண்டாள். அவள் கண்களில் நீர் ததும்பி இருந்தது. எந்த நிமிடமும் அது கீழே விழ இருந்தது. அவள் அப்பா அதைப் பார்த்துவிட்டார்.

"அழாதே, கண்ணம்மா! நான் உன் பிறந்த நாளுக்கு முன்பாகவே வந்துவிடுவேன்," என்று அன்புடன் கூறினார். ம்ஹூம்! கண்ணம்மாவின் முகம் திரும்பியே இருந்தது.

"அதோ பார்! கோவில் கோபுரத்தின் அருகில் முழு நிலா! அது மெல்ல மெல்லத் தன் வட்டமான வடிவத்தை இழந்து ஒரு பிறை ஆகும். அதன் பிறகு அது கொஞ்சம் கொஞ்சமாக வளர்ந்து மீண்டும் தன்னுடைய வட்ட வடிவத்தைப் பெறும். அது முழு வட்டமாகும் போதுதான் உன் பிறந்தநாள் வரும்!" என்றார் அப்பா.



'அட! இது சுவராஸ்யமாக இருக்கிறதே!' நிலாவைப் பார்க்கத் திரும்பினாள் கண்ணம்மா. நிலா வெளிச்சத்தில் அவள் கண்களில் இருந்த கண்ணீர் மினுமினுத்தது. மகளின் மனநிலை மாறுவதை உணர்ந்த அப்பா மேலும் தொடர்ந்தார். "உனக்குத் தெரியுமா? நிலாவின் வடிவத்தைப் பயன்படுத்தி முன்பெல்லாம் மக்கள் காலண்டர் தயாரித்தார்கள். நீயும் சுவரில் கட்டங்கள் வரைந்து ஒவ்வொரு இரவும் நிலாவின் வடிவத்தை அவற்றில் குறித்துக் கொள்ளேன்! இதை நீ செய்து கொண்டிருக்கும் போதே நான் வந்துவிடுவேன்," என்றார்.

கண்ணம்மாவின் கண்ணீர் மறைந்து போயிற்று. பெறப்போகும் புதிய அனுபவத்தை நினைத்து அவள் கண்கள் பிரகாசித்தன. அவள் முகம் புன்னகையால் மலர்ந்தது. அப்பாவும் நிம்மதிப் பெருமூச்சு விட்டார். இதற்குள் ரயில் வந்துவிட்டது. கண்ணம்மா மகிழ்ச்சியோடு கை அசைத்து அப்பாவுக்கு விடை கொடுத்தாள்.

அடுத்தநாள் காலை. கண்ணம்மாவுக்கு ஒரே உற்சாகம், பரபரப்பு. சுவரில் கட்டங்கள் போட வேண்டுமே! உதவி செய்ய அடுத்த வீட்டுத் தம்பி ஆவலுடன் முன்வந்தான். இரவு எப்போது வரும் என்று அவள் காத்திருந்தாள். அடிக்கடி கோபுரத்துக்கு மேலே பார்த்துக் கொண்டே இருந்தாள். நேரம் மெதுவாக நகர்வதுபோல் தோன்றியது. வெகுநேரம் காத்திருந்தபின் நிலா வந்தது.



'இதென்ன! நிலா இன்னும் முழு வட்டமாகத்தானே இருக்கிறது! அப்பா என்னைச் சமாதானப்படுத்த சும்மா சொன்னாரா?' ஏமாற்றத்துடன் கண்ணம்மா நிலாவை மீண்டும்

உற்றுப் பார்த்தாள். அப்பா சொன்னது சரிதான்! நிலா வட்டமாக இருப்பதுபோல் தோன்றியது. ஆனால் அது முழு வட்டமில்லை.

சுவரில் நிலாவின் வடிவத்தை வரையச் சென்றாள். 'வட்டம் எந்தப் பக்கம் முழுமையாக இல்லை?' அவளுக்கு மறந்துவிட்டது. மறுபடியும் போய் நிலாவைப் பார்த்தாள். ஆ! இப்போது ஞாபகம் வந்துவிட்டது.

அடுத்தநாள். கண்ணம்மா நிலாவின் வடிவத்தைக் குறிக்க மறந்தேபோய் இருப்பாள். நல்லவேளை! தம்பி ஓடி வந்து, "நிலா மேலும் சுருங்கிவிட்டது," என்று சொன்னபோதுதான் அவளுக்கு நினைவு வந்தது.

மூன்றாவது நாள் கோபுரத்துக்கு மேலே நிலாவைக் காணவில்லை! கண்ணம்மாவுக்கு ஒரே குழப்பம். தூங்குவதற்கு முன் மீண்டும் வெளியே வந்து பார்த்தாள். ஆ! நிலா வந்துவிட்டது. ஆனால் முந்தைய இரவைவிடச் சற்றுச் சிறியதாக இருந்தது. கொஞ்சம் கொஞ்சமாக நிலாக் காலண்டரில் கட்டங்கள் நிரம்பிக் கொண்டே வந்தன.

நான்காவது இரவும் ஐந்தாவது இரவும் மழை பெய்தது. சுவரில் இரண்டு கட்டங்கள் காலியாக விடவேண்டி இருந்தது. ஆறாவது இரவு வானம் தெளிவாக இருந்தது. நூற்றுக் கணக்கான நட்சத்திரங்கள் ஜொலித்தன. ஆனால் நிலாவைக் காணவில்லையே! இரவு பதினோரு மணி வரை அடிக்கடி வெளியே சென்று வானத்தைப் பார்த்து வந்தாள். ம்ஹூம்! நிலா வரவேயில்லை. அதற்குமேல் அவளால் விழித்திருக்க முடியவில்லை.

ஒரு அசுரன் நிலாவைத் திருடிக் கொண்டு போவதுபோல் கனவு கண்டாள். திடுக்கிட்டபடி எழுந்தாள். நிலா எங்கே போய்விட்டது?

நாளை இரவு மீண்டும் அது வருமா? காத்திருந்தாள். அன்றும் வரவில்லை. நிஜமாகவே நிலாவை யாராவது திருடிவிட்டார்களோ?

"நிலாவை யார் திருடி இருந்தாலும் திரும்பக் கொண்டு வந்து விடுவார்கள். இவ்வளவு பெரிய நிலாவைத் தூக்கிக் கொண்டு யாரால் அலைய முடியும்?" என்றான் தம்பி. அவன் ஒரு முட்டாள்! இனித் தூங்காமல் இருந்து பயன் இல்லை. "அப்பா விடியற்காலை வந்துவிடுவார்," என்று அம்மா குரல் கொடுத்தார். கண்ணை மூடினாள் கண்ணம்மா. அப்பா ஒரு மாய வாளைச் சுழற்றிச் சுழற்றி நிலாவை அசுரனிடமிருந்து விடுவிப்பது போல் கனவு கண்டாள்.

மறுநாள் காலை. தூக்கக் கலக்கத்தோடு கண்ணம்மா வெளியே வந்தாள். குளிர்ந்த காற்று அவள் தூக்கத்தைக் கலைத்தது. நிமிர்ந்து வானத்தைப் பார்த்தாள். "அம்மா! நிலா திரும்ப வந்துவிட்டது. அது சரியான சோம்பேறி! விடியும்போதுதான் வெளியே வந்திருக்கிறது," என்று கத்தினாள்.

நிலா இப்போது அரைவட்டமாக இருந்தது. அது மட்டுமா? அது கோபுரத்திற்கு மேலே இல்லை! கண்ணம்மாவின் தலைக்கு மேலே இருந்தது. தூரத்தில் அப்பா வந்து கொண்டிருந்தார்.

நிலாவைக் கண்டுபிடித்தாயிற்று. அப்பாவும் வந்து சேர்ந்துவிட்டார். சுவர்க் காலண்டரில் இனி பல கட்டங்கள் நிரம்பிவிடும் - கண்ணம்மாதான் விடியற் காலையில் அந்தச் சோம்பேறி நிலாவை வானத்தில் தேடப் போகிறாளே!

**Story by Nirupama Raghav**







P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : Uma Krishnaswamy

# நீர்த்துளி





ஒரு மண்பானை. அது நிறைய நீர். அதில் ஒரு நீர்த்துளி நிமிர்ந்து வானத்தைப் பார்த்தது. அங்கே பிரகாசமான சூரியன். எங்கும் அதன் ஒளி. நீர்த்துளி சூரிய ஒளியின் அருகே செல்ல ஏங்கியது. முண்டியடித்துக் கொண்டு மேலே வந்தது. பானையிலிருந்து குதித்து விட்டது!



நீர்த்துளி ஒரு நொடி பயந்தது. ஆனால் சூரியனைப் பார்த்ததும் அதன் பயம் நீங்கியது. மெல்ல ஆவியாகி மேலே செல்லத் துவங்கியது. ஆவியாகி மேலே செல்வது அதற்கு மிகவும் பிடித்திருந்தது.

வானத்தில் எங்கும் பஞ்சு போன்ற மேகங்கள் மிதந்து கொண்டிருந்தன. நீர்த்துளி தன்னைப் போன்று ஆவியான மற்ற துளிகளை மேகங்களில் பார்த்தது. அவற்றிடம் சூரியனுக்குச் செல்லும் வழியைக் கேட்டது.

"எனக்குத் தெரியாது," என்றது ஒரு துளி.

"இப்படியே சுற்றிப்போ," என்றது மற்றொன்று.

"போய்த்தான் பாரேன்," என்றது மூன்றாவது.





நீர்த்துளி பல நாள்கள் சுற்றித் திரிந்தது. ஒரு நாள் அது புதுமையான ஒரு மேகத்தைப் பார்த்தது. அது பெரிதாக, கனமாக, கருப்பாக இருந்தது. நீர்த்துளி ஒரு குதி குதித்து அதில் புகுந்து கொண்டது.

இரவு வந்தது. அந்தக் கருமேகம் அமைதி இழந்து இருந்தது. அங்குமிங்கும் நெளிந்தது. வளைந்தது. படபடத்தது. தான் சரியான இடத்திற்கு வரவில்லை என்று நீர்த்துளி உணர்ந்தது.

காற்று சுழன்று சுழன்று வீசியது. மின்னல் வெட்டியது. எங்கும் பெரு மழை. நீர்த்துளி கீழே விழத் தொடங்கியது! ஓர் ஓடையில் போய் விழுந்தது! மலைகளில் சரிந்தது! பாறைகளுக்கு இடையே புகுந்து ஓடியது!

மெள்ள ஓடையின் வேகம் குறைந்தது. நீர்த்துளி, "இந்த ஓடை எங்கே போகிறது?" என்று கேட்டது. "இது ஆற்றுடன் சேரப் போகிறது," என்றன மற்ற துளிகள்.

ஆற்றின் இரு கரைகளிலும் பெரிய மரங்கள். அங்கங்கே சூரிய ஒளி பட்டு ஆறு பளபளத்தது. ஆற்றில் வேகமாக ஓடுவது நீர்த்துளிக்குப் பிடித்திருந்தது. அது தன் பயணத்தை மிகவும் ரசித்தது. ஆனால் ஆற்றிலேயே நீண்ட நாள் இருக்க முடியாது என்று அதற்குத் தெரியும். கடல் நீரின் வலிமை அதை இழுத்தது.

இப்போது நீர்த்துளி கடலிலிருந்து வானத்தைப் பார்த்தது. பஞ்சு போன்ற மேகங்கள்! தான் முதலில் பானையிலிருந்து சென்று அடைந்த மேகம் நினைவுக்கு வந்தது. சூரியனைப் பார்த்தது. அது பிரகாசித்துக் கொண்டிருந்தது.

அடுத்து என்ன செய்ய வேண்டும் என நீர்த்துளிக்குத் தெரியும்! எகிறிக் குதித்துத் தெறித்தது! மீண்டும் ஆவியாகி மேலே சென்றது. அங்கே சிறு சிறு மேகக் கூட்டங்கள். பகலில் சூரியன் தெளிவாகத் தெரிந்தது. இரவில் விண்மீன்கள் ஜொலித்தன.



நீர்த்துளி கீழே பார்த்தது. தான் கிளம்பி வந்த கடல், வளைந்து ஓடிய ஆறு, முதன் முதலில் தான் விழுந்த ஓடை எல்லாமே தெளிவாகத் தெரிந்தன.

ஒரு லேசான மேகம் நீர்த்துளியைச் சூழ்ந்து கொண்டது. நீர்த்துளி திமிறிக் கொண்டு வெளியே வந்தது. உடைந்து சிதறியது.

தனக்கு விடுதலை கிடைத்ததுவிட்டது என்பதை நீர்த்துளி புரிந்து கொண்டது.

மூலம் : கிறிஸ்டோபர் இ. ஜோன்ஸ் எழுதிய
ஒன் ட்ராப் ஆப் வாடர்




P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi
Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai
Artist : Uma Krishnaswamy



# வால் யாருடையது?



ஆற்றங்கரையில் ஒரு ஆலமரம். அதன் கீழே பட்டாம்பூச்சிகள் பறந்து கொண்டு இருந்தன. பூச்சிகளைப் பிடிக்க மரத்தில் இருந்து குதித்தது ஒரு குட்டிக் குரங்கு. அப்போது கீழே ஒரு வால் கிடப்பதைப் பார்த்தது.

"என் வால்தான் அறுந்துவிட்டதோ!" குட்டிக் குரங்கு தன் வாலைத் தடவிப் பார்த்தது. நல்ல வேளை! வால் பத்திரமாக இருந்தது. 'இது யாருடைய வால்?' யோசித்தபடி நடந்தது. வழியில் ஆற்று நீரில் ஒரு மீன் துள்ளி மேலே வந்தது.



*குரங்கு* : இந்த வால் உன்னுடையதா?

*மீன்* : இல்லை. வால் இல்லாமல் என்னால் எப்படி வளைந்து வளைந்து நீந்த முடியும்?

*(குழப்பத்துடன் குட்டிக் குரங்கு நகர்ந்தது. டொக்... டொக்... டொக்... என்ற சத்தம். ஆ! மரங்கொத்தி.)*

*குரங்கு* : இது உன்னுடைய வாலா?

*மரங்கொத்தி* : ம்ஹூம்! இதோ என் வால்! வால் இல்லாவிட்டால் மரத்தில் இப்படி அமர்ந்து என்னால் கொத்த முடியுமா!

*(அப்போது மரத்தில் இருந்து கீழே குதித்தது ஓர் அணில்.)*

*குரங்கு* : இது உன்னுடைய வாலா?

*அணில்* : இல்லை. இதோ என் வால். மொசு மொசுவென்று எவ்வளவு அழகாக இருக்கிறது பார்! இதன் உதவியால் தான் நான் பாரசூட் மாதிரி உயரத்திலிருந்து கீழே குதிக்கிறேன்.



*(அப்போது படபடவென்று யாரோ ஓடும் சத்தம்! ஒரு முயல் தன் குட்டிகளுடன் வளைக்குள் ஓடி ஒளிந்தது. குட்டிக்குரங்கு வளையின் வாசலில் நின்றது.)*

*குரங்கு* : ஏன் இப்படி ஓடி வந்தீர்கள். வாலைத் தானே தேடுகிறீர்கள்?

*முயல்* : இல்லை. இதோ என் வால்!

*குரங்கு* : இது என்ன? உன் வாலில் மட்டும் வெள்ளைக் கொத்துமுடி!

*முயல்* : இதுதான் ஆபத்து வரும்போது என் குட்டிகளை எச்சரிக்க உதவுகிறது. என் சாம்பல்நிற உடல் எதிரிகளின் கண்ணில் படாது. வாலில் உள்ள இந்த வெள்ளை நிறத்தைப் பார்த்தபடி என் குட்டிகள் என் பின்னாலேயே ஓடி வந்துவிடும்.

*(இப்படியும் ஒரு வாலா?' யோசித்தபடியே நடந்தது குட்டிக்குரங்கு. ஆ! வழியில் வால் அறுந்த ஒரு பல்லி.)*

*குரங்கு* : கவலைப்படாதே. இதோ! உன் வால்.

*பல்லி* : இது என்னுடைய வால்தான். ஆனால் இப்போது எனக்கு இது வேண்டாம்.



*குரங்கு* : என்ன! வால் வேண்டாமா? வால் இல்லாமல் மீனால் நீந்த முடியாது. மரங்கொத்தியால் விழாமல் நிற்க முடியாது. அணிலால் கீழே குதிக்க முடியாது. முயலால் தன் குட்டிகளை ஆபத்திலிருந்து காப்பாற்ற முடியாது. இவ்வளவு ஏன்? வால் இல்லாமல் என்னால் மரத்தில் ஊஞ்சலாட முடியாது. உனக்கு மட்டும் வால் ஏன் வேண்டாம்?

*பல்லி* : வால் வேண்டாம் என்று யார் சொன்னது? நேற்று ஒரு பாம்பு என் வாலைப் பிடித்தது. வாலை மட்டும் உதறிவிட்டு நான் தப்பித்துவிட்டேன். ஏமாந்த பாம்பு என் வாலைத் துப்பிவிட்டது. அறுந்த வாலை ஒட்ட வைக்க முடியாது. கவலைப்படாதே! எனக்கு மீண்டும் வால் வளர்ந்துவிடும்!

குட்டிக்குரங்கின் கவலை தீர்ந்தது. அப்பாடா! வாலைக் கொடுக்க இனி யாரையும் தேடி அலைய வேண்டாம்!







P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : S. P. Raju

# திருவிழாவில். . .



அன்று எங்கள் வகுப்பில் ஒரே பரபரப்பு. பள்ளி முடிந்ததும் நான் வீட்டுக்கு வேகமாக ஓடி வந்தேன். "அம்மா! அம்மா! அடுத்த வாரம் சாரணர்களுக்கு ஒரு முகாம் போடுகிறார்கள். தேன்மொழி, ரஹீம் எல்லோரும் போகிறார்கள். நானும் போகிறேன் அம்மா," என்றேன்.

"எந்த இடத்துக்குப் போகிறீர்கள் மணி?" என்று கேட்டார் அம்மா.

"அடுத்த ஊருக்குத்தான். அங்கு ஒரு பெரிய திருவிழா. சுற்றி உள்ள கிராமங்களிலிருந்து எல்லோரும் வருவார்கள். நாங்கள் அங்குத் தங்கி அவர்களுக்கு உதவி செய்யப் போகிறோம்," என்றேன்.

ஞாயிறு வந்தது. எங்களுக்குத் தேவையான சாமான்களை எடுத்துக் கொண்டு பஸ்ஸில் ஏறினோம். மாலை ஊரை அடைந்தோம்.



அப்பப்பா! எங்குப் பார்த்தாலும் மக்கள் கூட்டம்! ஏராளமான கடைகள்! நாங்கள் எல்லோரும் மைதானத்துக்குச் சென்றோம். அங்குக் கூடாரம் அமைத்துத் தங்கினோம். நாங்கள் மறுநாள் செய்ய வேண்டிய வேலைகள் ஒவ்வொருவருக்கும் பிரித்துக் கொடுக்கப்பட்டன.

இரவு சாப்பிடும்போது, "என் வேலை என்ன தெரியுமா? மருத்துவக் குழுவுக்கு உதவி செய்வது," என்றாள் தேன்மொழி.

"போக்குவரத்துக் காவலருக்கு நான் உதவி செய்யப் போகிறேன்," என்றான் ரஹீம்.

"புதிதாக வரும் மக்களுக்கு வழி காட்டுவது என் வேலை," என்றேன் நான்.

மறுநாள் காலை. சீக்கிரமே எழுந்துவிட்டோம். உணவுப் பொட்டலங்களை எடுத்துக்கொண்டு அவரவர் பகுதிக்குச் சென்றோம். நாள் முழுவதும் வேலையில் ஈடுபட்டோம். நேரம் போனதே எங்களுக்குத் தெரியவில்லை.

மாலை நானும் ரஹீமும் பேசிக்கொண்டே முகாமுக்குத் திரும்பிக் கொண்டிருந்தோம். எதிரே ஒரு பாட்டி. கோவிலுக்குச் செல்லும் செங்குத்துப் படிகள்மேல் ஏற முடியாமல் தவித்துக் கொண்டு இருந்தார். "நான் உதவட்டுமா பாட்டி?" என்று அவரிடம் பணிவாகக் கேட்டேன்.



அவர் கையிலிருந்த சாமான்களை ரஹீம் தூக்கிக் கொண்டான். நான் பாட்டியின் கையைப் பிடித்து மெதுவாக அழைத்துச் சென்றேன்.

பாட்டியை மேலே விட்டுவிட்டுக் கீழே இறங்கிக் கொண்டிருந்தோம். அப்போது எதிரே 'வீல்' என்ற சத்தம். ஒரு சிறுவன் தவறிக் குளத்தில் விழுந்துவிட்டான்! கையில் இருந்த தன் பையை அங்கேயே போட்டு விட்டு ரஹீம் ஓடினான். காலணிகளைக் கழற்றி விட்டு ஒரே தாவலில் குளத்தில் குதித்தான். விரைந்து நீந்திச் சென்று சிறுவனைத் தாங்கிப் பிடித்தான். கரைக்குக் கொண்டுவந்து சேர்த்தான்.

நான் சிறுவனைக் குப்புறப் படுக்க வைத்தேன். சாரணர் பயிற்சியில் கற்றுக் கொடுத்தபடியே அவனுக்குச் செயற்கை மூச்சு அளித்தேன்.



நல்ல வேளை! சிறுவன் நிறைய நீர் குடித்திருக்கவில்லை. விரைவிலேயே அவனுக்கு மூச்சு வந்துவிட்டது. பயத்தினால் அவன் அழ ஆரம்பித்து விட்டான். சுற்றிலும் கூட்டம் கூடிவிட்டது. "சிறுவனுக்குக் காற்று வேண்டும். இவ்வளவு நெருக்கமாக நிற்காதீர்கள். இடைவெளிவிட்டு நில்லுங்கள்," என்றான் ரஹீம். அதற்குள் சிறுவனின் பெற்றோர் அங்கு வந்துவிட்டனர்.

சிறுவனை அழைத்துக் கொண்டு எதிரே இருந்த மருத்துவமனைக்குச் சென்றோம். டாக்டர் சிறுவனைப் பரிசோதித்தார். "சரியான நேரத்தில் முதல் உதவி செய்து இருக்கிறீர்கள். இனி பயப்படத் தேவை இல்லை," என்றார். சிறுவனின் பெற்றோர் எங்களுக்கு நன்றி கூறிச் சென்றுவிட்டனர்.

மருத்துவமனையில் தேன்மொழியைப் பார்த்தோம். மூவரும் முகாமுக்கு நடந்தோம். அன்று நடந்தவற்றைப் பற்றி இரவு வெகு நேரம் பேசிக் கொண்டிருந்தோம்.






P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : S. P. Raju

# கண்டுபிடிப்போம் வா! 







சாலையில் நிறைந்த மரம்
சமைக்கப் பழம் தரும்
சோலையாய் நிழலும் தரும்
சொல்வாய் நீ என்ன மரம்?

இலை உண்டு, கிளை இல்லை
பூ உண்டு, மணம் இல்லை
காய் உண்டு, விதை இல்லை
பட்டை உண்டு, கட்டை இல்லை
கன்று உண்டு, பசு இல்லை - *அது என்ன?*

நிலையாக நெட்டையன் நிற்பான்
நிலத்தடி நீரைக் குடிப்பான்
தலைக்கு மேலே நாம் குடிக்க
தண்ணீர்க் குடங்களைச் சுமப்பான் - *அவன் யார்?*

முழம் நீண்ட பச்சைக் காய்கள்
முத்து போல் வெள்ளைப் பூக்கள்
பழம் தரா இதன் மரங்கள்
பறித்துச் சமைக்கக் கீரை தரும் - *அது என்ன?*

கத்தி போல இலை இருக்கும்
கவரிமான் பூப்பூக்கும்
தின்னாத காய் காய்க்கும்
தின்னப் பழம் பழுக்கும் - *அது என்ன?*

மிளகு போல் விதை இருக்கும்
விசிறி போல் இலை இருக்கும்
பால் வடியும் காய் காய்க்கும்
பளபள எனப் பழுத்திருக்கும் - *அது என்ன?*

ஓங்கி வளரும் மரம்
உயரே வெண் பூ பூக்கும்
சத்தான கீரை தரும் - வெற்றிலைக்
கொடி படர இடம் தரும் - *அது என்ன?*





உச்சி சலசலக்கும்
உடல் நீண்டு இருக்கும்
நிறம் கறுத்து இருக்கும்
நின்று பார்த்தால் கழுத்து வலிக்கும் - *அது என்ன?*

ஒரே மரத்துக்கு
ஆயிரம் தூண்கள் - *அது என்ன?*

பழுக்காத காய் காய்க்கும் மரம்
அதன் காய் வெடித்து மிரட்டும்
வெள்ளைப் பல்லைக் காட்டும் - *அது என்ன?*

கண்டு காய் காய்க்கும்
காணாமல் பூ பூக்கும் - *அது என்ன?*





யானை படுக்க நிழல் உண்டு
கடுகு மடிக்க இலை இல்லை - *அது என்ன?*

சிறிய சிவந்த பழமுடைய மரம்
பறிக்கப் போனால் முள்ளால் குத்திவிடும் - *அது என்ன?*

இதயத்தைப் போன்ற இலை
இதன் நிழலோ குளுமை - *அது என்ன?*

நெடு நெடுவென்று வளர்ந்த நெட்டையான மரம்
நிமிர்ந்து பார்த்தால் கழுத்து வலிக்கும்
இலையைக் கசக்கித் தடவினால் தலைவலி பறக்கும் - *அது என்ன?*



பனைமரம், அத்திமரம், அகத்திமரம், வேப்பமரம்,
இலவமரம், சவுக்குமரம், வாழைமரம், தென்னைமரம்,
இலந்தை மரம், புளிய மரம், பப்பாளி, அரசமரம்,
யூகலிப்டஸ் மரம், ஆலமரம், முருங்கைமரம்

---





P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : Uma Krishnaswamy

# குழந்தையின் அழுகை



ஒரு நாள் அக்பரின் அரசவைக்கு அமைச்சர் பீர்பால் மிகவும் தாமதாக வந்தார். இதனால் அக்பர் கோபமாக இருந்தார். "இன்று ஏன் இவ்வளவு தாமதமாக வந்தீர்?" என்று கேட்டார்.

"அரசே! நான் வழக்கம் போல் தான் கிளம்பினேன். அந்தச் சமயம் பார்த்து என் மகன் அழத் தொடங்கினான். அவனைச் சமாதானப்படுத்தி விட்டு வர இவ்வளவு நேரம் ஆகிவிட்டது," என்றார் பீர்பால்.

"என்னையா ஏமாற்றப் பார்க்கிறீர்! ஒரு குழந்தையின் அழுகையை நிறுத்த இவ்வளவு நேரம் ஆகுமா?" என்று கேலி செய்தார் அக்பர்.



“ஆம் அரசே! அழும் குழந்தையைச் சமாதானப்படுத்துவது மிகவும் கடினம்!” என்றார் பீர்பால்.

“இது ஒரு கடினமான காரியமா! நான் ஒரு நொடியில் சமாதானப்படுத்தி விடுவேன்!” என்றார் அக்பர்.

“அப்படியா! அதையும்தான் பார்த்து விடுவோமே! ஒரு நாடகம் நடிப்போமா? நான் குழந்தையாக நடிக்கிறேன். நீங்கள் என் தந்தை!” என்று சவால் விட்டார் பீர்பால்.

“ஓ! நான் தயார்!” என்று உற்சாகத்துடன் ஒப்புக் கொண்டார் அக்பர்.



பீர்பால் தரையில் புரண்டு குழந்தைபோல அழத் தொடங்கினார்.



"குழந்தையே! ஏன் அழுகிறாய்?" என்று பரிவோடு கேட்டார் தந்தை அக்பர்.

"எனக்குக் கரும்பு வேண்டும்!" என்று அழுது கொண்டே கேட்டது குழந்தை.

"அழாதே! உனக்குக் கரும்புதானே வேண்டும். இப்போதே வந்துவிடும்!" என்று சொல்லி வேலையாட்களை அனுப்பினார் அக்பர்.

கரும்பும் வந்தது. அதைப் பார்த்த குழந்தை மீண்டும் கை, கால்களை உதைத்துக் கொண்டு அழுதது. "இன்னும் ஏன் அழுகிறாய்? கரும்புதான் வந்துவிட்டதே!" என்றார் அக்பர்.

"எனக்குத் துண்டு துண்டாகத்தான் கரும்பு வேண்டும்!" என்று குழந்தை அழுதது.



"இவ்வளவுதானே! இப்போதே கரும்பை வெட்டச் சொல்கிறேன்," என்றார் அக்பர். வேலை ஆட்களும் கரும்பைச் சிறு சிறு துண்டுகளாக வெட்டித் தந்தனர்.

குழந்தை கரும்புத் துண்டுகளைத் தூக்கி எறிந்துவிட்டு மீண்டும் அழுதது. அக்பர் குழப்பம் அடைந்தார்.

"இப்போது ஏன் அழுகிறாய்? நீ கேட்டபடியே கரும்புத் துண்டுகளைக் கொடுத்துவிட்டேனே!" என்று எரிச்சலுடன் கேட்டார் அக்பர்.

"துண்டுகளை ஒன்று சேர்த்து மீண்டும் முழுக் கரும்பாக்கிக் கொடுங்கள்!" என்று குழந்தை அடம் பிடித்தது.

அக்பர் பொறுமை இழந்தார். "வெட்டிய துண்டுகளை எப்படி முழுக் கரும்பாக்க முடியும்?" என்றார்.

பீர்பாலின் திட்டம் அக்பருக்குப் புரிந்துவிட்டது. "உண்மைதான்! குழந்தையைச் சமாதானப் படுத்துவது அவ்வளவு சுலபமல்ல. ஒப்புக் கொள்கிறேன்," என்றார். பீர்பால் மெல்லச் சிரித்தார். தன் ஆடையைத் தூசு தட்டிக் கொண்டே எழுந்தார்.






P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : S. P. Raju

# நந்திரியாவின் தியாகம்



ஒரு நீண்ட ஆற்றங்கரை. ஆற்றின் நடுவே ஒரு தீவு. தீவில் ஏராளமான மாமரங்கள். அங்கு வசித்த குரங்குகள் தினமும் மாம்பழங்களைத் தின்று களிக்கும்.

பெரும்பாலான மாமரங்கள் தீவின் நடுவே இருந்தன. ஒரே ஒரு மாமரம் மட்டும் கரை ஓரமாக இருந்தது.



குரங்குகளின் தலைவன் நந்திரியா, "இந்த மரத்திலிருந்து பழங்கள் ஆற்றில் விழுந்து விட்டால் ஆபத்து! மனிதர்கள் இந்தத் தோப்பைத் தேடி வருவார்கள். நம்மை விரட்டி விடுவார்கள். எனவே பழங்கள் ஆற்றில் விழாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்," என்று தன் கூட்டத்தினரை எச்சரித்தது.



ஆனாலும் அவற்றின் கண்ணில் படாமல் ஒரு பழம் ஆற்றில் விழுந்துவிட்டது. ஆற்று நீர் அதை அடித்துச் சென்றது. பழம் எப்படியோ அரசன் கைக்குப் போய்ச் சேர்ந்தது.

பழத்தை ருசித்துப் பார்த்த அரசன், 'இந்தப் பழம் எங்கு கிடைக்கும்? கண்டுபிடிக்க வேண்டும்,' என்று நினைத்தான். தன் வீரர்களுடன் மாம்பழம் இருக்கும் இடத்தைத் தேடி வந்தான்.



தீவில் எங்கு பார்த்தாலும் குரங்குகள்! அவற்றை விரட்ட வீரர்கள் தயாரானார்கள். அரசன், "இப்போது இருட்டிவிட்டது. இந்தக் குரங்குகளை நாளை விரட்டிவிடுங்கள்," என்று கட்டளை இட்டான்.

இதைக் கேட்ட குரங்குள் நந்திரியாவிடம் ஓடின. "ஆபத்து! ஆபத்து! நாளை நம்மைக் கொன்று விடுவார்கள். எப்படித் தப்பிப்பது?" என்றன.

நந்திரியா, "கவலைப்படாதீர்கள். நான் உங்களைக் காப்பாற்றுகிறேன்," என்றது. பிறகு மரத்தில் படர்ந்திருந்த ஒரு கொடியைப் பிடுங்கியது. அதன் ஒரு முனையைக் கரையோரம் இருந்த மாமரத்தில் கட்டியது. இன்னொரு முனையைத் தன்

இடுப்பில் கட்டிக் கொண்டது. எதிர்க் கரை மரத்தில் கொடியைக் கட்டுவதற்காகத் தாவியது.

'ஐயோ! கொடியின் நீளம் குறைவாக உள்ளதே!' நந்திரியா எதிர்க் கரையில் ஒரு மரக்கிளையைப் பிடித்தபடி தொங்கியது.

இப்படிக் கொடியையும் தன் உடலையும் வைத்து ஒரு பாலம் உருவாக்கியது.

மற்ற குரங்குகளிடம், "சீக்கிரம் வாருங்கள்! இந்தப் பாலத்தில் நடந்து, என் முதுகில் ஏறித் தப்பி விடுங்கள்," என்றது.

குரங்குகள் ஒவ்வொன்றாகப் பாலத்தில் நடந்து எதிர்க்கரையை அடைந்தன. கடைசிக் குரங்கு தாவும்போது பளு தாங்காமல் கொடி அறுந்துவிட்டது! நந்திரியா தீவின் கரையில் விழுந்தது.



மறைந்து நின்று இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த அரசன் அதிர்ந்தான். நந்திரியா விழுந்த இடத்துக்கு விரைந்தான். அப்போது நந்திரியா உயிர் இழக்கும் நிலையில் இருந்தது.

"உன் உயிரையும் பொருட்படுத்தாமல் உன் கூட்டத்தினரைக் காப்பாற்றி இருக்கிறாய்! மனிதர்களிலே கூடத் தன்னையே தியாகம் செய்து கொள்பவரை நான் பார்த்ததில்லை. உன் கடைசி விருப்பத்தைச் சொல். அதை நான் நிறைவேற்றுகிறேன்," என்றான் அரசன்.

"என் கூட்டத்தினரை ஒன்றும் செய்யாதீர்கள்," என்று கூறியபடியே நந்திரியா உயிரைவிட்டது.

அரசன் மாம்பழத் தீவைக் குரங்குகளுக்கே விட்டுவிட்டுத் தன் படையுடன் திரும்பிச் சென்றான்.

மூலம் : ஜாதகக் கதைகள்




P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : Uma Krishnaswamy

# தெனாலிராமனும் வித்தைக்காரனும் 

ஒரு நாள் விஜயநகரத்துக்கு ஒரு வித்தைக்காரன் வந்தான். அரண்மனையில் அற்புதமான பல வித்தைகள் செய்து காட்டினான். ஒரு காலிக் கூடையைக் கவிழ்த்து வைத்தான். மறுநிமிடம் கூடையைத் தூக்கினான். அங்கே ஒரு மாஞ்செடி! எல்லோரும் கைதட்டி மகிழ்ந்தனர்.

கையில் நிறையக் கற்களை எடுத்துக் கொண்டான். ஒருநொடியில் அவற்றைப் பொற்காசுகளாக மாற்றிக் காட்டினான்.



அதுமட்டுமா! கண்ணை மூடித் திறப்பதற்குள் அரசனது மோதிரத்தைத் தன் கைக்கு வர வழைத்தான்! காலிக் கூண்டைத் திறந்தான். அதிலிருந்து புறா ஒன்று பறந்து சென்றது! அவனது திறமையை மெச்சி அரசன் அவனுக்கு வெள்ளித்தட்டு நிறையப் பரிசுகள் கொடுத்தான்.

வித்தைக்காரன் ஒரு திட்டத்துடன் வந்திருந்தான். "இங்கு இருப்பவர்களில் யாராவது என்னை வென்றால் இந்தப் பரிசுகளைக் கொடுத்து விடுகிறேன். அப்படி வெல்லவில்லை என்றால் உங்கள் தெனாலிராமனை என்னுடன் அனுப்ப வேண்டும். இந்தச் சவாலை ஏற்கத் தயாரா?" என்றான்.

வித்தைக்காரனுடன் போட்டிபோட யாரும் முன்வரவில்லை. அரசன் முகத்தில் கவலை.

தெனாலிராமன், 'வித்தைக்காரனின் கர்வத்தை எப்படியும் அடக்கவேண்டும்,' என்று நினைத்தான்.

"வித்தைக்காரரே! நீங்கள் அற்புதமான வித்தைகளைச் செய்து காட்டினீர். இருந்தாலும் உங்கள் சவாலை ஏற்றுக் கொள்கிறேன். நான் ஒரு வித்தை காண்பிக்கிறேன். கண்ணை மூடிக்கொண்டு நான் செய்யும் அந்த வித்தையை நீங்கள் கண்ணைத் திறந்து கொண்டே செய்தால் போதும்," என்றான் தெனாலிராமன்.



வித்தைக்காரனும் ஒப்புக் கொண்டான். எல்லோரும் தெனாலிராமன் என்ன செய்யப் போகிறான் என்று ஆவலுடன் காத்திருந்தனர்.

தெனாலிராமன் அருகே ஒரு பூந்தொட்டி இருந்தது. அதிலிருந்த மண்ணை இரு கைகளிலும் அள்ளினான். கண்களை மூடிக்கொண்டு மண்ணைத் தன் கண்கள் மீது போட்டான். பிறகு கண்களைத் துணியால் துடைத்தான். வித்தைக்காரனிடம் திரும்பி, "இந்த வித்தையைக் கண்ணைத் திறந்து கொண்டே செய்து காட்டுங்கள் பார்க்கலாம்," என்றான்.



வித்தைக்காரன் 'திருதிரு'வென விழித்தான். ஒன்றும் பேசமுடியாமல் தலை குனிந்தான்.

'அப்பாடா! எப்படியோ தெனாலிராமன் சிக்கலைத் தீர்த்து வைத்துவிட்டான்!' அரசன் நிம்மதி அடைந்தான். தெனாலிராமனுக்குப் பரிசுகள் கொடுத்தான்.




P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : S. P. Raju



# அப்புவின் கவலை?

அப்பு ஒரு குட்டி யானை. ஒரு நாள் அது சோகமாக இருந்தது. யாருடனும் விளையாட வரவில்லை. "உனக்கு என்ன கவலை? என்னிடம் சொல்லேன்," என்றது மீன்கொத்தி. அப்புவிடமிருந்து பதிலே இல்லை.

"ஓ! எனக்குத் தெரியும். நீண்டு தொங்கும் உனது துதிக்கையை நினைத்து வெட்கப்படுகிறாய் இல்லையா?" என்றது மீன்கொத்தி.



உடனே அப்பு, "இல்லை! இல்லை! என் துதிக்கை எனக்கு மிகவும் பிடிக்கும். துதிக்கையால் நான் எத்தனையோ வேலைகளைச் செய்கிறேன்," என்றது.



அப்போது குரங்கு, "உன் குட்டை வாலை நினைத்து வேதனைப் படுகிறாயா? என்னைப் போல் வாலைக் கிளையில் சுற்றி ஊஞ்சலாட முடியவில்லை. அதுதானே உன் கவலை?" என்றது.

"இல்லை! இல்லை! என் வால் சிறியதுதான். ஆனாலும் மயிலின் வாலைப் போல் மற்றவர்களுக்கு இடைஞ்சலாக இல்லையே!" என்றது அப்பு.



அப்போது அங்கே வந்த மான், "தடித்த கால்கள் தானே உன் பிரச்சினை. என் கால்கள் போல மெல்லியதாகவும் அழகாகவும் இல்லை என்று நினைக்கிறாய் அல்லவா?" என்றது.

"அதெல்லாம் ஒன்றுமில்லை. என் கால்கள் எனக்கு அழகாகத்தான் உள்ளன," என்றது அப்பு.

"உன் சாம்பல் நிறம்தான் உனக்குப் பிடிக்க வில்லையோ? என்னைப்போல நீலமும் பச்சையுமாக அழகாக இல்லையே என்று கவலைப்படுகிறாய்! இல்லையா?" என்றது மயில்.

"இல்லை. என் நிறத்தைப் பற்றி எனக்குக் கவலை இல்லை. என் சாம்பல் நிறம்தான் என்னை வேடர்களிடமிருந்து காப்பாற்றுகிறது," என்றது அப்பு.



"அப்படியானால் வெளியே வா! இங்கே நிறையக் கரும்பு இருக்கிறது. சாப்பிடலாம்!" என்றது குரங்கு.



"நான் மிக மிக குண்டாக இருக்கிறேன் எனக்குச் சாப்பாடு வேண்டாம்," என்று அழுதது அப்பு.

"அட! இதுவா உன் கவலை! யானைகள் என்றால் பெரியதாகவும் வலிமையாகவும் தானே இருக்க வேண்டும்! நீ ஒன்றும் குண்டு இல்லை," என்றது மான்.

"குண்டு இல்லையா! மூன்று நாளாக நான் சாப்பிடவில்லை. ஆனாலும் என் உடல் இளைக்கவில்லை," என்றது அப்பு.

திடீரென்று ஒரு அலறல். "யாராவது உதவுங்களேன்!" சத்தம் வந்த திசையை நோக்கி எல்லாம் ஓடின. அங்கே புலியின் மேல் ஒரு மரம் சாய்ந்து கிடந்தது. புலி வலியால் கத்தியது.

குரங்கு, மயில், மான், மரங்கொத்தி எல்லாமே மரத்தைத் தள்ளிப் பார்த்தன. ம்ஹூம்! ஒரு கிளையைக் கூட நகர்த்த முடியவில்லை.



‘ஐயோ புலியை எப்படியாவது காப்பாற்ற வேண்டுமே!’ விலங்குகள் அப்புவை அழைத்து வந்தன. அப்பு மரத்தை நகர்த்த முயன்றது. ஆனால் மூன்று நாள் பட்டினி கிடந்ததால் நகர்த்த முடியவில்லை.

“இதோ இந்தக் கரும்பைச் சாப்பிட்டுவிட்டு நகர்த்து,” என்று நண்பர்கள் கரும்பைக் கொடுத்தன. அப்பு, “ஆம்! இதுதான் என் சக்தி,” என்று கூறிக் கரும்பை வேகமாகத் தின்றது. ஒரு நொடியில் மரத்தை நகர்த்தியது. விலங்குகளுக்கு மகிழ்ச்சி. “நீ எல்லாரையும் விட பலசாலி என்று இப்போதாவது புரிகிறதா?” என்றன.

துதிக்கையைத் தூக்கிச் சந்தோஷத்தில் பிளிறியது அப்பு!



65

# எங்கள் தலைவர்



ஓர் அடர்ந்த காடு. அதில் விலங்குகள் எல்லாம் சேர்ந்து வாழ்ந்து வந்தன. சிங்கம்தான் அவற்றின் தலைவர்.

சிங்கம் மிகவும் வலிமை வாய்ந்தது. புத்திசாலியும் கூட. காட்டில் எந்தப் பிரச்சினை வந்தாலும் விலங்குகள் சிங்கத்திடம் தான் செல்லும். சிங்கம் சரியான தீர்ப்புக் கூறும். விலங்குகளுக்குச் சிங்கத்தின் மீது அளவில்லாத மரியாதை. நம்பிக்கையும் கூட.

ஒரு நாள் வேடர்கள் சிலர் காட்டுக்குள் புகுந்தனர். விலங்குகளைத் துரத்தினர். பயந்து நடுங்கிய விலங்குகள் சிங்கத்திடம் ஓடி வந்தன.

சிங்கம், "உங்களால் வேடர்கள் கூட்டத்தை எதிர் கொள்ள முடியாது. நீங்கள் அமைதியாக இங்கேயே இருங்கள். நான் போய் அவர்களை எதிர்த்துப் போராடுகிறேன்," என்றது.



சிங்கம் வேடர்கள் மேல் பாய்ந்தது. சிலர் ஓடி விட்டனர். சிலர் அதைக் காயப்படுத்தினர். ஆனால் சிங்கம் விடவில்லை. முடிவில் அதுவே வென்றது.

எல்லா விலங்குகளும் சிங்கத்திற்கு நன்றி தெரிவிக்க ஓடி வந்தன. "ஐயோ! இதென்ன! சிங்கம் வலியால் துடித்துக் கொண்டிருக்கிறதே! அதன் கால்களும் உடைந்து இருக்கின்றனவே!" விலங்குகள் பதறின.

பல நாட்கள் சென்றன. சிங்கத்தின் கால்கள் குணமாகவில்லை. சிங்கத்திற்கு சக்கர நாற்காலி ஒன்று வந்தது. அதில் அமர்ந்து மெல்ல அங்குமிங்கும் நகர்ந்தது. உணவைத் தேடி வேட்டையாடச் சிங்கத்தால் முடியவில்லை. சில விலங்குகள் அதற்கு உணவு கொண்டுவந்தன.



நாளடைவில் விலங்குகளுக்குச் சலிப்பு ஏற்பட்டது. சிங்கத்திற்குப் பணிவிடை செய்வது சுமையாகத் தோன்றியது. சில விலங்குகள் அந்த வேலையிலிருந்து நழுவத் தொடங்கின. தங்கள் பிரச்சினைக்குத் தீர்வு காண சிங்கத்திடம் வருவதை நிறுத்திவிட்டன.

சிங்கம் உணவு கொண்டு வருபவர்களிடம் எப்போதும்போல் உற்சாகத்துடன் பேசியது. அவர்கள் வருகைக்காகக் காத்திருந்தது. காட்டில் நடப்பவற்றைப் பற்றி ஆர்வத்துடன் கேட்டுத் தெரிந்து கொண்டது. முடிந்த அளவு தன் பொறுப்புகளைச் செய்து வந்தது.

ஒரு நாள் காட்டில் எங்கும் அமைதி. ஒரு விலங்கைக்கூடக் காணவில்லை! சிங்கத்திற்கு ஒரே வியப்பு. சக்கர நாற்காலியில் மெல்ல நகர்ந்து நகர்ந்து எல்லோரையும் தேடியது.

ஒரு இடத்தில் விலங்குகள் கூட்டம் போட்டு இருந்தன. சிங்கத்திற்கு அதிர்ச்சி! மறைவாக நின்று அவற்றின் பேச்சைக் கூர்ந்து கவனித்தது. ஒரு விலங்கு, "நாம் ஏன் புதிய தலைவரைத் தேர்ந்தெடுக்கக் கூடாது?" என்றது.



“இல்லை, இல்லை. சிங்கம்தான் நம் தலைவராக இருக்க வேண்டும். நம் பிரச்சினைகளுக்கு அதுதான் சரியான தீர்ப்பு சொல்லும்,” என்றது இன்னொன்று.

“சிங்கத்திடம் நம்மைப் பாதுகாக்கும் வலிமை இப்போது இல்லையே! அதை நாம் ஏன் தலைவனாக ஏற்றுக் கொள்ள வேண்டும்?” என்றது மற்றொன்று.

“சிங்கத்திடம் இப்போது உடல் வலிமை இல்லைதான். ஆனால் மனவலிமை இருக்கிறது. நீண்ட அனுபவமும் அறிவும் கூட இருக்கிறது. எப்போதும் போல் சிங்கத்தால் நமக்கு வழிகாட்ட முடியும்,” என்றது ஒரு முதிய விலங்கு.

எல்லா விலங்குகளும் சிறிது நேரம் யோசித்தன. பிறகு சிங்கத்தையே மீண்டும் தலைவராக ஏற்றுக் கொண்டன. சிங்கத்தின் இருப்பிடம் நோக்கிக் கிளம்பின.

Based on Children's Play
(Vidhyasagar, Chennai)







Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : S. P. Raju

# தாமரைக்கு ஏன் கோபம்?



'இந்தத் தேனீக்கள் எல்லாம் தினமும் எங்கே செல்கின்றன? அங்கே என்ன இருக்கும்?' ஆவலுடன் சின்னஞ்சிறிய தேனீ ஒன்று கூட்டைவிட்டுக் கிளம்பியது.

அது வெகுதூரம் பறந்து சென்றது. வழியில் ஒரு தாமரைக் குளம். அதில் ஓர் அழகான செந்தாமரை. தேனீ 'தொப்' பென்று பூவில் குதித்தது. பூ அதிர்ந்தது. அதன் இதழ்கள் சில உதிர்ந்தன. தாமரைக்குக் கோபம் வந்தது. "உனக்குத் தேன் கொடுக்க மாட்டேன் போ! போ!" என்று தேனீயை விரட்டியது.

தேனீ பயந்தது. அருகில் உள்ள புல்தரையில் அமர்ந்து சிந்தித்தது. 'தாமரைக்கு என் மேல் என்ன கோபம்?'





அப்போது மரக்கிளைகளுக்கு இடையே சூரிய ஒளிக்கற்றைகள் மினுமினுத்தன. அதைப் பார்த்த தேனீ,

*"சிவப்பு வண்ணத் தாமரை*
*தேன் கொடுக்க மறுக்குது*
*தங்கநிறக் கற்றையே*
*தாவி வந்து உதவுவாய்,"* என்றது.

ஒளிக்கற்றை, "இதோ நான் தாமரையின் மீது படிந்து அதை மகிழ்விக்கிறேன்," என்றது. தாமரைமேல் தங்க நிறக் கதிர்களை வீசி அதை ஜொலிக்க வைத்தது. ஆனாலும் தாமரை தேனீக்குத் தேன் தரவில்லை.



அப்போது தென்றல் காற்று தவழ்ந்து வந்தது. தேனீ அதனிடம்,

*"சிவப்பு வண்ணத் தாமரை*
*தேன் கொடுக்க மறுக்குது*
*எனக்கு நீயும் உதவுவாய்*
*எளிய வழி சொல்லுவாய்,"* என்றது.

தென்றல், "இதோ தாமரையை மகிழ்விக்கிறேன்," என்று மென்மையாக வீசியது. தாமரை மகிழ்ச்சியால் ஆடியது. ஆனால் தேனீக்குத் தேன் கொடுக்க மறுத்துவிட்டது.

தேனீ வருந்தியது. இனி என்ன செய்வது? அப்போது மேகங்கள் நகர்ந்து சென்று கொண்டிருந்தன. தேனீ மேகத்திடம்,



*"சிவப்பு வண்ணத் தாமரை*
*தேன் கொடுக்க மறுக்குது*
*கறுப்பு வண்ண மேகமே*
*கனிவாய் எனக்கு உதவுவாய்,"*

என்றது.

மேகம், "கவலைப்படாதே! நான் மழைத்துளிகளை அனுப்புகிறேன்," என்றது. மழைத்துளிகளைத் தாமரையின் மேல் பூப்போலச் சொரிந்தது. தாமரை குளிர்ந்தது. ஆனாலும் தேனீக்குத் தேன் கொடுக்கவில்லை.

தேனீ சோர்வுடன் ஒரு மரக்கிளையில் அமர்ந்தது. அங்கு மரப்பொந்தில் ஓர் ஆந்தையைப் பார்த்தது. அதனிடம்,

*"சிவப்பு வண்ணத் தாமரை*
*தேன் கொடுக்க மறுக்குது*
*அறிவுமிக்க ஆந்தையே*
*அன்பாய் எனக்கு உதவுவாய்,"* என்றது.

ஆந்தை, "அருகே வா! ஒரு ரகசியம் சொல்கிறேன்," என்றது. தேனீயின் காதில் ஏதோ சொன்னது. கிளைகள், இலைகள், பறவைகள் எல்லாமே கூர்ந்து கேட்டன. ஆனால் யாராலும் ரகசியத்தைக் கேட்க முடியவில்லை. தேனீ மட்டும் மகிழ்ச்சியுடன் பறந்து சென்றது.

தாமரையின் மேல் மிக மிக மென்மையாக அமர்ந்தது. "எனக்குத் தேன் தருகிறாயா?" என்று மிக மிகப் பணிவாகக் கேட்டது. தாமரை மனம் மகிழ்ந்தது. தேனீக்குத் தேன் கொடுத்தது.

மூலம் : இந்திய நாட்டுப்புறக் கதை





P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : Uma Krishnaswamy

# காந்தித் தாத்தா



அன்று அக்டோபர் இரண்டாம் தேதி. காந்தித் தாத்தாவின் பிறந்தநாள். காந்தித் தாத்தாவுக்கு வாழ்த்துத் தெரிவிக்க நானும் என் தம்பியும் மாலைகளுடன் கிளம்பினோம்.

ஆசிரமத்தில் நிறையக் கூட்டம். எல்லோரும் கதர் ஆடையை அணிந்திருந்தனர். சிலர் தலையில் கதர்த் தொப்பி அணிந்திருந்தனர்.

நாங்கள் காந்தித் தாத்தா அருகில் சென்றோம். பிறந்தநாள் வாழ்த்துக்கள் தெரிவித்து மாலைகளை அணிவித்தோம்.

காந்தித்தாத்தா சிரித்தபடி, "அடுத்தமுறை எனக்கு இதைவிட நல்லபரிசு கொண்டு வருகிறீர்களா?" என்று கேட்டார்.

"என்ன பரிசு வேண்டும்? சொல்லுங்கள் தாத்தா!" என்றேன் நான்.



“உங்கள் கைகளால் இராட்டையில் நெய்த மாலை கொண்டு வரமுடியுமா?” என்றார் காந்தித் தாத்தா சிரித்தபடியே.

“எங்களுக்கு இராட்டை சுழற்றத் தெரியாதே?” என்றான் என் தம்பி. அதற்கு அவர், “உங்கள் அம்மா அப்பா சொல்லித் தருவார்கள்,” என்றார்.

வீடு திரும்பும் வழியில், “காந்தித் தாத்தா ஏன் கைராட்டையைப் பயன்படுத்தச் சொல்கிறார்?” என்று தம்பி கேட்டான்.

“அந்நிய நாட்டுத் துணிகளைப் பயன் படுத்துவதால் நம் நாட்டு ஏழைகளுக்கு வேலையில்லாமல் போய்விடுகிறது. கிராம மக்களுக்கு கதர்த் தொழில் வாழ்வு தருகிறது. அதனால் தான் கையால் நெய்த ஆடைகளைப் பயன்படுத்த வேண்டும் என்கிறார் காந்தித் தாத்தா,” என்றேன் நான்.

வீட்டை அடைந்ததும் நடந்ததை எல்லாம் அம்மாவிடம் சொன்னோம். “வெள்ளையர் ஆட்சியை நீக்கி இந்தியாவை சுதந்திர நாடாக்கப் போராடுகிறார் காந்தி. அதனால்தான் கதர் இயக்கத்தைப் பரப்புகிறார்,” என்று அம்மா மேலும் விளக்கினார்.

அன்றே நாங்கள் ராட்டையை சுழற்ற ஆரம்பித்தோம்.



* * * * *

ஒரு முறை காந்தித்தாத்தா மதுரை சென்றிருந்தார். அவர் ஆற்றில் குளிக்கப் போனார். அப்போது அங்கே ஒரு பெண்மணியும் அவளுடைய குழந்தையும் இருந்தனர்.

அந்தப் பெண்மணி தன்னுடைய புடவையின் ஒரு பாதியை உடலில் கட்டிக் கொண்டு இன்னொரு பாதியைத் துவைத்துக் கொண்டிருந்தாள். அவளிடம் ஒரு புடவையே இருந்தது. அதுவும் கிழிசல்!

அவளுடைய ஏழ்மை காந்தித் தாத்தாவின் மனதைத் தொட்டது. தன்னுடைய சால்வையை எடுத்து அவளுக்குக் கொடுத்தார். நாட்டில் இத்தனை ஏழைகள் இருக்கும்போது தான் விதவிதமாகச் சட்டை போடுவது சரியல்ல என்று நினைத்தார். அன்று முதல் மேல் சட்டை போடுவதை விட்டுவிட்டார்.



* * * * *

சபர்மதி ஆசிரமத்தில் காந்தித் தாத்தாவைப் பார்க்க ஒரு சிறுவன் வந்தான். அவன், "தாத்தா, தாத்தா! நீங்கள் ஏன் சட்டை போடுவதில்லை? என் அம்மாவிடம் சொல்லிச் சட்டை தைத்துத் தரட்டுமா?" என்று கேட்டான்.

காந்தித் தாத்தா சிரித்தார். "உன் அம்மா எத்தனை சட்டை தைத்துத் தருவாள்?" என்று கேட்டார்.

"உங்களுக்கு எத்தனை சட்டை வேண்டும் சொல்லுங்கள் தாத்தா. அத்தனை சட்டைகள் தைக்கச் சொல்லுகிறேன்," என்றான் சிறுவன்.

காந்தித் தாத்தா, "எனக்கு நாற்பதுகோடி அண்ணன், தம்பி, அக்கா, தங்கைகள். அவர்களுக்கு எல்லாம் சட்டை இல்லாதபோது நான் மட்டும் எப்படிச் சட்டை போட்டுக் கொள்ளுவது? உன் அம்மாவால் அத்தனை பேருக்கும் சட்டை தைத்துத் தரமுடியுமா?" என்றார் அன்புடன்.

சிறுவனுக்கு அப்போதுதான் புரிந்தது - நாடு முழுவதுமே தாத்தாவின் குடும்பம் என்று. நாட்டில் வாழும் அனைவருமே அவரது உறவினர்கள்! அவர் எல்லோருக்கும் நண்பர்! ஒரு சட்டை அவருக்கு எப்படிப் போதும்?




P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi
Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : S. P. Raju

68

# நான்கு நண்பர்கள்



ஆமை, காகம், எலி, மான் ஆகிய நான்கும் நெருங்கிய நண்பர்கள். அவை ஒரு குளக்கரையில் வாழ்ந்து வந்தன. இரைதேடும் போது அவை பிரிந்து செல்லும். மற்ற நேரங்களில் அவை ஒன்றாகவே திரியும்.

ஒருநாள் இரை தேடிச் சென்ற மான் திரும்பி வரவில்லை. 'மானுக்கு ஏதோ ஆபத்து!' நண்பர்கள் கவலைப்பட்டன.

"நான் பறந்து சென்று பார்த்து வருகிறேன்," என்று காகம் கிளம்பியது. வெகு தூரம் பறந்து திரிந்தது. ஓரிடத்தில் மான் வலையில் சிக்கி இருப்பதைப் பார்த்தது. பதறியபடி நண்பர்களிடம் வந்து செய்தியைச் சொன்னது.

"மானைக் காப்பாற்ற உடனே செல்ல வேண்டும்," என்றது எலி. காகத்தின் முதுகில் ஏறிக் கொண்டது. காகம் பறந்து சென்று மான் இருந்த இடத்தை அடைந்தது.

எலி வேக வேகமாக வலையைக் கடித்தது. மானை விடுவித்தது. அப்போதுதான் ஆமை அந்த இடத்துக்கு வந்து சேர்ந்தது. "ஐயோ! பாதுகாப்பான குளத்தை விட்டுவிட்டு நீ ஏன் இங்கு வந்தாய். வேடன் வந்தால் காகம் பறந்துவிடும். நான் வளைக்குள் புகுந்துவிடுவேன். மான் வேகமாக ஓடிவிடும். நீ வேடனிடம் அகப்பட்டுக் கொள்வாயே!" என்றது எலி கவலையுடன்.

"மானுக்கு ஆபத்து என்று கேட்டதும் என்னால் அங்கு இருக்க முடியவில்லை! அதனால்தான் வந்துவிட்டேன்," என்றது ஆமை.

பேசிக் கொண்டிருக்கும்போதே வேடன் அங்கு வந்துவிட்டான். ஒரே பாய்ச்சலில் மான் ஓடி மறைந்தது. எலி அருகில் இருந்த வளைக்குள் புகுந்து கொண்டது. காகம் பறந்து விட்டது.



ஐயோ பாவம்! ஆமை மாட்டிக் கொண்டது. வேடன் புல்லைக் கயிறாகத் திரித்தான். ஆமையின் கால்களைக் கட்டினான். அதைத் தூக்கிக் கொண்டு வீட்டுக்குப் புறப்பட்டான். நண்பர்கள் ஒளிந்து கொண்டு இவற்றை எல்லாம் பார்த்தன. “ஆமையை எப்படியாவது காப்பாற்ற வேண்டும்,” என்றது மான்.

எலி மானிடம், “நீ வேடன் செல்லும் வழியில் இறந்ததுபோலப் படுத்துக்கொள். காகம் உன்னைக் கொத்துவது போல் நடிக்கட்டும். அப்போது வேடன் ஆமையைக் கீழே வைத்துவிட்டு உங்களிடம் வருவான். அதற்குள் நான் கயிறைக் கடித்து ஆமையை விடுவிக்கிறேன்,” என்று யோசனை கூறியது.



திட்டமிட்டபடியே எல்லாம் செய்தன. வேடன், வழியில் மான் கிடப்பதைப் பார்த்தான். ஆமையைக் கீழே விட்டுவிட்டு மானிடம் சென்றான். உடனே எலி ஆமையை விடுவித்தது.

வேடன் அருகில் வந்ததும் மான் மின்னலாய் ஓடி மறைந்தது. காகம் பறந்துவிட்டது. வியப்புற்ற வேடன் ஆமையை எடுக்கத் திரும்பினான்.

அங்கே ஆமையையும் காணவில்லை!
வேடன் ஏமாற்றத்துடன் வீடு திரும்பினான்.

மூலம் : பஞ்சதந்திரக் கதைகள்





P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : S. P. Raju

# சூரியனுடன் விளையாடிய குழந்தை









அனுமான் குழந்தையாக இருந்தபோது மிகவும் குறும்பு செய்வான். பயம் என்பதே இல்லை. எப்போதும் விளையாட்டுதான். அவன் தாய் அஞ்சனாவால் அவனைச் சமாளிக்கவே முடியவில்லை.

ஒரு நாள் அனுமான் விளையாடிக் கொண்டிருந்தபோது சூரியனின் கதிர்கள் அவன்மேல் விழுந்தன. நிமிர்ந்து மேலே பார்த்தான். சூரியன் ஒரு சிவப்புப் பந்துபோல் தோன்றியது.



“நான் அந்தப் பந்தைப் பிடித்து விளையாடப் போகிறேன்,” என்று ஒரே தாவலில் அனுமான் வானத்தை அடைந்தான். சூரியனைப் பிடிக்க முயன்றான்.

சூரியனுக்கு இது பிடிக்கவில்லை. வேகமாக ஓடத் தொடங்கினான். அனுமான் அவனைத் துரத்திக் கொண்டே இருந்தான். உலகில் இரவும் பகலும், அடுத்தடுத்து வேகமாக மாறின. அனுமானுக்கு அது விளையாட்டாக இருந்தது.

பதறிப்போன சூரியன் இந்திரனை உதவிக்கு அழைத்தான். சூரியனின் தவிப்பைப் பார்த்த இந்திரன் கோபம் கொண்டான். ஒரு மின்னலைப் பாய்ச்சி அனுமானைத் தாக்கினான். அனுமானின் மூச்சு நின்றது. அவன் கீழே விழத் தொடங்கினான்.

அனுமான் கீழே விழாமல் அவன் தந்தை வாயு தாங்கிப் பிடித்தார். வாயு, “ஒரு சிறு குழந்தை என்பதையும் பார்க்காமல் இப்படிச் செய்து விட்டாயே,” என்று இந்திரன் மேல் கோபம் கொண்டார்.

வாயுதான் காற்றை உருவாக்குபவர் அல்லவா? காற்றை உள்ளே இழுத்து பலமாக மூச்சுவிட்டார். எங்கும் புயல் வீசியது.



மரங்கள், மலைகள் எல்லாமே ஆடின. எல்லோரும் அங்குமிங்கும் பயந்து ஓடினர்.

"என் மகனுக்கு மூச்சு வரும்வரை இந்த உலகத்திற்குக் காற்றே கிடையாது," என்றார் வாயு. காற்று நின்றுவிட்டது. வாயு தன் மகனைத் தூக்கிக் கொண்டு பூமிக்கடியில் சென்றுவிட்டார்.

மரம், செடி, கொடிகள், மனிதர்கள் எல்லோரும் மூச்சடைத்து விழத் தொடங்கினர். எங்கும் நிசப்தம்.

காற்றில்லாமல் உலகம் அழிந்து விடுமே! தேவர்கள் பதறினர். வாயுவிடம் சென்றனர். "இந்திரனை மன்னித்துவிடு," என்று கூறி அனுமானை உயிர் பிழைக்கச் செய்தனர்.

"மின்னலும் இடியும் உன்னை ஒருபோதும் தாக்காது. நீ வானத்தில் எங்கு வேண்டுமானாலும் பறந்து செல்லலாம். உருவத்தை விருப்பம்போல் பெரியதாகவோ சிறியதாகவோ மாற்றிக் கொள்ளலாம்," என்று தேவர்கள் அனுமானை வாழ்த்தினர்.





“இந்த எல்லா சக்திகளும் இருந்தால் மட்டும் போதாதே! அனுமான் புத்திசாலியாக இருந்தால்தானே இந்தச் சக்திகளைச் சரியாகப் பயன்படுத்த முடியும்?” என்று கேட்டார் வாயு.

“கவலைப்படாதீர்கள். அனுமான் மிகவும் புத்திசாலியாகத் திகழ்வான்,” என்று தேவர்கள் வாழ்த்தினர்.

வாயு மெல்ல மூச்சுவிட்டார். உலகில் காற்று மீண்டும் வீசத் தொடங்கியது. செடி, கொடி, மரங்கள், மனிதர்கள் எல்லோரும் உயிர் பிழைத்தனர்.






P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : Uma Krishnaswamy

# மூன்று இறகுகள் 

ஒரு நாள் குரு தன் சீடனிடம், "நீ காட்டுக்குப் போய் மூலிகைகளைச் சேகரித்து வா. வழியில் ஏதாவது ஆபத்து நேர்ந்தால், இந்த இறகுகளைப் பயன்படுத்தித் தப்பித்துக் கொள்!" என்று கூறி மூன்று இறகுகளைக் கொடுத்தார்.

சீடன் காட்டில் வெகுநேரம் அலைந்து திரிந்தான். களைப்பாக இருந்தது. ஓய்வெடுக்க எண்ணினான். அப்போது, "தம்பி! இங்கே என்ன செய்கிறாய்? என் வீட்டுக்கு வா! விருந்து சாப்பிட்டு ஓய்வு எடுக்கலாம்," என்று அன்பாக அழைத்தாள் ஒரு பாட்டி.

சீடனும் பாட்டியும் ஒரு மாளிகையை அடைந்தனர். 'காட்டில் இத்தனை அழகான மாளிகையா!' வியந்தவாறே சீடன் மாளிகைக்குள் நுழைந்தான். திடீரென்று 'ஹா ஹ் ஹா!' என்று சிரிக்கும் சத்தம்! ஐயோ! பாட்டி நின்ற இடத்தில் கொடூரமான தோற்றமுடைய ஒரு மந்திரவாதி!



மந்திரவாதி, "உனக்கா விருந்து? நீதான் இன்று என் விருந்து," என்றான். சீடன் நடுங்கினான். தப்புவதற்கு என்ன வழி? "அழுக்காக இருக்கும் என்னையா சாப்பிடப் போகிறாய்? சற்றுப் பொறு. குளித்து விட்டுச் சுத்தமாக வருகிறேன்!" என்றான்.



குளியலறைக்குள் சென்ற சீடன் ஒரு இறகைக் கீழே வைத்தான். "மந்திரவாதி கூப்பிடும் போதெல்லாம் என்னைப் போல் பேசு," என்று கூறிச் சன்னல் வழியாகக் குதித்து ஓடி விட்டான்.

மந்திரவாதி சீடனைக் கூப்பிடும் போதெல்லாம், "இதோ வந்து விட்டேன்! இதோ வந்து விட்டேன்!" என்று பதில் வந்து கொண்டே இருந்தது.

சந்தேகப்பட்ட மந்திரவாதி குளியலறைக்குள் நுழைந்தான். சீடன் இல்லாததைக் கண்டு ஆத்திரம் அடைந்தான். "என்னையா ஏமாற்றுகிறாய்? இதோ உன்னைப் பிடிக்கிறேன்!" என்று கூறிச் சீடனைத் துரத்த ஆரம்பித்தான். சீடனை நெருங்கியும் விட்டான்.

சீடன் மிரண்டான். சட்டென்று இரண்டாவது இறகை எடுத்தான். “எனக்குப் பின்னால் ஒரு பெரிய ஆற்றை உருவாக்கு,” என்று கட்டளையிட்டான். உடனே ஒரு பெரிய ஆறு உருவானது. அது மந்திரவாதியை அடித்துச் சென்றது. ‘அப்பாடா! தப்பித்தேன்!’ என்று பெருமூச்சு விட்டான் சீடன்.

‘மடக்... மடக்...’ என்ற சத்தம் கேட்டுத் திரும்பிப் பார்த்தான். ‘ஐயோ! இதென்ன!! மந்திரவாதி ஆறு முழுவதையும் குடித்து விட்டானே!’

சீடன் மூன்றாவது இறகை எடுத்தான். “எனக்குப் பின்னால் ஒரு பெரிய காட்டுத் தீயை உருவாக்கு!” என்றான்.



உடனே தீ உருவானது. ஆனால் மந்திரவாதி, தான் குடித்த ஆற்றுநீரை உமிழ்ந்து தீயை அணைத்து விட்டான்!

தலைதெறிக்க ஓடிய சீடன், குருவிடம் வந்து சேர்ந்தான். மந்திரவாதியும் பின் தொடர்ந்து வந்தான்.

"உன் சீடனை என்னிடம் கொடுக்கிறாயா? இல்லை உன்னைச் சாப்பிடட்டுமா?" என்று குருவை மிரட்டினான். குரு, "உனக்குத் தெரிந்த எல்லா வித்தைகளும் எனக்கும் தெரியும்! ஒரு போட்டி வைப்போம். அதில் நீ வென்றால் சீடனை அழைத்துப் போ," என்றார்.

"சரி போட்டியை ஆரம்பி," என்றான் மந்திரவாதி. "இந்த மாளிகை அளவுக்கு உன்னால் உயரமாக முடியுமா?" என்றார் குரு. உடனே மந்திரவாதி, தன் உடலை மிகவும் உயரமாக்கிக் காட்டினான்.

"உயரமாவது எல்லோருக்கும் சுலபம். பட்டாணி அளவுக்குச் சிறியதாக மாறு பார்ப்போம்!" என்றார் குரு. "இது என்ன பெரிய காரியம்!" நொடியில் மந்திரவாதி பட்டாணியாக மாறினான். குரு உடனே பட்டாணியை வாயில் போட்டு மென்று விழுங்கிவிட்டார். அன்றிலிருந்து மந்திரவாதி யார் கண்ணிலும் தென்படவில்லை.

மூலம் : ஜப்பானிய நாட்டுப்புறக் கதை






P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : Uma Krishnaswamy

# பறவைகளின் கூடுகள்

சுற்றுப்புறத்தில் நாம் ஏராளமான பறவைகளைப் பார்க்கிறோம். அவற்றின் கூடுகளில்தான் எத்தனை எத்தனை விதங்கள்!

தூங்குவதற்காகவும், ஓய்வு எடுப்பதற்காகவும் மட்டுமே பறவைகள் கூடு கட்டுவதில்லை. கூட்டுக்குள்ளே முட்டை இடுகின்றன. குஞ்சு பொரிக்கின்றன. குஞ்சுகளைப் பாதுகாப்பாக வளர்க்கின்றன.



தையற்சிட்டு ஒரு அதிசயமான பறவை. நார்களை நூல் போல அலகில் எடுத்துக் கொள்ளும். இரண்டு இலைகளைச் சேர்த்து ஓரத்தில் துளைகள் செய்து பை போல் தைத்துவிடும். சில சமயம் பத்துத் தையல்கள் கூடப் போடும். ஒரு தொட்டில் போலக் கூட்டை உருவாக்கும்.



இந்தப் பச்சை இலைப் பையில் தன் குஞ்சுகளை வளர்க்கும். மற்ற விலங்குகளாலும் பறவைகளாலும் இந்தக் கூட்டை எளிதில் கண்டுபிடிக்க முடியாது.



தையற்சிட்டு போலவே தூக்கணாங்குருவியும் புல்லையும் நார்களையும் கொண்டு உறுதியான கூடுகள் முடையும். அவற்றைக் கிளைகளின் நுனியில் பந்து பந்தாகத் தொங்கவிடும். கூட்டுக்குள்ளே முட்டை வைக்க ஒரு அறை இருக்கும். கூட்டின் நுழைவாயில் கீழ்நோக்கி இருப்பதால் எதிரிகள் உள்ளே நுழைய முடியாது. தூக்கணாங்குருவிக் கூடு மண் கூஜா போலத் தோற்றம் அளிக்கும்.



மரங்கொத்தி, ஆந்தை, மலைமொங்கான் போன்ற பறவைகள் மரப்பொந்தில் வாழும். மலைமொங்கான் பறவையிடம் ஒரு விந்தையான பழக்கம் உண்டு. பெண் பறவை முட்டை இட்டு அடைகாக்கும் போது ஆண் பறவை முழுமையாகப் பொந்தை அடைத்து விடும். அலகு மட்டும் வெளியே வர ஒரு சிறு துளை வைக்கும்.

ஆண் பறவை இரை தேடிக்கொண்டு வந்து இந்தத் துளை வழியாகத் தரும். குஞ்சுகள் பெரிதானவுடன் ஆண்-பெண் இரு பறவைகளுமே இரை தேடச் செல்லும்.



சில பறவைகள் கூடு கட்டுவதில்லை. இனிமையாகப் பாடும் குயிலும் இந்த வகையைச் சேர்ந்ததுதான். குயில் மற்ற பறவைகளின் கூட்டிலோ அல்லது தரையிலோ முட்டையிடும்.



தரையில் வைத்த முட்டையைத் தந்திரமாகக் காக்கையின் கூட்டில் கொண்டு போய் வைத்து விடும். காக்கை அதை அடைகாத்துக் குஞ்சு பொரிக்கும். குஞ்சு பெரிதானதும் மற்ற குயில்களுடன் போய்ச் சேர்ந்துவிடும்.

மீன்கொத்தி மிக அழகான பறவை. அது மீன் பிடிப்பதில் திறமை வாய்ந்தது. ஏரிகள், குளங்கள், குட்டைகளின் அருகே தாழ்ந்த மரக்கிளைகளில் அமர்ந்து தண்ணீரை இமை கொட்டாமல் பார்த்துக் கொண்டே இருக்கும். திடீரென்று நீருக்குள் பாய்ந்து தன் நீண்ட அலகில் மீனைக் கொத்திக் கொண்டு பறந்துவிடும். ஆற்றங்கரையில் சுரங்கங்கள், குழிகள் அமைத்து அவற்றுக்குள் வாழும். காய்ந்த புற்கள் கொண்டு கூட்டின் வாயிலை மூடிவிடும்.

பறவைகள் பற்றி இதுபோன்ற இன்னும் பல சுவையான தகவல்கள் உள்ளன.
உற்றுக் கவனித்து வந்தால்
அவை நமக்குத் தெரியவரும்.





P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : Uma Krishnaswamy

# கண்டுபிடிப்போம் வா!





எண்கள் இரண்டைக் கூட்டினால்
பழமொன்று வரும் - *என்ன பழம்?*

பச்சை கோலி, கண்ணாடி கோலி
பார்க்க அழகான கோலி
கொத்து கொத்தாய்
கொடியில் காய்த்து தொங்குவது - *அது என்ன?*

பூத்த போது மஞ்சள்
பூத்ததும் சிவப்பு
காய்த்தபோது சிவப்பு
பழுத்ததும் கருப்பு
- *அது என்ன?*



காக்கை போல் கருமை நிறம்
கையால் விண்டால் ஊதா நிறம்
வாயால் மென்றால் நீல நிறம்
பாம்பின் பெயரே அதற்கு உண்டு - *அது என்ன?*

வெளியே ஆயிரம் முள்
வெட்டிப் பிளந்தால் பிசுபிசுக்கு
துடைத்துப் பார்த்தால் வைக்கோல்
அதையும் நீக்கினால் அல்வாத்துண்டு - *அது என்ன?*

பச்சைக் கம்பளம் போர்த்து
கருப்பு மணிகளை ஒளித்த வெள்ளையன் யார்?







அடிஅடி என்று அடித்து
உரிஉரி என்று உரித்து
உள்ளிருப்பதை எடுத்துக்கொண்டு
மேலே இருப்பதை எறிந்துவிட்டேன்
*- அது என்ன?*

உச்சியில் கிரீடம் வைத்தவனுக்கு
உடம்பெல்லாம் கண் *- அவன் யார்?*

பச்சைத் தோலனுக்கு
உள்ளே சிவப்பு ரத்தம் *- அவன் யார்?*

பச்சை மரம் முழுவதுமே
பளபளக்கும் மஞ்சள் பந்து
முகர்ந்து பார்த்தால் மணமணக்கும்
தின்று பார்த்தால் புளியாய்ப் புளிக்கும் *- அது என்ன?*

பச்சை, சிவப்பு, மஞ்சள் நிறம்
தோலை உரித்தால் வெள்ளை நிறம்
விரும்பி உண்ணும் விந்தைப்பழம் *- அது என்ன?*



பவழம்போல் சிவப்பாயிருக்கும் பழம்
இது சுடாத சுவைமிக்க வடையாகும்
*- அது என்ன?*



திராட்சைப்பழம், ஆரஞ்சுப்பழம், சீதாப்பழம்,
நாகப்பழம், பேரீச்சம்பழம், தர்பூசணிப்பழம்,
இலந்தைப்பழம், பலாப்பழம், புளியம்பழம்,
அன்னாசி, வாழைப்பழம், எலுமிச்சைப்பழம்,

செடிக்குப் பத்து காயாம்
இலைக்குப் பத்து முள்ளாம்
வடிவில் முட்டை உருவம்
குடையின் காம்புபோல் காம்பாம் - *அது என்ன?*

மஞ்சளாய்ப் இருக்கும் காய்
மனங்கவரும் இந்தக் காய்
வெஞ்சனம் செய்து வைக்க
வெகு சுவையாய் இனிக்கும் - *அது என்ன?*





கிண்ணம் போலப் பூப் பூக்கும்
கிடாரம் போலக் காய் காய்க்கும் - *அது என்ன?*

பந்தலைச் சுற்றி பாம்புப் தொங்குது - *அது என்ன?*

எங்கள் வீட்டுத் தோட்டத்திலே
காய்ச்சுக் கிடக்குது ஓரத்திலே
எடுத்து எடுத்து நறுக்கினாலே
எட்டுக் கல்லு தோடு தானே - *அது என்ன?*



இலைகளால் மூடிய பந்து
இதை வாங்கப் பலரும் வந்து
விலை கொடுத்து வாங்குவார்
விதவிதமாய்ச் சமைப்பார் - *அது என்ன?*

யானைக் காதென இலைகளாம்
யாரையும் கவரும் செடியிதாம்
பானை அளவு கிழங்கு தரும்
பாரும்! யோசித்து விடை கூறும்!



அண்ணன் வீட்டுத் தோட்டத்திலே
பச்சைப்பாய் விரித்திருக்கிறது - *அது என்ன?*

என்னை வெட்டினால்
உன்னை அழ வைப்பேன் - *நான் யார்?*

காயை வேக வைத்தாலும்
கசப்பு விட்டுப் பிரியாது
வாயைக் காக்கும் பல்லுக்கு
வகையாய்ப் பலன் தருவதாம் - *அது என்ன?*



ஆரஞ்சு வண்ணமுடையது
கூம்பு வடிவானது
பச்சைக் கூந்தலுடையது
கண் ஒளிக்கு நல்லது - *அது என்ன?*

புடலங்காய், கத்தரிக்காய், பூசணிக்காய், பரங்கிக்காய்,
வெண்டைக்காய், முட்டைகோஸ், சேனைக்கிழங்கு,
வெங்காயம், கீரை, கேரட், பாகற்காய்




P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi
Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai
Artist : Uma Krishnaswamy

## (73) பழம் சுடுமா?

ஒரு சமயம் ஔவையார் காட்டு வழியில் பயணம் செய்து கொண்டிருந்தார். கடும் வெயிலில் நீண்ட நேரம் நடந்தார். அவருக்குப் பசியும் களைப்பும் ஏற்பட்டது.

வழியில் ஒரு பெரிய நாவல்மரத்தைப் பார்த்தார். ஒரு சிறுவன் மரத்தின் மேல் அமர்ந்து நாவல் பழங்களை ரசித்துச் சாப்பிட்டுக் கொண்டிருந்தான். அவனைப் பார்த்து ஔவையார், "தம்பி! எனக்கும் பசியாக இருக்கிறது. பழங்கள் பறித்துப் போடுகிறாயா?" என்று கேட்டார்.



சிறுவன், "பாட்டி! உனக்குச் சுட்டபழம் வேண்டுமா? சுடாத பழம் வேண்டுமா?" என்று கேட்டான். ஔவையாருக்கு ஒன்றும் புரியவில்லை. 'பழங்களில் சுடுகிற பழம், சுடாத பழம் என்று இருக்கிறதா என்ன?' என்று குழம்பினார். "தம்பி! எனக்கு சுடாத பழங்களே போதும்!" என்று சொல்லிவிட்டார்.

உடனே சிறுவன் ஒரு மரக்கிளையை உலுக்கினான். நன்கு பழுத்த பழங்கள் 'பொல பொல' வென்று உதிர்ந்தன. கீழே விழுந்த பழங்களை ஔவையார் சேகரித்தார். அவற்றில் ஒட்டியிருந்த மண்ணை ஊதினார்.

மரத்தின் மேலிருந்து சிறுவன், "என்ன பாட்டி! பழம் சுடுகிறதா? நன்றாக ஊதி, ஊதிச் சாப்பிடு!" என்று சிரித்தான். 'ஓ! இதைத்தான் சுட்டபழம் என்றானா சிறுவன்! இது முன்பே எனக்கு ஏன் புரியவில்லை? இத்தனை அனுபவம் இருந்தும் நான் ஒரு சிறுவனிடம் தோற்றுவிட்டேனே,' என்று எண்ணி வெட்கப்பட்டார். இந்த நிகழ்ச்சியை ஒரு பாட்டாக எழுதினார்.



# அதிசய நெல்லி



இன்றைய தருமபுரி முன்னொரு காலத்தில் தகடூர் என்று அழைக்கப்பட்டது. அதை அதியமான் என்னும் அரசன் ஆண்டு வந்தான். அவன் சிறந்த வீரன். இரக்க குணம் மிக்கவன்.

ஒரு சமயம் ஔவையார் தகடூர் வந்திருந்தார். அதியமான் அவரை மகிழ்ச்சியோடு வரவேற்றான். தன் அரண்மனையிலேயே சில நாட்கள் தங்கும்படி வேண்டினான். ஔவையாரும் சிறிது காலம் அவனது அரண்மனையில் தங்கினார்.

ஒருநாள் அதியமான் மலைப் பகுதியைச் சுற்றிப் பார்க்கச் சென்றான். அங்கு மலை உச்சியில் ஒரு கருநெல்லிமரம் இருந்தது. எப்போதோ ஒரு முறைதான் அதில் ஓரிரு கனிகள் கிடைக்கும். அந்த அதிசயக் கனியைச் சாப்பிடுபவர்கள் நோயில்லாமல் நீண்ட காலம் வாழ்வார்கள்.

அதியமான் சென்றபோது நெல்லி மரத்தில் ஒரு பழுத்த கனி இருந்தது. அதை உற்சாகத்துடன் பறித்தான். பத்திரமாக அரண்மனைக்குக் கொண்டு வந்தான். பழத்தை ஔவையாருக்குக் கொடுக்க விரும்பினான்.

'பழத்தின் அருமையை முன்பே சொல்லிவிட்டால் ஔவையார் சாப்பிடமாட்டார். என்னையே சாப்பிடச் சொல்வார்,' என்று அதியமான் நினைத்தான். எதுவுமே சொல்லாமல் ஔவையாரிடம் பழத்தைக் கொடுத்தான். அன்புடன் அரசன் கொடுத்த பழத்தை ஔவையாரும் சாப்பிட்டார். அதன் பிறகுதான் பழத்தின் அருமையைப் பற்றி அதியமான் சொன்னான்.

"நீ சாப்பிடாமல் பழத்தைத் எனக்குக் கொடுத்துவிட்டாயே," என்று ஔவையார் வியந்தார். "என்னைவிட நீங்கள்தான் நீண்டகாலம் வாழ வேண்டும். உங்களால்தான் இந்த உலகத்திற்குப் பெரும் பயன்," என்றான் அதியமான்.

அவனது உயர்ந்த குணத்தைப் பெரிதும் பாராட்டிய ஔவையார் இந்த நிகழ்ச்சியையும் ஒரு பாடலாக எழுதினார்.






P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : S. P. Raju

# ஆயிரம் வாளித் தண்ணீர்



யூகியோ, கடற்கரையில் அலைகளைப் பார்த்தபடி நின்று கொண்டிருந்தான். அலைகள் அவன் கால்களைத் தொட்டுத் தொட்டுத் திரும்பிச் சென்று கொண்டிருந்தன.

திடீரென்று பாறைகளுக்கு இடுக்கில் ஒரு திமிங்கலம் மாட்டிக் கொண்டு இருப்பதைப் பார்த்தான். அது தன் பெரிய வாலைத் 'தொப் தொப்' என்று அடித்துக் கொண்டிருந்தது. பயத்துடன் கண்களை உருட்டி அங்குமிங்கும் பார்த்துக் கொண்டிருந்தது.



அதைப் பார்த்த யூகியோ, "ஐயோ! உன்னால் தண்ணீர் இல்லாமல் வாழ முடியாதே! இரு! நான் உனக்கு உதவி செய்கிறேன்," என்று கடலை நோக்கி ஓடினான். வாளியில் கடல்நீரை நிரப்பித் திமிங்கலத்தின் தலையில் ஊற்றினான்.

வெயில் கடுமையாக இருந்தது. "நீ இவ்வளவு பெரிதாக இருக்கிறாய். அதனால் என்ன! கவலைப்படாதே! ஒரு ஆயிரம் வாளித் தண்ணீர் ஊற்றிய பிறகுதான் நான் நிறுத்துவேன்!" என்றான் யூகியோ.

ஒவ்வொரு முறையும் தண்ணீரை ஊற்றும் போது மூன்று, நான்கு... என்று கணக்கு வைத்துக் கொண்டான். நான்கு வாளி தலையில், மூன்று வாளி முதுகில், நான்கு வாளி வாலில் என்று திமிங்கலத்தின் உடல் முழுவதும் தண்ணீரை ஊற்றிக்கொண்டே இருந்தான்.

யூகியோ களைத்துப் போனான். மூச்சு வாங்கியபடி ஒரு நிமிடம் நின்றான். திமிங்கலத்தின் கண்களைப் பார்த்தான். உடனே அவன் கொடுத்த வாக்குறுதி நினைவுக்கு வந்தது.





வாளியை எடுத்துக் கொண்டு மீண்டும் ஓடினான். 'எத்தனை வாளிகள் ஊற்றினேன்?' அவனுக்கு மறந்து விட்டது. தண்ணீரை ஊற்றிக் கொண்டே இருந்தான். அவனால் நடக்க முடியவில்லை. தள்ளாடினான்.

அதற்குள் யூகியோவின் தாத்தா ஊர் மக்களுடன் அங்கு வந்தார். அவனைத் தூக்கினார். "போதும்! நீ நிறைய வேலை செய்து விட்டாய். இனி நாங்கள் செய்கிறோம்," என்றார். ஒரு பாறையின் நிழலில் அவனைப் படுக்க வைத்தார்.

எல்லோரும் கையில் கிடைத்த பாத்திரங்களில் தண்ணீரை நிரப்பித் திமிங்கலத்தின் மேல் கொட்டினர். சிலர் தம் சட்டைகளை நனைத்துத் திமிங்கலத்தின் மேல் விரித்துப் போட்டனர். அதன் உடல் முழுவதும் ஈரப்படுத்தினர்.

நேரம் ஆக ஆகப் பெரிய அலைகள் வர ஆரம்பித்தன. திமிங்கலத்தின் வாலை மூழ்கடித்தன. ஒவ்வொரு அலை அடிக்கும் போதும் திமிங்கலம் சற்று நகர ஆரம்பித்தது. ஒரு பெரிய அலை அதைப் பாறை இடுக்கிலிருந்து விடுவித்தது. ஒரு கணம் அது அசையாமல் இருந்தது. பிறகு வாலை ஒரு அடி அடித்தது! நீந்திக் கடலுக்குள் சென்று விட்டது.

திமிங்கலம் தூரத்தில் சென்று மறைவதைப் பார்த்தபடி எல்லோரும் நின்றனர். அப்போது யூகியோ பாறை நிழலில் தூங்கிக் கொண்டிருந்தான்.

மூலம் : ஜப்பானியக் கதை






P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : S. P. Raju

# ஒரு மணி அரிசி



முன்னொரு காலம். ஒரு நாட்டில் மக்கள் தாங்கள் விளைவித்த அரிசியில் பெரும் பகுதியை அரசாங்கத்துக்குக் கொடுத்து வந்தனர். இப்படியே பல ஆண்டுகள் கடந்தன.

ஓர் ஆண்டு நாட்டில் கடும் பஞ்சம் ஏற்பட்டது. மக்களிடம் சாப்பிட அரிசி இல்லை. மந்திரிகள், "அரசே கிடங்குகளைத் திறந்து விடுங்கள். மக்களுக்கு அரிசியைக் கொடுப்போம்," என்றனர்.

ஆனால் அரசனோ, "பஞ்சம் எத்தனை காலம் நீடிக்குமோ தெரியாது. அரண்மனையில் எப்போதும் அரிசி இருக்க வேண்டும். விருந்துகளும் அவ்வப்போது அளித்தாக வேண்டுமே!" என்று சொல்லி மறுத்துவிட்டான்.

ஒரு நாள் அரண்மனை விருந்துக்காகக் கிடங்கிலிருந்து அரிசி எடுக்கப்பட்டது. யானைகள் அரிசிக் கூடைகளுடன் அரண்மனைக்குச் சென்று கொண்டு இருந்தன.



வழியில் ராணி என்ற சிறுமி ஒரு கூடையில் இருந்து அரிசி கீழே சிந்துவதைக் கவனித்தாள். சிந்தும் அரிசியைத் தன் பாவாடையில் பிடித்தபடியே யானையுடன் நடந்தாள்.

அரண்மனை வாசலை அடைந்ததும் காவலர்கள் ராணியை விசாரித்தனர். "கூடையிலிருந்து அரிசி கீழே சிந்திக் கொண்டிருந்தது. நான் அதை அரசனுக்குக் கொடுக்கப் போகிறேன்," என்றாள்.

ராணியின் நேர்மையைப் பற்றி அறிந்த அரசன் அவளை அழைத்தான். "நான் உனக்குப் பரிசு அளிக்க விரும்புகிறேன். என்ன வேண்டுமோ கேள்!" என்றான்.

ராணி, "எனக்குப் பரிசு எதுவும் வேண்டாம். அப்படியும் நீங்கள் விரும்பினால் எனக்கு ஒரே ஒரு மணி அரிசி கொடுங்கள்! அது போதும்!" என்றாள்.

அரசன் அவளை ஆச்சரியத்துடன் பார்த்தான். பிறகு, "நான் ஓர் அரசன். என் தகுதிக்கு ஏற்ப உனக்குப் பரிசு கொடுக்க விரும்புகிறேன். இன்னும் ஏதாவது கேள்," என்றான்.

ராணி, "சரி! அப்படியானால் இன்று எனக்கு ஒரு மணி அரிசி தாருங்கள். நாளை இரண்டு அரிசி. அதற்கு அடுத்த நாள் நான்கு



அரிசி. இப்படியே முப்பது நாட்களுக்கும் ஒவ்வொரு நாளும் முந்தைய நாள் கொடுத்ததை விட இரு மடங்கு அரிசி கொடுங்கள்," என்றாள்.

அரசனுக்கு இது ஒன்றும் பெரிதாகத் தோன்றவில்லை. உடனே ஒப்புக் கொண்டான். சிறுமிக்கு அன்று ஒரு அரிசி கொடுக்கப்பட்டது. மறுநாள் இரண்டு. அதற்கு அடுத்த நாள் நான்கு. பத்தாவது நாள் 512 அரிசி மணிகள் கொடுக்கப்பட்டன. இது ஒரு கையளவு இருந்தது.

பதினாறாவது நாள் அவளுக்கு இரண்டு கூடைகள் அளிக்கப்பட்டன. அதில் 32,768 அரிசி மணிகள் இருந்தன. "இந்த இரு மடங்கு முறையில் நான் நினைத்ததை விட நிறைய அரிசிதான் கொடுக்க வேண்டியிருக்கிறது. ஆனாலும் பரவாயில்லை," என்று அரசன் எண்ணினான்.

இருபத்து நான்காவது நாள் ராணிக்கு எட்டுக் கூடைகளில் 8,388,608 அரிசி கொடுக்கப்பட்டது. இருபத்து ஏழாவது நாள் 64 கூடை அரிசி 32 காளைகளின் மேல் ராணி வீட்டுக்குச் சென்றது. அதில் 67,108,864 அரிசி மணிகள் இருந்தன. 'ஒரு மணி அரிசியில் ஆரம்பித்து இவ்வளவு பெருகிவிட்டதே!' அரசன் கலங்கினான்.



முப்பதாவது நாள். அரசனின் கிடங்குகள் காலிஆயின. 256 யானைகளின் மேல் 536,870,912 அரிசி மணிகள் கூடைகளில் ராணி வீட்டுக்கு எடுத்துச் செல்லப்பட்டன. "இத்தனை அரிசியை என்ன செய்யப் போகிறாய்?" என்று அரசன் ராணியிடம் கேட்டான்.



"பசியுடன் உள்ள மக்களுக்குக் கொடுத்து விடுவேன். உங்களுக்கும் ஒரு கூடை அரிசி தருவேன். இனி நீங்கள் உங்களுக்குத் தேவையான அரிசியை மட்டுமே எடுத்துக் கொள்வேன் என்று உறுதி அளிக்கிறீர்களா?" என்றாள்.

"சரி! அப்படியே செய்கிறேன்!" என்றான் அரசன்.

மூலம் : இந்திய நாட்டுப்புறக்ககதை

மொத்தமாக முப்பது நாள்களுக்கும் சேர்ந்து ராணிக்கு கிடைத்த அரிசியின் எண்ணிக்கை 1,073,741,823.

ஒரு நாள்காட்டியை எடுத்துக் கொண்டு ராணிக்கு ஒவ்வொரு நாளும் கிடைத்த அரிசியின் எண்ணிக்கையைக் கணக்கிட்டு எழுதவும். எல்லாத் தேதிகளின் கீழ் எழுதிய அரிசியின் எண்ணிக்கையைக் கூட்டினால் ராணிக்கு கிடைத்த மொத்த அரிசியின் எண்ணிக்கை கிடைத்துவிடும்.





P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : S. P. Raju

# அதிசயக் கூழாங்கல்



குட்டிக் கரடி தினமும் ஆற்றங்கரைக்கு உலாவச் செல்லும். வழியில் கிடக்கும் அழகான கூழாங்கற்களைச் சேகரிக்கும். அதன் வீடு முழுவதும் கூழாங்கற்கள் குவிந்திருக்கும்.

ஒரு நாள் அதற்குச் சிவப்புக் கூழாங்கல் ஒன்று கிடைத்தது. அதன் அழகை ரசித்துக் கொண்டே நடந்தது. திடீரென்று மழை!

'மழை நின்றுவிட்டால் நன்றாக இருக்குமே!' என்று குட்டிக் கரடி நினைத்தது. என்ன அதிசயம்! உடனே மழை நின்றுவிட்டது.

'ஓ! இது ஒரு அதிசயக் கூழாங்கல். இந்தக் கல் கையில் இருக்கும்போது நினைத்தது எல்லாம் நடக்கிறதே! இதை அம்மா அப்பாவிடம் காண்பித்தால் ஆச்சரியப் படுவார்களே!' குட்டிக் கரடி வீட்டை நோக்கி நடந்தது.



ஐயோ! எதிரே ஒரு சிங்கம்! குட்டிக் கரடி நடுங்கியது.

சட்டென்று கூழாங்கல் நினைவுக்கு வந்தது. 'இப்போது நான் பாறையாக மாறிவிட்டால்...' நினைத்துக் கொண்டிருக்கும்போதே குட்டிக்கரடி பாறையாக மாறியது. கூழாங்கல் அதன் அருகே கீழே விழுந்தது.

நல்ல வேளை! சிங்கத்திடமிருந்து குட்டிக் கரடி தப்பிவிட்டது! ஆனால் மீண்டும் எப்படிக் குட்டிக் கரடியாக மாறுவது? கூழாங்கல்தான் கீழே கிடக்கிறதே? அதைக் கையில் எடுத்து மனதில் நினைத்துக் கொண்டால்தானே கரடியாக மாற முடியும்?





குட்டிக் கரடியின் பெற்றோர், 'இருட்டிவிட்டதே! குட்டி ஏன் இன்னும் வீடு திரும்பவில்லை?' என்று கவலைப்பட்டன. அக்கம் பக்கத்தில் விசாரித்தன. யாரும் குட்டிக் கரடியைப் பார்க்கவே இல்லை.

இப்படியே பல நாட்கள் சென்றன. ஒரு நாள் எப்போதும் போல குட்டிக் கரடியின் பெற்றோர் அதைத் தேடி அலைந்தன. களைப்பாக இருந்தது. ஒரு பாறையின் அருகே அமர்ந்தன.

அதுதான் பாறையாக மாறியிருந்த குட்டிக்கரடி. தன் பெற்றோரைப் பார்த்ததில் அதற்கு ஒரே மகிழ்ச்சி. ஆனால் அவர்கள் அதை அடையாளம் கண்டுகொள்ளவே இல்லை!

குட்டியின் அம்மா அருகே கிடந்த கூழாங்கல்லை எடுத்தது. 'ஆ! நம் குட்டிக்குக் கூழாங்கல் என்றால் மிகவும் பிடிக்குமே!' நினைத்தபடியே பாறையின் மேல் கூழாங்கல்லை வைத்தது.

பாறையாக மாறியிருந்த குட்டிக் கரடி, "நான் மீண்டும் குட்டிக் கரடியாக மாறினால் எவ்வளவு நன்றாக இருக்கும்!' என்று நினைத்தது.

கூழாங்கல்லைத்தான் அம்மா பாறை மேல் வைத்து விட்டதே! உடனே பாறை குட்டிக் கரடியாக மாறியது. அதைப் பார்த்து அதன் பெற்றோர் மிகவும் மகிழ்ச்சி அடைந்தன.

குட்டியைத் தூக்கி வைத்து விளையாடின.




P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : Uma Krishnaswamy

# மீனவனும் பூதமும்



ஒரு கடற்கரைக் கிராமம். அதில் ஒரு மீனவன் வாழ்ந்து வந்தான். அவன் தினமும் மூன்று முறை மட்டுமே வலை வீசுவான். வலையில் சிக்கும் மீன்களை விற்று வாழ்க்கை நடத்தி வந்தான்.

ஒரு நாள் எப்போதும் போல் அவன் மீன் பிடிக்கச் சென்றான். வலை வீசினான். வலையை வெளியே இழுக்க முயன்றபோது அது எளிதில் வரவில்லை. மிகவும் சிரமப்பட்டு அதை வெளியே இழுத்தான். அதில் இறந்துபோன ஒரு விலங்கின் உடல் இருந்தது.

மீனவன் அதைத் தூக்கி எறிந்துவிட்டு இரண்டாம் முறை வலையை வீசினான். ‘இந்த முறையாவது நல்ல மீன்கள் அகப்படவேண்டும்,’ என்று கடவுளை வேண்டிக் கொண்டான்.

இந்த முறையும் சிரமப்பட்டு வலையை மேலே இழுத்தான். வலையில் ஒரு பெரிய பானை சிக்கி இருந்தது. பானை முழுதும் கல், மண், கண்ணாடித் துண்டுகள் நிரம்பியிருந்தன.



‘அடக் கடவுளே! இது என்ன சோதனை. ஒரு மீன் கூட அகப்படவில்லையே!’ என்று சோர்ந்து போனான். கடைசி முறையாகக் கடலில் வலையை வீசினான்.

இந்த முறையும் வலை கனத்தது. அட இதென்ன! வலையில் ஒரு சிறிய பித்தளை ஜாடி!

“இதை விற்றாவது இன்றையச் சாப்பாட்டுக்கு வழி செய்யலாம்,” என்றபடி மீனவன் ஜாடியைத் திறந்தான். உள்ளே ஒன்றுமில்லை. ஆனால் திடீரென்று அதிலிருந்து கரும்புகை கிளம்பியது.

புகை மெல்ல மேலே எழும்பி வானத்தை எட்டியது. பூதம் போன்ற ஒரு வடிவம் உருவானது. அதன் தலை மேகத்தைத் தொட்டது. கண்கள் வைரம் போல் ஜொலித்தன. வாய் குகை போல இருந்தது.

அதைப் பார்த்த மீனவன் மிரண்டு போனான். அவன் கை கால்கள் நடுங்கின. வாய் உலர்ந்தது. என்ன செய்வதென்று தெரியாமல் சிலைபோல் நின்றான்.

பூதம் பேச ஆரம்பித்தது. “இப்போது நான் உன்னைக் கொல்லப் போகிறேன்!” என்றது.



"நான்தானே உன்னைக் கடலில் இருந்து வெளியே கொண்டு வந்தேன். என்னை ஏன் கொல்ல வேண்டும்?" என்றான் மீனவன்.

"நூறு ஆண்டுகள் நான் இந்த ஜாடிக்குள்ளேயே அடைபட்டுக் கிடந்தேன். என்னை யார் விடுதலை செய்கிறார்களோ அவர்களுக்கு ஏராளமான செல்வம் கொடுக்கலாம் என்று நினைத்தேன். ஆனால் யாரும் வரவில்லை. இப்படியே மேலும் நானூறு ஆண்டுகள் கடந்தன. என்னை விடுதலை செய்பவர்களுக்கு மூன்று வரங்கள் தரலாம் என்று இருந்தேன் அப்போதும் யாரும் வரவில்லை. இனி யார் என்னை விடுவிக்கிறார்களோ அவர்களுக்கு மரணம்தான் என்று முடிவு செய்தேன். இப்போது நீ என்னை விடுதலை செய்துவிட்டாய்!" என்றது பூதம்.

"இதென்ன நியாயம்! நல்லது செய்ததற்குத் தண்டனையா?" என்றான் மீனவன்.

"ஆம்! இனியும் என் நேரத்தை வீணாக்காதே!" என்று மீனவனை நெருங்கியது பூதம்.

'எப்படித் தப்பிப்பது?' மீனவன் சிந்தித்தான்.

"எனக்கு ஒரே ஒரு சந்தேகம். நீ வானத்தை எட்டும் அளவுக்குப் பெரியவனாக இருக்கிறாய். உன் கால் நகம் கூட இந்த ஜாடிக்குள் நுழையாதே! நீ இத்தனை காலம் இதற்குள் எப்படி இருந்திருக்க முடியும்? நீ பொய் சொல்கிறாய்," என்று மீனவன் கேலி செய்தான்.

உடனே பூதம், "இதோ! நுழைந்து காட்டுகிறேன் பார்!" என்று கூறித் தன் உடலைச் சுருக்கி ஜாடிக்குள் புகுந்தது. ஒரே நொடியில் மீனவன் ஜாடியை இறுக்க மூடினான்.

"இன்னும் ஆயிரம் வருடங்கள் இப்படியே கிட," என்று ஜாடியைத் தூக்கிக் கடலில் எறிந்தான்.

மூலம் : 1001 அரேபிய இரவுகள்






P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : Uma Krishnaswamy

# அறிவே செல்வம்



ஒரு ஊரில் மூன்று சகோதரர்கள் இருந்தனர். அவர்கள் மிகவும் புத்திசாலிகள். அவர்கள் தங்கள் அறிவை வளர்க்க விரும்பினர். பல நாடுகளைச் சுற்றிப் பார்க்க நீண்ட பயணம் மேற்கொண்டனர்.

ஒரு நாள் அவர்கள் ஒரு ஊரை நெருங்கினர். எதிரே ஒரு சிப்பாய் எதையோ தேடிக் கொண்டே வருவதைப் பார்த்தனர்.

*சகோ-1* : ஐயா, நீங்கள் ஒட்டகத்தையா தேடுகிறீர்கள்?

*சகோ-2* : அதற்கு இடது கண் தெரியாதா?

சகோ-3 : அதன் மேல் ஒரு குழந்தை சவாரி செய்ததா?



*சிப்பாய்* : அட! என் ஒட்டகம் பற்றி எல்லா விவரமும் தெரிந்திருக்கிறதே! அது உங்களிடம் தான் இருக்க வேண்டும்!.

*சகோ-1* : இல்லை! நாங்கள் உங்கள் ஒட்டகத்தைப் பார்க்கவேயில்லை.

*சிப்பாய்* : அப்படியானால் என் ஒட்டகத்தைப் பற்றி விவரங்கள் உங்களுக்கு எப்படித் தெரியும்? வாருங்கள் தலைவரிடம்.

*(நால்வரும் தலைவரிடம் செல்கின்றனர். நடந்ததை எல்லாம் சிப்பாய் எடுத்துக் கூறுகிறார்)*

*தலைவர்* : எங்கள் சிப்பாய் உங்களிடம் ஒன்றுமே கேட்கவில்லை. நீங்களே எல்லா விவரங்களையும் சொல்லிவிட்டீர்கள். அது எப்படி?

*மூவரும்* : எங்கள் அறிவுத் திறமையால் யூகித்தோம்.

*(எல்லோரும் கேலியாகச் சிரிக்கின்றனர்.)*

*தலைவர்* : அப்படியா! உங்கள் அறிவுத் திறமையைச் சோதித்துப் பார்ப்போமா?

*(தம் ஆட்களை அழைக்கிறார். அவர்கள் காதில் ரகசியமாக ஏதோ சொல்கிறார். ஆட்கள் வெளியே சென்று ஒரு பெட்டியைத் தூக்கி வருகின்றனர். மூன்று சகோதரர்களும் அந்த ஆட்களின் ஒவ்வொரு அசைவையும் கூர்ந்து கவனிக்கின்றனர்.)*

*தலைவர்* : இந்தப் பெட்டியில் என்ன இருக்கிறது? சொல்லுங்கள் பார்க்கலாம்!

*சகோ-1* : பெட்டியில் லேசான ஏதோ ஒரு பொருள் இருக்கிறது.

*சகோ-2* : அது உருண்டையானது.

*சகோ-3* : அது ஒரு மாதுளம்பழம்.

*(தலைவர் பெட்டியைத் திறக்கிறார். அதில் ஒரு மாதுளம்பழம்!)*

*தலைவர்* : சபாஷ்! பெட்டியில் இருப்பது மாதுளம் பழம்தான் என்பதை எப்படிக் கண்டுபிடித்தீர்கள்?

*சகோ-1* : உங்கள் ஆட்கள் பெட்டியைத் தூக்கி வரும் விதத்தைக் கவனித்தேன். பெட்டிக்குள் கனமாக எதுவும் இல்லை. எங்களைப் பரிசோதிக்கத்தான் ஏதோ ஒரு பொருள் இருக்கக் கூடும் என்று யூகித்தேன்.

*சகோ-2* : பெட்டிக்குள் ஏதோ உருளுவதைக் கேட்டேன். அது உருண்டையான பொருள் என்று அறிந்தேன்.



*சகோ-3* : உங்கள் வீட்டுத் தோட்டத்தில் மாதுளம் பழங்கள் தொங்குவதைப் பார்த்தேன். எனவே, உங்கள் ஆட்கள் பெட்டிக்குள் வைத்தது மாதுளையாகத் தான் இருக்க வேண்டும் என்று யூகித்தேன்.

*தலைவர்* : நிச்சயம் நீங்கள் அறிவாளிகள் தான். இப்போது சொல்லுங்கள்! ஒட்டகத்தைப் பற்றி எப்படி அறிந்தீர்கள்?

*சகோ-1* : கால் சுவடுகளைக் கொண்டு அந்த வழியாக ஒட்டகம் போயிருக்க வேண்டும் என்று தெரிந்து கொண்டேன்.

*சகோ-2* : சாலையின் வலது பக்கம் இருந்த செடிகளும், புல்லும் மட்டுமே மேயப்பட்டு இருந்தன. இடது பக்கச் செடிகள் அப்படியே இருந்தன. அதனால் ஒட்டகத்துக்கு இடது கண் தெரியாது என்று கண்டுபிடித்தேன்.

*சகோ-3* : ஒரு இடத்தில் காலை மடக்கி ஒட்டகம் உட்கார்ந்த அடையாளமும் ஒரு குழந்தையின் காலடிச் சுவடும் இருந்தன.

*தலைவர்* : ஆஹா! உங்கள் அறிவுத் திறமை என்னைக் கவர்ந்து விட்டது. நீங்கள் ஒட்டகத்தைத் திருடவில்லை! இனி நீங்கள் தான் என் ஆலோசகர்கள்.

*தழுவல்* : உஸ்பெக் நாட்டுக் கதை





# உன் பங்கு - என் பங்கு



ராமுவும் சோமுவும் சகோதரர்கள். ஒரு நாள் சோமு, "நம்மிடம் உள்ள பசு, மாமரம், கம்பளி இவற்றைச் சமமாகப் பிரித்துக் கொள்வோமா?" என்றான். ராமுவும் சம்மதித்தான்.

சோமு, "பசுவின் முன்பகுதி உனக்கு, பின்பகுதி எனக்கு. மாமரத்தின் கீழ்ப்பகுதி உனக்கு, மேல் பகுதி எனக்கு. கம்பளி பகலில் உனக்கு, இரவில் எனக்கு," என்று தந்திரமாகக் கூறினான். அப்பாவி ராமுவும், "சரி அப்படியே செய்வோம்," என்றான்.





ராமு தினமும் பசுவுக்கு உணவு கொடுப்பான். சோமு பசுவின் பாலைக் கறந்து விற்றுவிடுவான்.

ராமு மாமரத்திற்குத் தண்ணீர் ஊற்றுவான். சோமு மாம்பழங்களைப் பறித்துக் கொள்வான்.

ராமுவால் கம்பளியைப் பகலில் பயன்படுத்த முடியவில்லை. இரவில் சோமு கம்பளியைப் போர்த்திக் கொண்டு சுகமாகத் தூங்குவான்.

இதையெல்லாம் ஒரு பெரியவர் கவனித்துக் கொண்டிருந்தார். ராமுவை அழைத்து அவன் காதில் ஏதோ சொன்னார். ராமு சிரித்தபடியே வீடு திரும்பினான்.

மறுநாள் காலை எழுந்தவுடன் ராமு கம்பளியைத் தண்ணீரில் ஊறவைத்தான். இரவில் ஈரக் கம்பளியைச் சோமுவால் போர்த்திக் கொள்ள முடியவில்லை. குளிரில் நடுங்கினான். “ஏன் இப்படிச் செய்தாய்?” என்று கோபத்துடன் ராமுவிடம் கேட்டான்.

“கம்பளி பகலில் எனக்குத்தான் சொந்தம். அதை என்ன வேண்டுமானாலும் செய்வேன்,” என்றான் ராமு.

சோமுவால் பதிலே பேச முடியவில்லை. பொழுது விடிந்தது. சோமு பால் கறக்கச் சென்றான். ராமு பசுவின் கயிற்றைப் பிடித்து இழுத்தான். பசு கோபம் கொண்டது. பால் கறந்து கொண்டிருந்த சோமுவை எட்டி உதைத்தது. சோமு பால் குவளையுடன் கீழே விழுந்தான்.

"உனக்கு அறிவு இருக்கிறதா?" கோபமாகக் கத்தினான் சோமு.

"பசுவின் முன்பகுதி என்னுடையதுதானே! அதை இழுத்தால் உனக்கு ஏன் கோபம் வருகிறது?" என்றான் ராமு.



ஒன்றும் பேச முடியாமல் சோமு மாமரத்தடியில் படுத்தான். சற்று நேரம்தான் தூங்கியிருப்பான். 'டக்! டக்! டக்!' மரத்தை வெட்டும் சத்தம்! சோமு திடுக்கிட்டுக் கண் விழித்தான். ராமு மரத்தின் அடிப்பகுதியை வெட்டிக் கொண்டிருந்தான். "ஏய்! ஏய்! என்ன செய்கிறாய்?" என்று அலறினான் சோமு.

"அடிப்பகுதி என்னுடையதுதானே! அதைத்தான் வெட்டுகிறேன்," என்றான் ராமு.

இனியும் ராமுவை ஏமாற்ற முடியாது என்று சோமு உணர்ந்தான். அன்றிலிருந்து இருவரும் பால், மாம்பழங்கள் இவற்றை விற்றுப் பணத்தைச் சமமாகப் பகிர்ந்து கொண்டனர். கம்பளியை ஒரு நாள் சோமுவும் மறுநாள் ராமுவும் மாறி மாறிப் பயன்படுத்தினர்.






P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : S. P. Raju

# அணில் முதுகில் கோடுகள்

முன்னொரு காலத்தில் இலங்கையை இராவணன் என்ற ராட்சத மன்னன் ஆண்டு வந்தான். அவனுக்குப் பத்துத் தலைகள்! ஒரு சமயம் அவன் இராமனின் மனைவி சீதையைக் காட்டிலிருந்து கடத்திச் சென்று விட்டான்.

இராமன் தன் மனைவி சீதையை மீட்டுவர இராவணனுடன் போர் தொடுக்க முடிவு செய்தான். குரங்குப் படைகளுடன் கிளம்பினான். படைகள் நீண்ட தூரம் பயணம் செய்து கடற்கரையை அடைந்தன. இராவணனின் நாட்டை அடைய அந்தக் கடலைக் கடந்தாக வேண்டும்.

சீறிவரும் கடலைக் கட்டுப்படுத்த இராமன் மாய அம்புகளை எய்தான். உடனே கடலரசன் கடலிலிருந்து தோன்றினான். "கடலில் ஏராளமான உயிரினங்கள் வாழ்கின்றன. எல்லா உயிர்களையும் காப்பாற்றுவதுதான் அரசனின் கடமை. இயற்கையை எதிர்த்து வெற்றி காண முடியாது. உறுதியான பாலம் கட்டிக் கடந்து செல்லுங்கள்," என்றான்.



இராமன் தன் குரங்குப் படைகளிடம் பாறைகளைக் கொண்டுவந்து உடனே பாலம் கட்ட ஆணையிட்டான்.

ஆயிரக்கணக்கான குரங்குகள் வேலையில் இறங்கின. பெரிய பெரிய கற்களையும் பாறைகளையும் சுமந்து கொண்டு வந்தன. அவை ஒரு நிமிடம்கூட ஓய்வு எடுக்காமல் வேலை செய்து கொண்டே இருந்தன.

இதற்கிடையே ஓர் அணில் தன் வாயில் சிறிய கூழாங்கற்களைக் கவ்விக் கொண்டு வந்தது. பாறைகளோடு சேர்த்துப் போட்டுக் கொண்டே இருந்தது. சுறுசுறுப்பாக மலைகளில் மேலும் கீழுமாக ஓடியது. அதைக் கவனித்த இராமன் 'இந்தச் சின்னஞ்சிறு அணில் இங்கே என்ன செய்கிறது?' என்று வியந்தான்.

அணில் குறுக்கும் நெடுக்குமாக ஓடிக்கொண்டு இருப்பதைப் பார்த்த குரங்குகள் கோபமடைந்தன. "நீ ஒரு பொடியன். இந்த வேலைக்கு நீ தேவையில்லை," என்று கத்தின.

அணில் நிமிர்ந்து பார்த்தது. "நான் பாலம் கட்ட உதவி செய்கிறேன்," என்றது.



குரங்குகள் எல்லாம் கைகொட்டிச் சிரித்தன. அணிலை ஏளனம் செய்தன. "இது போன்ற முட்டாள்தனமான பேச்சை நாங்கள் இதுவரை கேட்டதேயில்லை," என்றன.

அணில், "என்னால் பெரிய பெரிய பாறைகளையோ, கற்களையோ தூக்கிவர முடியாது. சின்னஞ்சிறு கற்களை மட்டும்தான் கொண்டுவர முடியும். சீதையைக் காப்பாற்ற நானும் உதவிசெய்ய விரும்புகிறேன்," என்றது.

குரங்குகள் அணிலை ஒதுக்கித் தள்ளின. ஆனாலும் அணில் சிறுசிறு கூழாங்கற்களை ஒரு மூலையில் குவித்துக்கொண்டே இருந்தது. இதைக்கண்ட ஒரு குரங்குக்குப் பொறுக்க முடியவில்லை. எரிச்சலுடன் அணிலைத் தூக்கி வானில் விட்டெறிந்தது.



அணில் "இராமா" என்று அலறியது. கீழே விழ இருந்த அணிலை இராமன் தன் கையில் ஏந்திக் கொண்டான்.

இராமன் குரங்குகளை நோக்கி, "நீங்கள் வலிமை மிகுந்தவர்கள். ஆனால் உங்களைப் போல் பலம் இல்லாதவர்களை ஏளனம் செய்யாதீர்கள். ஒவ்வொருவரும் அவரவர் திறமைக்கேற்றபடி உதவி செய்கிறார்கள். ஒருவரது உடல் வலிமையைவிட அவரது அன்பும் ஈடுபாடும்தான் முக்கியமானவை. நமக்கு எல்லோருடைய உதவியும் தேவை," என்றான்.

பெரிய பாறைகளுக்கு இடையே சிறுசிறு கூழாங்கற்களைப் பதித்தால்தான் பாலம் உறுதியாக நிற்கும். அதைக் குரங்குகள் அப்போதுதான் உணர்ந்தன.

இராமன் தன் விரல்களால் பரிவுடன் அணிலின் முதுகைத் தடவியபோது, அதில் மூன்று கோடுகள் பதிந்தன. அந்தக் கோடுகள்தான் அணில்களின் முதுகில் காணப்படுகின்றன என்று கூறப்படுகிறது.




P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : Uma Krishnaswamy

# டம் டம் டமாரம்

டம் டம், டம டம, டம் டம், டம டம...... திண்ணையில் அமர்ந்திருந்த ராஜு துள்ளி எழுந்தான். சத்தம் வரும் திசையை நோக்கி ஓடினான். அடுத்த தெருவில் ஒரு ஊர்வலம் போய்க் கொண்டிருந்தது.

சிறிது நேரத்தில் குதித்து நடைபோட்ட படி வீடு திரும்பினான். அப்பொழுது அம்மா சந்தைக்கு கிளம்பிக் கொண்டிருந்தாள். ராஜு "அம்மா, அம்மா சந்தையிலிருந்து எனக்கு ஒரு டமாரம் வாங்கி வா," என்று சொல்லி அனுப்பினான் ராஜு.

சந்தையில் அம்மா எப்பொழுதும் போல் தானியத்தை விற்றாள். ரொட்டி செய்ய கொஞ்சம் மாவும் உப்பும் வாங்கினாள். டமாரம் வாங்க அவளிடம் பணமில்லை. வெறுங்கையுடன் வீடு திரும்புவது வேதனையாக இருந்தது. வரும் வழியில் நல்ல மரத்துண்டு ஒன்று அவள் கண்ணில் பட்டது. அதை எடுத்துக் கொண்டாள்.வீடு திரும்பியதும் மகனிடம் கொடுத்தாள்.

ராஜு சிறிது நேரம் கட்டையைச் சுழற்றிச் சுழற்றிப் பார்த்தான். பிறகு அதை எடுத்து கொண்டு வெளியில் விளையாடச் சென்றான். வழியில் ஒரு பாட்டி அடுப்பில் வரட்டியை வைத்துத் தீ மூட்டிக் கொண்டிருந்தாள். தீ பற்றவில்லை.



ஒரே புகை. பாட்டியின் கண்ணில் தண்ணீராய் வந்தது. ராஜு "பாட்டி! ஏன் அழுகிறீர்கள்?" என்று கேட்டான்.

"அழவில்லையப்பா! இந்த வரட்டி ஈரமாக இருக்கிறது. சமைக்க முடியவில்லையே!" என்றாள். "அப்படியா என்னிடம் ஒரு நல்ல மரக்கட்டை உள்ளது. இதைக் கொண்டு அடுப்பைப் பற்ற வையுங்கள்," என்றான் ராஜு. பாட்டி மிகவும் மகிழ்ந்து ஒரு ரொட்டி கொடுத்தாள்.

ரொட்டியைப் பெற்ற ராஜு மகிழ்ச்சியோடு நடக்க ஆரம்பித்தான். அப்பொழுது பானை செய்பவரின் குழந்தை அழுவதைக் கண்டான்.



"குழந்தை ஏன் அழுகிறது?" என்று அதன் அம்மாவிடம் விசாரித்தான். அம்மா, "குழந்தை பசியில் அழுகிறது," என்றாள். உடனே ராஜு, "என்னிடம் ரொட்டி இருக்கிறதே! இதைச் சாப்பிடு," என்று குழந்தையிடம் ரொட்டியைக் கொடுத்தான். குழந்தையின் அழுகை நின்றது. குழந்தையின் அம்மா "நீ நன்றாக இரு! இந்தப் பானையை வைத்துக் கொள்," என்று ராஜுவை வாழ்த்தினாள்.

பானையை எடுத்துக் கொண்டு நடந்த ராஜு ஆற்றங்கரைக்கு வந்தான். அங்கே ஒரு சலவைத் தொழிலாளி மனைவியிடம்,

"இருந்த ஒரு பானையும் உடைந்துவிட்டதே! வெள்ளாவி வைக்கப் பானை இல்லையே? துணிகளை எப்படித் துவைப்பது?" என்று சலிப்புடன் சொல்லிக் கொண்டிருந்தார்.

உடனே ராஜு "இந்தாருங்கள்! இந்தப் பானையை வைத்துக் கொள்ளுங்கள்," என்று சொல்லிப் பானையைக் கொடுத்தான். சலவைத் தொழிலாளர் நன்றியுடன் கம்பளிச் சட்டை ஒன்றை ராஜுவிடம் கொடுத்தார். சட்டை போட்டு அழகு பார்த்துக்



கொண்டே நடந்த ராஜு ஒரு பாலத்தைக் கடந்தான். பாலத்தின் ஓரத்தில் நடுங்கும் குளிரில் சட்டையே இல்லாமல் ஒருவர் உட்கார்ந்து இருந்தார். ராஜு சில நொடிகள் தயங்கி நின்றான். பிறகு தன்னிடமிருந்த கம்பளிச் சட்டையை அவரிடம் கொடுத்தான்.

"நீ மிகவும் இரக்கமுள்ளவனாய் இருக்கிறாய்! தம்பி! உனக்கு ஏதாவது கொடுக்க வேண்டுமே! இதோ என் குதிரையை

எடுத்துக்கொள்," என்று கூறித் தன் குதிரையை ராஜூவுக்குக் கொடுத்தார்.

குதிரையுடன் விரைந்த ராஜூ மரத்தடியில் ஒரு திருமணக் கூட்டத்தினரைச் சந்தித்தான். மிகவும் கவலையோடு அவர்கள், "முகூர்த்த நேரம் முடிந்துவிடும் போலிருக்கிறது. மாப்பிள்ளை ஊர்வலத்துகககு இன்னும் குதிரை வரவில்லையே" என்று பேசிக் கொண்டிருந்தனர். அதைக் கேட்ட ராஜூ "இதோ இந்தக் குதிரையை எடுத்துக் கொள்ளுங்கள்," என்று குதிரையைக் காட்டினான்.

அப்பப்பா! அவர்கள் முகங்களில் தான் எத்தனை மகிழ்ச்சி! ராஜூவைப் பார்த்த மாப்பிள்ளை, "நீ எது வேண்டுமானாலும் கேள். உடனே தருகிறேன்," என்றார்.

"உங்கள் பாடகர் குழுவிடமிருந்து எனக்கு ஒரு டமாரம் வாங்கித் தர முடியுமா?" என்று கேட்டான் ராஜூ.

"ஓ தாராளமாக!" மாப்பிள்ளை பாட்டுக் குழுவினரைப் பார்த்தார். உடனே டமாரம் ராஜூ கைக்கு மாறியது. அப்புறமென்ன! வீடு திரும்பும் வழி நெடுகிலும் ஒரே டம் டம், டம டம தான்!

இந்திய நாட்டுப்புறக்கதை (இந்தி)




P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi
Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai
Artist : Uma Krishnaswamy

# பாட்டுக்கு ஒரு புலவன்



பாரதி என்றதும் நம் நினைவுக்கு வருவது ஒளி மிகுந்த கண்கள்; பெரிய குங்குமப் பொட்டு; மிடுக்கான மீசை; தலைப்பாகை; கறுப்புக்கோட்டு; கம்பீரமான தோற்றம் இவைதான்! பாரதி போல் வேஷமிட்டு அவரது பாடல்களை ரசித்துப் பாடும் குழந்தைகள் ஏராளம்.

பாரதியார் வாழ்ந்தது முப்பது வருடங்கள்தான் (1882-1921). ஆனால் அவரது பாடல்கள் இன்றும் வாழ்ந்து கொண்டிருக்கின்றன.

அவரது சிறுவயதுப் பெயர்கள் 'சுப்பிரமணியன்' மற்றும் 'சுப்பையா'. அவர் பிறந்தது திருநெல்வேலி மாவட்டம் எட்டையபுரம் என்ற கிராமம். பதினோரு வயதிலேயே இவரது கவிதைத் திறனைப் புலவர்கள் அடையாளம் கண்டு கொண்டனர். அவருக்குப் "பாரதி" என்ற பட்டம் அளித்தனர்.

பாரதியார் குழந்தைகளிடம் அன்பும் பாசமும் வைத்திருந்தார். மிகுந்த நம்பிக்கையும் கொண்டிருந்தார். அவரது மகள் சகுந்தலா அவரிடம் அளவற்ற அன்பும், மதிப்பும் வைத்திருந்தாள்.



ஒரு சமயம் அவள் தன் தாய் சொல்லியதைக் கேட்காமல் அடம் பிடித்தாள். அப்போது பாரதி, "தாய் சொல்லைத் தட்டாதே பாப்பா," என்று பாடினார். அதற்கு சகுந்தலா, "அப்பா நான் என்னென்ன செய்ய வேண்டும் என்பதை ஒரு பாட்டாக எழுதிக் கொடுங்கள்," என்றாள்.

உடனே பாரதி,

*ஓடி விளையாடு பாப்பா! - நீ*
*ஓய்ந்திருக்கலாகாது பாப்பா!*
*கூடி விளையாடு பாப்பா! - ஒரு*
*குழந்தையை வையாதே பாப்பா*
*சின்னஞ்சிறு குருவி போலே - நீ!*
*திரிந்து பறந்து வா பாப்பா!*
*வண்ணப் பறவைகளைக் கண்டு - நீ*
*மனதில் மகிழ்ச்சி கொள்ளு பாப்பா!*

என்று எழுத ஆரம்பித்தார்.

இந்தப் பாட்டு உலகில் எல்லாக் குழந்தைகளுக்கும் சொந்தம்தானே! இந்தப் பாட்டிலே அவர் பறவைகள், விலங்குகளிடம் குழந்தைகள் அன்பு காட்ட வேண்டும் என்றும் பாடியுள்ளார். நாட்டுப்பற்றை ஊட்டும் வரிகளும் இந்தப் பாடலில் உள்ளன.



ஒரு நாள் காலை. பாரதி தன் மகள் சகுந்தலாவிடம், "நீயும் நானும் சேர்ந்து பாட்டு எழுதுவோமா?" என்றார். இருவரும் மொட்டை மாடிக்குச் சென்று அமர்ந்தனர். பாட்டுக்குரிய கருத்தை மகள் சொல்ல, பாரதியார் சொற்களை அடுக்கிக் கவிதை எழுதினார்.

அந்தக் காலைப்பொழுது, சூரிய ஒளி, காகம், குருவி, கிளி என்று பறவைகளிடையே நடந்த பேச்சுகள் எல்லாவற்றையும் இந்தப் பாடலில் பார்க்கலாம்.

*"காலைப் பொழுதினிலே கண்விழித்து மேனிலைமேல்*

*மேலைச் சுடர்வானை நோக்கி நின்றோம் விண்ணகத்தே*

*கீழ்த்திசையில் ஞாயிறுதான் கேடில் சுடர்விடுத்தான்*

*பார்த்த வெளியெல்லாம் பகலொளியாய் மின்னிற்றே". . .*



நாம் எழுத்துக்களைக் கூட்டிச் சொற்களை உருவாக்குகிறோம் அல்லவா! அதே போலச் சொற்களைக் கோர்த்துப் பாட்டுகளை உருவாக்கும் விளையாட்டைக் குழந்தைகளுக்குச் சொல்லிக் கொடுத்தார் பாரதி. குழந்தைகள் ஒவ்வொருவரும் ஒரு சொல் கூறுவர். பாரதி பொருள் தருமாறு அவற்றை வரிசைப்படுத்திப் பாட்டு எழுதித் தருவார். அவ்வாறு உருவான ஒரு பாட்டு இதோ:

*முதல் குழந்தை : சக்தியை*

*இரண்டாம் குழந்தை : கொண்டாடு*

*மூன்றாம் குழந்தை : தினந்தோறும்*

*பாரதி : சக்தியை நித்தமும் கொண்டாடு*

*முதல் குழந்தை : கவலையில்லாமல்*

*இரண்டாம் குழந்தை : சக்தியின் பாதங்களில்*

*மூன்றாம் குழந்தை : முத்து மாலைகள்*

*நான்காம் குழந்தை : ரத்தின ஹாரங்கள்*

*ஐந்தாம் குழந்தை : வைத்துப் பணிந்திடு*

இந்தச் சொற்களை வைத்துப் பாரதி எழுதிய பாட்டு -



*சக்தியை நித்தமும் கொண்டாடு*
*சஞ்சலம் நீக்கி - சக்தியை*
*முத்து மாலைகள் ரத்னஹாரங்கள்*
*சக்தி பாதத்தில் அணிந்து பணிந்திடு - சக்தியை. . .*

பாட்டைக் கேட்ட குழந்தைகளுக்கு ஒரே உற்சாகம். பாரதி குழந்தைகளுடன் சேர்ந்து தானும் ஒரு குழந்தை ஆனார். அவர் எல்லாக் குழந்தைகளின் உள்ளத்திலும் கவிதையைக் கண்டார். அவர்களையும் காணச் செய்தார்.




P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : S. P. Raju

# தங்கக் கீரி

போர் முடிந்ததும் நாட்டைத் திரும்பப் பெற்ற பாண்டவர்கள் வெற்றிவிழா நடத்தினர். தருமர் எல்லா நாட்டு அரசர்களையும் அழைத்திருந்தார். குடி மக்களுக்கு அன்னதானம் செய்தார்.

திடீரென அங்கே ஒரு கீரி வந்தது. அது தரையில் உருண்டு புரண்டது. மனிதக் குரலில் உரக்கச் சிரித்தது. எல்லோரும் அதை வியப்புடன் பார்த்தனர். அதன் உடலின் ஒரு பாதி மட்டும் தங்க நிறத்தில் ஜொலித்தது.





கீரி, "அரசே! இந்த விழா மிக அற்புதமாக இருக்கிறது. எல்லோருக்கும் உன் செல்வத்தை வாரி வழங்குகிறாய்! ஆனாலும் நான் பார்த்த ஏழை ஒருவன் செய்த தானத்துக்கு இது ஈடாகாது," என்றது.

"ஏன்? இங்கு என்ன குறை கண்டாய்?" என்றார் தருமர்.

"முதலில் என் பாதி உடல் தங்க நிறமான கதையைக் கேளுங்கள்," என்று கீரி கதையை ஆரம்பித்தது.

"ஒரு கிராமத்தில் ஏழை ஒருவன் இருந்தான். அவன் தினமும் வயலில் வேலை செய்து சிறிதளவு தானியத்தைக் கொண்டு வருவான். அதைத் தன் குடும்பத்தினருடன் பகிர்ந்து சாப்பிடுவான்.

ஒரு சமயம் கடும் பஞ்சம் ஏற்பட்டது. சாப்பிட ஒன்றுமே கிடைக்கவில்லை. மூன்று நாள் பட்டினி கிடந்த பிறகு ஏழைக்குச் சிறிது தானியம் கிடைத்தது. அதை மாவாக்கி அவன், அவன் மனைவி, மகன், மருமகள் நால்வரும் பங்கிட்டுக் கொண்டனர்.

அப்போது எதிர்பாராமல் ஒரு முதியவர் அங்கு வந்து, "பசியாக இருக்கிறது. சாப்பிட ஏதாவது கொடுங்களேன்," என்று கேட்டார். உடனே அந்த ஏழை தன் பங்கைக் கொடுத்தான்.

பசி தீராத முதியவர் மேலும் உணவு கேட்டார். உடனே ஏழையின் மனைவி தன் பங்கைக் கொடுத்துவிட்டாள். ஆனாலும் முதியவரின் பசி தீரவில்லை. அதைப் பார்த்த மகன் தன் பங்கை மகிழ்ச்சியுடன் கொடுத்துவிட்டான். முதியவர் அதையும்

சாப்பிட்டுவிட்டு மேலும் உணவு கேட்டார். மருமகளும் தன் பங்கைக் கொடுத்துவிட்டாள்.

முதியவரின் பசி தீர்ந்தது. "நீங்கள் எல்லோரும் பசியோடு இருந்தபோதும் உங்கள் உணவை மகிழ்ச்சியுடன் எனக்குக் கொடுத்தீர்கள். அரசர்கள் செய்யும் யாகங்களும், தானங்களும் இந்த தானத்திற்கு ஈடாகாது," என்று அவர்களை வாழ்த்தி மறைந்து விட்டார்.

இதையெல்லாம் நான் ஒளிந்து பார்த்துக் கொண்டு இருந்தேன். மெல்ல வெளியே வந்தேன். கீழே சிந்தியிருந்த மாவு என் உடலின் ஒரு பாதியில் ஒட்டிக் கொண்டது. மாவு ஒட்டிய அந்தப் பாதி மட்டும் தங்க நிறமாக மாறிவிட்டது. மறு பாதி தங்கமாக மாறவில்லை.



அன்றிலிருந்து நான் பல இடங்களுக்குச் செல்கிறேன். என் உடலின் இன்னொரு பாதி தங்கமாக மாறுமா என்று உருண்டு புரண்டு பார்க்கிறேன். இதுவரையில் மாறவில்லை!

இன்று நீங்கள் நடத்தும் விழாவுக்கும் வந்திருக்கிறேன். இங்கும் புரண்டு பார்த்தேன். என் மறுபாதி தங்கமாக மாறவில்லை. அதனால்தான் சொன்னேன்-இது ஒரு சிறந்த விழாவாக இருக்கலாம்! ஆனால் அந்த ஏழை செய்த தானத்துக்கு ஈடாகாது என்று."

இப்படிக் கூறிக் கீரி மறைந்துவிட்டது.

எல்லோரும் விக்கித்து நின்றனர்.




P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : Uma Krishnaswamy

# கண்டுபிடிப்போம் வா!





பறக்காத பூப்பந்து
பகட்டான சிறு பந்து
எடுத்து வாயில் போட்டால்
இனித்திடும் தேன் பந்து - *அது என்ன?*

பச்சரிசி, ஏலம், வெல்லம்
பக்குவமாய் கலந்து பொங்கும்
உச்ச ருசி நெய் மணக்கும்
உள்ளம் மகிழும் இதை உண்ண! - *அது என்ன?*

அனல் மேல் கருப்பு குதிரை
அதன் மேல் வெள்ளையன் காய்கிறான் - *அது என்ன?*



வட்ட வட்டப் பணியாரம்
தும்பை வெள்ளைப் பணியாரம்
இனிப்பு இல்லாப் பணியாரம் - *அது என்ன?*

தாத்தா பாட்டி சாப்பிட முடியாத பலகாரம்
பார்வைக்கு அலங்காரம்
பல்லுக்குச் சவால் - *அது என்ன?*

தவிட்டு நிறம் கலந்த மஞ்சள் நிறம்
வட்ட வடிவம். நடுவில் துவாரம்
உளுந்தினால் செய்தது - *அது என்ன?*



கோதுமை மாவால் ஆனவன்
கொதிக்கும் எண்ணெயில்
குதித்தால் குண்டனாகிப் போவான் - *அவன் யார்?*

குழியிலே மலரும்
குச்சியிலே தொடுக்கும் - *அது என்ன?*

வட்ட வட்டத் தட்டுக்குள்ளே
இட்டதெல்லாம் பாம்பு - *அது என்ன?*

குழாயில் மாவைப் போட்டு
கூடவே தேங்காய் பூவும்
மழலையர் விரும்பும் சீனியுடன்
ஆவியில் வேக வைப்பார் - *அது என்ன?*



கடுகு, மிளகு கலக்காத ரசம்
கடித்தால் உரைக்காத ரசம் - *அது என்ன?*

தேங்காய், வெல்லம், ஏலம் கலந்து
வெள்ளை மாவு சொப்பில் அடைத்து
ஆவியில் வேகவைத்து
ஆண்டவனுக்குப் படைப்பது - *அது என்ன?*

*இட்லி, தோசை, சர்க்கரைப் பொங்கல், லட்டு, குழாய்ப் புட்டு, இடியாப்பம், முறுக்கு, வடை, பூரி- குழிப்பணியாரம், கொழுக்கட்டை, அதிரசம்*

ஒற்றைக் காலில் ஆடுவான்
ஓய்ந்து போனால் படுப்பான் - *அவன் யார்?*

வண்ண வண்ணக் காகிதத்தில் செய்தது
வானத்தில் பறப்பது - *அது என்ன?*

உயரே எறிந்தால் தரையில் விழுவான்
தரையில் எறிந்தால் உயரே எழுவான் - *அவன் யார்?*

வெறும் காற்றில் பருத்தவன்
வரும் காற்றில் பறந்திடுவான் - *அவன் யார்?*



விழுந்தால் படுக்காது
எழுந்தால் நிற்காது - *அது என்ன?*

காலிருக்குது நடக்க முடியலே
கையிருக்குது சாப்பிட முடியலே
வாயிருக்குது பேச முடியலே
உடம்பிருக்குது மூச்சுவிட முடியலே - *அது என்ன?*







முன்னும் பின்னும் ஓடியாடி வருவான்
உட்காருவோருக்கு உற்சாகம் தருவான்

*- அது என்ன?*

சுழன்று சுழன்று ஓடுமாம்
பழகிப் போன யானை குதிரை
எத்தனைதான் ஓடினாலும்
நின்ற இடத்திலேயே நிற்குமாம்

*- அது என்ன?*



வீடு இரண்டு, விடுதி பதினாலு
ஆடும் பெண்கள் எழுபது பேர்
ஆட்டி வைப்பார் இரண்டு பேர்

*- அது என்ன?*

சின்னதையும் பெரிதாக்கி விடும்

*- அது என்ன?*



*பந்து, பட்டம், பம்பரம், பலூன், மரப்பாச்சி பொம்மை, குடைராட்டினம், தஞ்சாவூர் பொம்மை, பல்லாங்குழி, பூதக் கண்ணாடி, ஊஞ்சல்*


கதை அருவிக் குழு 2003
P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : Uma Krishnaswamy

# தக்காளி எங்கே?





கந்தன் தன் தோட்டத்தில் தக்காளி பயிரிட்டிருந்தான். தக்காளிகள் செக்கச் செவேலென்று பழுத்திருந்தன. அவற்றை அவன் மிகவும் பெருமையுடன் பார்த்துக் கொண்டிருந்தான்.

அப்போது மான் ஒன்று தோட்டத்தில் புகுந்தது. கந்தன் அதை விரட்ட நினைத்தான். ஒரு கல்லை எடுத்தான். அவன் மனைவி, "மானை அடிக்காதீர்கள். அதுவும் சில தக்காளிகளைச் சாப்பிட்டுப் போகட்டுமே!" என்றாள்.



கந்தன் கேட்கவில்லை. மறுநாளே தன் தோட்டத்தைச் சுற்றி வேலி போட்டான். நிம்மதியுடன் வீடு திரும்பினான். ஆனால் அந்த நிம்மதி வெகுநாள் நீடிக்கவில்லை. பறவைகள் பறந்து வந்து தக்காளிகளைத் தின்னத் தொடங்கின. கந்தன் நொந்து போனான். 'இனியும் தக்காளிகளை விட்டு வைக்கக் கூடாது,' என்று நினைத்தான்.

மறுநாள் விடிந்ததும் முதல் வேலையாகத் தக்காளிகளைப் பறித்தான். வண்டியில் ஏற்றினான். மாட்டை வெகு வேகமாக ஓட்டினான். சந்தையில் வண்டியை நிறுத்தினான். திரும்பிப் பார்த்த கந்தன் திடுக்கிட்டான். "ஐயோ! இதென்ன! வண்டி காலியாக இருக்கிறதே! எங்கே என் தக்காளிகள்?" என்று அலறினான்.

அப்போது வண்டியின் பின் பகுதியில் ஒரு ஓட்டை இருப்பதைப் பார்த்தான். அதன் வழியாகத்தான் தக்காளிகள் வழிநெடுக விழுந்திருக்க வேண்டும்!

'விழுந்த தக்காளிகளைச் சேகரித்து விடலாம்,' என்று கந்தன் வந்த வழியே நடந்து சென்றான். ஆனால் என்ன ஆச்சரியம்! வழியில் ஒரு தக்காளி கூடக் கிடைக்கவில்லை.

தூரத்தில் இரண்டு குட்டி மான்கள். அவை தக்காளிகளைச் சுவைத்துச் சாப்பிட்டுக் கொண்டிருந்தன. மேலும் சற்று தூரம் நடந்தான். சில அணில்கள் தக்காளிப் பழங்களைக் கொறித்துக் கொண்டிருந்தன.



கந்தன் சோர்வுடன் ஒரு மரத்தடியில் அமர்ந்தான். பறவைக் குஞ்சுகளின் கீச்... கீச்... ஒலி. தாய்ப்பறவை தன் குஞ்சுகளுக்குத் தக்காளிகளை ஊட்டிக் கொண்டிருந்தது. கந்தன் அந்தக் காட்சியை ரசித்துப் பார்த்தான். 'ஆ! என்ன அழகு!' என்றபடி மேலும் நடந்தான்.

வழியில் ஒரு வீடு. வீட்டில் குழந்தைகளின் ஆரவாரம். அருகே சென்று சன்னல் வழியாகப் பார்த்தான். அங்கே குழந்தைகளின் கையில் தக்காளிப் பழங்கள்! அவர்கள் முகத்தில் சிரிப்பு. 'அட! என் தக்காளிகளால் இத்தனை பேருக்கு மகிழ்ச்சியா!'

கந்தனின் மனம் லேசாகியது. தக்காளிகளை இழந்து விட்டோமே என்ற ஏமாற்றம் இப்போது அவனுக்கு இல்லை. 'தக்காளிகளை முன்பே எல்லோருடனும் பகிர்ந்து கொண்டிருக்கலாமே!' யோசித்தபடி வீட்டை அடைந்தான்.








P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : S. P. Raju

# மூன்று பொம்மைகள்



ஒரு சமயம் விஜயநகரத்தில் எங்குப் பார்த்தாலும் ஒரே பரபரப்பு. வெளிநாட்டிலிருந்து ஒரு பண்டிதன் மூன்று தங்க பொம்மைகளைக் கொண்டு வந்திருந்தான். பார்க்க எல்லாப் பொம்மைகளும் ஒரே மாதிரியாக இருந்தன. சிறு வித்தியாசம் கூட இல்லை.

ஆனால் பண்டிதனோ, "இந்த மூன்று பொம்மைகளுக்கும் வித்தியாசம் இருக்கிறது. கண்டுபிடித்துச் சொல்பவருக்குப் பத்தாயிரம் பொற்காசுகளுடன், இந்த பொம்மைகளையும் பரிசாகத் தருவேன். அப்படி யாரும் பத்து நாட்களுக்குள் கண்டுபிடிக்காவிட்டால் எனக்குப் பத்தாயிரம் பொற்காசுகள் தரவேண்டும்," என்று அரண்மனையில் சவால் விட்டான்.

பொம்மைகள் காட்சிக்கு வைக்கப்பட்டன. ஒன்பது நாள்கள் கழிந்தன. பொம்மைகளுக்கு இடையே உள்ள வித்தியாசத்தை யாரும் கண்டுபிடிக்கவே இல்லை. 'பண்டிதனுக்குப் பத்தாயிரம் பொற்காசுகள் கொடுப்பது மட்டுமல்ல. தோல்வியையும் ஒப்புக் கொள்ள வேண்டுமே!' அரசன் மிகவும் கவலைப்பட்டான்.

தெனாலிராமன், "கவலைப்படாதீர்கள் அரசே! இன்னும் முழுதாக ஒருநாள் இருக்கிறது. எப்படியும் வித்தியாசத்தைக் கண்டுபிடித்து விடலாம்," என்றான்.

பத்தாவது நாளும் வந்தது. அரண்மனையில் எல்லோரும் கவலையுடன் இருந்தனர். தெனாலிராமன் பொம்மைகளை மீண்டும் மீண்டும் உற்றுப்பார்த்தான். ஒரு மெல்லிய குச்சியை எடுத்தான்.



முதல் பொம்மையின் காதில் விட்டான். குச்சி இன்னொரு காது வழியாக வெளியே வந்தது.

குச்சியை இரண்டாவது பொம்மையின் காதில் விட்டான். இப்போது குச்சி பொம்மையின் வாய் வழியாக வெளியே வந்தது. மூன்றாவது பொம்மையின் காதில் குச்சியை நுழைத்தபோது அது உள்ளேயே நின்றுவிட்டது. அனைவருக்கும் ஆச்சரியம்.

தெனாலிராமன் பேச ஆரம்பித்தான். "மூன்று பொம்மைகளுக்கும் இடையே உள்ள வித்தியாசம் இதுதான். முதல் பொம்மை மூடர்களைப் போன்றது. தாம் கேட்கும் விஷயங்களை உள்வாங்காமல் அடுத்த காது வழியாக வெளியே விட்டுவிடுவர்.



இரண்டாவது பொம்மை சாதாரண மனிதர்களைப் போன்றது. தாம் காதில் கேட்டவற்றை எல்லாம் வாய் வழியாகப் பிறரிடம் சொல்லி விடுவர்.

மூன்றாவது பொம்மை உத்தமர்கள் போன்றது. காதால் கேட்பது எதையும் உடனே வெளியே விட்டுவிடாமல் உள்வாங்கி நன்றாகச் சிந்திப்பார்கள்," என்றான்.

இதைக்கேட்ட அனைவரும் தெனாலிராமனைப் பாராட்டினர். பண்டிதன் பொம்மைகளையும், பத்தாயிரம் பொற்காசுகளையும் கொடுத்தான். பொம்மைகளை அரசனிடம் கொடுத்து விட்டு பொற்காசுகளை மட்டும் தெனாலிராமன் எடுத்துக் கொண்டான்.





Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : S. P. Raju

# எங்கள் தோட்டம்



நீல வானம்! மென்மையான காற்று! மிதமான சூரிய வெப்பம்! இவற்றில் திளைத்து, மகிழ்ந்து அசைந்தாடின வண்ண வண்ணப் பூக்கள்! ரோஜா, மல்லிகை, அல்லி, தாமரை, செவந்தி, லில்லி, செம்பருத்தி என்று எல்லாவிதமான பூக்களும் தோட்டத்தில் இருந்தன.

நடு நடுவே பச்சைப் பசேலென்ற புற்கள், செடிகள், படரும் கொடிகள்! இவை பூக்களின் அழகை மேலும் அதிகரித்தன. தங்கள் தோட்டத்தைப் பற்றிப் பூக்களுக்குப் பெருமையோ பெருமை!

ஒரு நாள் தோட்டக்காரன் ஒரு புதிய செடியைத் தோட்டத்தின் நடுவில் வைத்தான். அதில் ஒரு விநோதமான சிவப்புப் பூ இருந்தது. அதைக் கண்டு மற்ற பூக்கள் அதிர்ச்சி அடைந்தன. அவற்றுக்குச் சிவப்புப் பூவைப் பிடிக்கவில்லை. ஒதுங்கியே இருந்தன. சிவப்புப் பூ தனிமையில் வருந்தியது.



ஒரு நாள் சிறிய வெள்ளை ரோஜா ஒன்று சிவப்புப் பூவைப் பார்த்து மெல்லச் சிரித்தது. "நண்பா! நீ எங்கிருந்து வந்திருக்கிறாய்?" என்று விசாரித்தது.

சிவப்புப் பூவிற்கு ஒரே மகிழ்ச்சி. "நான் வெகு தூரத்தில் இருந்து வந்திருக்கிறேன்," என்று தான் இருந்த இடத்தைப் பற்றி விவரித்துக் கூறியது. வெள்ளை ரோஜா ஆர்வத்துடன் கேட்டுக் கொண்டு இருந்தது.

விரைவிலேயே இரண்டும் நெருங்கிய நண்பர்கள் ஆயின. நாள் முழுவதும் தங்களுக்குள் பேசிக் கொண்டே இருந்தன. வெள்ளை ரோஜா சிவப்புப் பூவிற்கு அந்தப் பகுதியின் பருவ நிலை மாற்றங்கள், தாவரங்கள் பற்றி விவரிக்கும். இப்படியே இவற்றின் நட்பும் வளர்ந்தது.

சிறிது நாட்களில் தோட்டக்காரன் மேலும் பல புதிய செடிகளைக் கொண்டு வந்தான். மற்ற பூக்கள் கவலை கொண்டன. இந்தத் தோட்டம் முழுவதும் புதுப் பூக்களாய் நிறைந்து விடுமோ என்று பயந்தன. வெள்ளை ரோஜா, "வீணாக ஏன் கவலைப்படுகிறீர்கள்? இந்தப் புதிய பூக்களும் நம் நண்பர்கள் தான்," என்றது. இதைக் கேட்டுச் சில பூக்கள் அமைதி அடைந்தன.

தேனீக்களும், வண்ணத்துப் பூச்சிகளும் தங்களை நாடி வந்த போது, "நீங்கள் புதுப் பூக்களிடம் போகாதீர்கள்! அவர்கள் வித்தியாசமானவர்கள். நம்முடைய நண்பர்கள் இல்லை," என்றன மற்ற சில பூக்கள்.

தேனீக்களோ, "இங்கு எல்லோருக்கும் வேண்டிய அளவு வளமான மண் இருக்கிறது. காற்று, தண்ணீர், சூரிய ஒளி எல்லாமே இருக்கின்றன. பூச்சிகளும் ஏராளமாக இருக்கின்றன. ஏன் வீணாகக் கவலைப்படுகிறீர்கள்?" என்றன.

விரைவிலேயே தோட்டம் மிகச் செழிப்பாக வளர்ந்தது. அதைப் பார்க்க மக்கள் திரண்டு வந்தனர். சூரியனின் கதிர்கள் ஒவ்வொரு பூவின் மேலும் பட்டன. மழைத் துளிகளும் ஒவ்வொரு பூவின் மேலும் விழுந்தன. மென்மையான காற்று ஒவ்வொரு பூவையும் வருடிச் சென்றது.

'வெள்ளை ரோஜாவும், தேனீக்களும் சொன்னது உண்மைதான்! புதிதாக வந்த பூக்கள் நமக்கு எந்தத் தீங்கும் செய்யவில்லை. நம் இடத்தையும் பிடுங்கிக் கொள்ளவில்லை!' எல்லாப் பூக்களும் நிம்மதி அடைந்தன. தோட்டம் முழுவதும் மகிழ்ச்சியும், நட்பும் நிலவின.

"எத்தனை விதமான பூக்கள்! வண்ணங்களும் ஏராளம்! இந்த மாதிரித் தோட்டத்தை நாங்கள் எங்குமே பார்த்ததே இல்லை!" என்று மக்கள் வியந்தனர்.

அத்தனை வகைப் பூக்கள் இருந்ததால்தானே அந்தத் தோட்டம் சிறப்பாகத் திகழ்ந்தது! எல்லோரையும் கவர்ந்தது!




P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi
Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai
Artist : S. P. Raju

# முட்டாள்களைத் தேடி. . . 

அக்பருக்கும் பீர்பாலுக்கும் ஒருநாள் சர்ச்சை. ''அறிவாளிகளை எளிதில் அடையாளம் கண்டு கொள்ளலாம். ஆனால் முட்டாள்களைக் கண்டுபிடிப்பதுதான் கடினம்." இது அக்பரின் வாதம். ஆனால் பீர்பாலோ "முட்டாள்களைக் கண்டுபிடிப்பது வெகு சுலபம்," என்றார்.

"அப்படியா! நாளை மதியத்துக்குள் உங்களால் எட்டு முட்டாள்களை அழைத்து வரமுடியுமா? அப்படி அழைத்து வந்தால் அவர்கள் அனைவருக்கும் பரிசு அளிப்பேன். உங்களுக்கும் பரிசு உண்டு," என்றார் அக்பர்.



மறுநாள் காலை. பீர்பால் முட்டாள்களைத் தேடிப் புறப்பட்டார். வழியில் கழுதை மேல் ஒருவன் சவாரி செய்து கொண்டிருந்தான். அவன் தலையில் பெரிய துணி மூட்டை. பீர்பால், "ஏன் நீ மூட்டையைச் சுமக்கிறாய்? கழுதைமேல் வைத்து விடலாமே!" என்றார்.

அதற்கு அவன், "என் கழுதைக்கு வயதாகிவிட்டது. அதற்குப் பலமும் இல்லை. அதன் பாரத்தைக் குறைக்கத்தான் நான் மூட்டையைச் சுமக்கிறேன்," என்றான்.

பீர்பால் சிரித்துக்கொண்டே, "மதியம் அரண்மனைக்கு வா! அரசர் உனக்குப் பரிசு அளிப்பார்!" என்றார். பயணத்தைத் தொடர்ந்தார். சற்றுத் தொலைவில் ஓர் உழவனும் அவன் மகனும் வயலில் எதையோ தேடிக் கொண்டிருந்தனர். பீர்பால், "என்ன தேடுகிறீர்கள்?" என்று அவர்களை விசாரித்தார்.

"எங்கள் சேமிப்பை இந்த வயலில்தான் எங்கோ புதைத்து வைத்தோம். அதைத்தான் தேடுகிறோம்," என்றான் உழவன். ''புதைத்த இடத்தில் அடையாளம் ஏதும் வைக்கவில்லையா?'' என்றார் பீர்பால்.

"ஓ! வைத்தோமே! அன்று ஒரு மயில் நடனமாடிக் கொண்டிருந்தது. அதன் அருகில் தான் புதைத்தோம்," என்றான் மகன். பீர்பால் சிரித்துக் கொண்டே அவர்களை மதியம் அரசவைக்கு வரச் சொன்னார். மேலும் சற்று தூரம் சென்றார்.

வழியில் இருவர் சண்டை போட்டுக் கொண்டிருந்தனர். பீர்பால் அவர்களிடம் சென்று, "என்ன பிரச்சினை?" என்று கேட்டார். அவர்களில் ஒருவன், "பால் சாப்பிட ஓர் எருது இருந்தால் நன்றாக இருக்குமே என்றேன் நான். இவன் ஒரு புலி இருந்தால் நன்றாக

இருக்கும் என்கிறான். புலி வந்து எருதைக் கொல்ல வேண்டும் என்று ஏன் நினைக்கிறான்?" என்று கோபத்தோடு கூறினான்.

"எருது எங்கேயாவது பால் தருமா?" என்று பீர்பால் சிரித்தார். அதைக் காதில் வாங்கிக் கொள்ளாமலேயே இன்னொருவன், "எருது இருந்தால் அதை நிறுத்திப் பால் கறந்து குடிக்க நேரம் வீணாகும். அதனால் தான் புலியை விரும்பினேன்," என்றான். பீர்பால் இருவரையும் அரசவைக்கு வரச் சொன்னார்.
பயணத்தைத் தொடர்ந்தார்.

வழியில் ஒருவன் சேற்றில் விழுந்திருந்ததைப் பார்த்தார். அவன் கைகளைத் தூக்கி விரித்தபடி வைத்திருந்தான். அப்படியே எழுந்திருக்க முயற்சி செய்து கொண்டிருந்தான். பீர்பால் அவனைத் தூக்கத் தன் கையை நீட்டினார்.

"என் கையைத் தொடாதீர்கள்! இது நான் செய்ய வேண்டிய அலமாரியின் அளவு. நீங்கள் என் கையைப் பிடித்தால் சரியான அளவை நான் மறந்துவிடுவேன்!" என்றான்.



பீர்பால் அவனையும் அரசவைக்கு வரச் சொன்னார். பீர்பால் சந்தித்த ஆறு பேரும் மதியம் அரசவையில் கூடினர். நடந்ததை எல்லாம் விவரித்தனர். அரசவையில் இருந்த அனைவரும் சிரித்து மகிழ்ந்தனர். வந்த ஆறு பேருக்கும் ஒன்றுமே புரியவில்லை. அக்பர் அளித்த பரிசை மகிழ்ச்சியுடன் பெற்றுக் கொண்டனர். வெளியேறினர்.

அக்பர் பீர்பாலைப் பார்த்து, "உங்களுக்குப் பரிசு கிடையாது! நீங்கள் எட்டு முட்டாள்களை அழைத்து வரவில்லை. ஆறு முட்டாள்களைத்தான் அழைத்து வந்தீர்கள்," என்றார் அக்பர். உடனே பீர்பால், "நாள் முழுதும் முட்டாள்களைத் தேடி அலைந்த நான்தான் ஏழாவது முட்டாள். எட்டாவது முட்டாள்...." என்று ஆரம்பித்துப் பாதியில் நிறுத்தினார்.

அக்பருக்குப் புரிந்துவிட்டது. "உங்களை அனுப்பிய நான்தான் அந்த எட்டாவது முட்டாள்! இல்லையா!" என்று கூறிச் சிரித்தார். அரசவை முழுதும் சிரிப்பால் அதிர்ந்தது.






P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi
Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : S. P. Raju

# ஆட்டுக்குட்டியின் அனுபவம்



ஆட்டுக்குட்டிக்குக் காட்டில் சுற்றித் திரிய ஆசை. ஆனால் அதன் அம்மா அப்பாவோ, "வேண்டாம், வேண்டாம்! இந்தக் காட்டில் புலி, சிங்கம், ஓநாய் எல்லாம் நடமாடும். தனியாக எங்கும் போகாதே! நீ குகைக்கு உள்ளேயே இரு," என்று சொல்லி வெளியே இரைதேடப் போய்விட்டன.

'எத்தனை நாள் இப்படிக் குகையிலேயே அடைந்து கிடப்பது? வெளியே போய்த்தான் பார்ப்போமே!' ஆட்டுக்குட்டி மெல்ல வெளியே எட்டிப் பார்த்தது. 'ஆஹா! வெளியே எவ்வளவு அழகாக இருக்கிறது,' என்றபடி மெல்ல நடக்கத் தொடங்கியது.

ஆசை தீர வெகு தூரம் சுற்றித் திரிந்தது. இருட்டத் தொடங்கியதும் வீடு திரும்ப நினைத்தது. ஆனால் ஆட்டுக்குட்டிக்கு வழி தெரியவில்லை.





அருகில் இருந்த குகைக்குள் நுழைந்தது. அது ஒரு நரியின் குகை. நரி அங்கு இல்லை. வெளியே சென்றிருந்தது. ஆட்டுக்குட்டி தன் அம்மா அப்பா வரும் வரை அங்கேயே காத்திருக்க முடிவு செய்தது.

விடிந்து விட்டது. நரி தன் குகைக்குத் திரும்பியது. உள்ளே ஏதோ ஒரு புதிய விலங்கு இருப்பதை உணர்ந்தது. வாசலிலேயே நின்றுவிட்டது.

"யார் உள்ளே? உடனே வெளியே வா!" என்று மிரட்டியது. நம் ஆட்டுக்குட்டிக்கா தப்பிக்க வழி தெரியாது! தன் குரலை ஒரு பெரிய விலங்கின் குரல் போல மாற்றிக்கொண்டது.

"ஹா ஹ் ஹா ஹா! நான் சிங்கராஜாவின் பெரியப்பா! நான் ஒரு வேளைக்கு ஐம்பது புலிகள் சாப்பிடுவேன்! சீக்கிரம் போய்ப் புலிகளைக் கொண்டு வா!" என்றது.



நரி பயந்தது. தலை தெறிக்க ஓடியது. புலிகளின் தலைவனிடம் சென்றது.

“புலிமாமா, புலிமாமா! பயங்கரமான விலங்கு ஒன்று என் வீட்டுக்குள் புகுந்து உள்ளது. அது சாப்பிடுவதற்கு ஐம்பது புலிகளைக் கேட்கிறது!” என்றது.





புலி சிரித்தது. “ப்பூ! எந்த விலங்கு ஐம்பது புலிகளைச் சாப்பிடும்? எங்கே என்னிடம் காட்டு. நான் அதைத் துரத்தி விடுகிறேன்!” என்றது.

இதற்குள் ஆட்டுக்குட்டியின் அம்மா அப்பா குட்டியின் கால் சுவடுகளை வைத்து அது இருக்கும் இடத்தைக் கண்டுபிடித்து விட்டன. அம்மா அப்பாவிடம் நடந்ததை எல்லாம் குட்டி கூறியது. அப்போது தூரத்தில் நரி புலியுடன் வந்து கொண்டிருந்தது. மூன்றும் குகைக்குள் ஒளிந்து கொண்டன.
ஒரு திட்டம் தீட்டின.



புலியும் நரியும் குகை அருகே வந்ததும் அம்மா, குட்டி ஆட்டின் காதைத் திருகியது. "ஆ!" குட்டி அலறியது.

அப்பா ஆடு தன் குரலை மாற்றிக் கொண்டு "குட்டி ஏன் அலறுகிறது?" என்று கேட்டது. "நம் குட்டி இங்கு வந்ததிலிருந்து யானை, கரடி, எருமைகளைத்தான் சாப்பிட்டதாம். இப்போது சாப்பிடப் புலிதான் வேண்டுமாம்!" என்றது அம்மா.

"சரி, சரி! புலிகளைக் கொண்டு வரச்சொல்லி ஒரு நரியை அனுப்பி இருக்கிறேன்! நரி புலிகளுடன் வந்து கொண்டே இருக்கும்," என்றது அப்பா ஆடு.

இதைக் கேட்ட புலி நடுங்கியது. 'ஐயோ! உள்ளே இருக்கும் குட்டி, யானைகளையும், கரடிகளையும், எருமைகளையும் விழுங்குமாமே! நான் மாட்டிக் கொண்டால் என் கதி என்ன ஆகும்?' ஒரு நொடி கூடத் தாமதிக்காமல் புலி ஓடத் தொடங்கியது. நரி மட்டும் நிற்குமா என்ன?






P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : Uma Krishnaswamy

# சிரவணன்



சிரவணன் தன் அம்மா அப்பாவை அன்புடன் கவனித்து வந்தான் அவர்கள் கண் தெரியாதவர்கள். முதியவர்கள். அவர்களுக்கு வெகு நாட்களாகவே தீர்த்த யாத்திரை செல்ல ஆசை. அவர்களால் தனியாகப் போக முடியாதே! சிரவணன் அவர்களது ஆசையை நிறைவேற்ற நினைத்தான்.

சிரவணன் உறுதியான காவடி ஒன்றில் இரு கூடைகளைத் தொங்கவிட்டான். அம்மா அப்பாவைக் கூடைகளில் உட்கார வைத்தான். காவடியைத் தோளில் சுமந்து கொண்டு தீர்த்த யாத்திரை புறப்பட்டான்.





ஊர் மக்கள் அவன் செல்வதையே பார்த்துக் கொண்டிருந்தனர். அவனை மனமார வாழ்த்தினர்.

சிரவணன் நகரங்கள், ஆறுகள், மலைகள் பலவற்றைக் கடந்து சென்றான். எங்கும் மக்கள் அவனை வியப்போடு பார்த்தனர். அன்புடன் விசாரித்தனர். "என்ன அதிசயம்!" என்று சிலர் கண்கலங்கினர்.

இப்படியே மாதங்கள் சில கடந்தன. ஒரு நாள் அவர்கள் அடர்ந்த காட்டின் வழியே சென்று கொண்டிருந்தனர். எங்கும் பறவைகளின் ஒலி. மான் கூட்டங்கள் பயந்து ஓடின. முயல்கள் பொந்துக்களுக்குள் பதுங்க ஓடின. எதற்கும் அஞ்சாத சிரவணனுக்கே பயம் ஏற்பட்டது.

இருட்ட ஆரம்பித்தது. ஒரு மரத்தடியில் மூவரும் ஓய்வு எடுத்தனர். சிரவணனின் தந்தை குடிக்கத் தண்ணீர் கேட்டார். காவடியில் கட்டியிருந்த செம்பில் தண்ணீர் தீர்ந்துவிட்டது.

சிரவணன், "நான் போய் நொடியில் தண்ணீர் கொண்டு வருகிறேன்," என்று கிளம்பினான். சிறிது தூரம் சென்றான். நீரோடை ஒன்று 'சலசல' வென்று ஓடுவதைப் பார்த்தான். செம்பைத் தண்ணீரில் அமிழ்த்தினான். செம்பில் தண்ணீர் புகும்போது 'களகள' வென்று சத்தம் எழும்பியது.

அப்போது காட்டில் வேட்டையாட வந்திருந்த தசரத மன்னன் அந்தச் சத்தத்தைக் கேட்டான். யானைதான் நீர் குடிக்கிறது என்று நினைத்து அம்பை எய்தான். ஆனால் மனித அலறலைக் கேட்டு அதிர்ந்தான்.



தசரதன் சத்தம் வந்த திசையை நோக்கி ஓடினான். அங்கு சிரவணன் வேதனையால் துடித்துக் கொண்டிருந்ததைப் பார்த்தான். "நண்பனே! என்னை மன்னித்துவிடு. யானைதான் நீர் குடிக்கிறது என்று தவறாக எண்ணி அம்பை எய்துவிட்டேன்," என்றான்.

சிரவணன் சிரமப்பட்டுப் பேசினான். "என்னைப் பற்றிக் கவலைப்படாதீர்கள். என் அம்மா அப்பா தாகத்தால் தவித்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கு இந்தத் தண்ணீரைக் கொடுத்துவிடுங்கள்," என்றான்.

அவன் கதையைக் கேட்ட தசரதன், 'ஐயோ! தன் பெற்றோருக்கு எவ்வளவு அன்போடு பணிவிடை செய்கிறான். இத்தனை உயர்ந்த மனிதனின் மீது அம்பை எய்துவிட்டேனே!' என்று வேதனைப்பட்டான்.

"சீக்கிரம் தண்ணீர் எடுத்துப் போங்கள்," என்று சொல்லியபடியே சிரவணன் இறந்து விட்டான். தசரதன் அவன் உடலைத் தோளில் சுமந்து கொண்டான். மறு கையில் செம்பை எடுத்துக் கொண்டு புறப்பட்டான்.

காலடி ஓசை கேட்ட சிரவணனின் பெற்றோர், "மகனே! வந்து விட்டாயா! ஏன் இவ்வளவு நேரம்? உனக்கு ஏதோ ஆபத்து என்று பயந்துவிட்டோம். சீக்கிரம் தண்ணீர் கொடு," என்றனர்.

தசரதன் அவமானத்தால் குன்றிப்போனான். கை நடுங்கச் செம்பைக் கொடுத்தான். பிறகு அவர்களிடம் சிரவணன் இறந்ததைப் பற்றித் தெரிவித்தான்.

சிரவணனின் தாயும், தந்தையும் கதறிக் கதறி அழுதார்கள். அதைக் கேட்டு அந்தக் காடே கலங்கியது. எப்படி இந்த முதியவர்களைத் தேற்றுவது? தசரதனுக்குத் தெரியவில்லை. "இன்று முதல் என்னை உங்கள் மகனாக ஏற்றுக் கொள்ளுங்கள். என்னோடு வந்துவிடுங்கள்," என்றான்.

முதியவர்கள், "சிரவணன் இல்லாமல் எங்களால் வாழவே முடியாது. இந்தத் துக்கத்தை எங்களால் தாள முடியாதப்பா! உன் மகன் உன்னைவிட்டுப் பிரியும்போது, நீயும் இப்படித்தான் துக்கப்படுவாய். எங்கள் துன்பத்தை உணர்வாய்!" என்றனர். சோகம் தாளாமல் இருவரும் உயிர் இழந்தனர்.

பல ஆண்டுகளுக்குப் பிறகு தசரதனும் தன் மகன் ராமனைப் பிரிய வேண்டி இருந்தது. துக்கம் தாளாமல் அழுதான். அப்போது சிரவணனின் பெற்றோர் கூறிய சொற்கள் அவன் காதில் ஒலித்தன.






P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : S. P. Raju

# குழலோசை

முன்னொரு காலத்தில் சீன நாட்டில் பிங் என்னும் ஒரு பணக்காரன் இருந்தான். அவன் எப்போதும் பணத்தை எண்ணிக் கொண்டே இருப்பான். குழந்தைகள் அவனை விளையாடக் கூப்பிட்டால், "எனக்கு நேரமில்லை. பணத்தை எண்ண வேண்டும்," என்று சொல்லிவிடுவான்.

அவன் வீட்டிற்கு அருகில் லீ என்ற ஏழை ஒருவன் இருந்தான். அவன் நாள் முழுவதும் தன் நிலத்தில் உழைப்பான். நேரம் கிடைக்கும் போதெல்லாம் தன் புல்லாங்குழலை எடுத்து வாசிப்பான். அவன் இசையில் மயங்கி அவனுடைய மனைவியும், குழந்தைகளும் ஆடிப்பாடுவார்கள். பறவைகள், விலங்குகள், மரங்கள் கூட மெய் மறந்து அவன் இசையைக் கேட்கும்.

அந்த இசை காற்றில் மிதந்து பிங்கின் காதிலும் விழும். பணத்தை எண்ணும் போது அவன் கவனத்தைச் திசை திருப்பிவிடும்! 'ஐயோ! எதுவரையில் எண்ணினேன்! மறந்து விட்டேனே!' மீண்டும் மீண்டும் பணத்தை அவன் எண்ண வேண்டி இருந்தது.

'இந்தத் தொல்லையை எப்படியாவது நிறுத்த வேண்டும்!' பிங் ஒரு முடிவுக்கு வந்தான். காசு மூட்டையுடன் லீயின் வீட்டிற்குச் சென்றான். அதை லீக்குப் பரிசாக அளித்தான். 'பணமிருக்கும் போது அவனால் எப்படி ஆடிப்பாட முடியும்?' என்று தனக்குள் சிரித்துக் கொண்டே வீடு திரும்பினான்.





லீக்கு ஒன்றுமே புரியவில்லை. இவ்வளவு தங்கக் காசுகளை அவன் பார்த்ததே இல்லை. காசை எண்ண ஆரம்பித்தான். பாதி எண்ணிய பிறகு 'சரியாக எண்ணவில்லையோ,' என்று சந்தேகப்பட்டு மீண்டும் எண்ணத் தொடங்கினான். இப்படிச் செய்து கொண்டே இருந்தான். அன்றையப் பொழுது முடிந்தது. லீ ஒரு முறை கூடப் புல்லாங்குழல் வாசிக்கவே இல்லை.

மறுநாள் காலை. 'காசு மூட்டையை எங்கு வைப்பது?' லீ கவலைப்படத் தொடங்கினான். பானைக்குள்ளே, பெட்டிக்குள்ளே, பரண் மேலே என்று ஒவ்வொரு இடமாக மாற்றிக் கொண்டே இருந்தான். கடைசியில் மூட்டையைக் கிணற்றுக்குள் வைத்தான். அன்றும் ஒரு முறை கூட அவன் புல்லாங்குழல் வாசிக்கவே இல்லை.

அதற்கு அடுத்த நாள். 'பணத்தை எப்படிச் செலவழிப்பது?' என்று கவலைப்படத் தொடங்கினான். 'எருது வாங்கலாமா? ஏர் வாங்கலாமா இல்லை கோழி வாங்கலாமா?' என்று யோசித்துக் கொண்டே இருந்தான். அன்றும் லீ புல்லாங்குழல் வாசிக்கவில்லை.



மறு நாள் அவனுக்கு ஒரு சந்தேகம்! 'நினைத்ததை எல்லாம் வாங்க மூட்டையில் உள்ள பணம் போதுமா?'



கிணற்றில் ஒளித்து வைத்திருந்த மூட்டையை வெளியில் எடுத்தான். காசுகளை மீண்டும் எண்ணத் தொடங்கினான்.

அப்போது அவனுடைய குழந்தைகள், "அப்பா! நீங்கள் குழலை எடுத்து வாசியுங்களேன்," என்று கேட்டனர். உடனே லீ, "எனக்கு நேரமில்லை. பணத்தை எண்ண வேண்டும்," என்று எரிந்து விழுந்தான்.

இதைப் பார்த்த அவன் மனைவி வருத்தப்பட்டாள். லீயைப் பார்த்து, "பணத்தை விட அன்புதான் சிறந்த செல்வம். யாரிடம் அன்பு இருக்கிறதோ அவர்கள் என்றும் ஏழை இல்லை!" என்றாள்.



லீ காசு எண்ணுவதை நிறுத்தினான். நிமிர்ந்து வானத்தைப் பார்த்தான். நட்சத்திரங்கள் நிறைந்த வானம் பூந்தோட்டம் போல் இருந்தது! நீண்ட நேரம் வானத்தைப் பார்த்துக் கொண்டே இருந்தான். பணத்தை என்ன செய்ய வேண்டும் என்று அவனுக்குப் புரிந்துவிட்டது!

இரவெல்லாம் தூங்காமல் லீ ஒரு கட்டுப் புல்லாங்குழல்கள் செய்தான். காலை எழுந்ததும் பிங்கின் வீட்டுக்குச் சென்றான். பண மூட்டையைத் திருப்பிக் கொடுத்தான். 'இந்தப் பணம் என்னுடைய நிம்மதியைக் குலைக்க இருந்தது. எனக்கு இது வேண்டாம். இதோ என்னிடம் உள்ள செல்வத்தை நீ பகிர்ந்து கொள்,' என்று புல்லாங்குழல்களைப் பரிசாகக் கொடுத்தான்.

உடனே பிங்கின் குழந்தைகள் ஆளுக்கொரு புல்லாங்குழலை எடுத்து வாசித்தனர். ஆடிப்பாடி மகிழ்ந்தனர். 'பார்த்தாயா! தங்கத்தையும் வெள்ளியையும் மதிப்பிடலாம். நிம்மதியும், மகிழ்ச்சியும் விலைமதிப்பற்றது,' என்றான் லீ.

பிங் யோசித்தான். பிறகு தானும் ஒரு புல்லாங்குழலை எடுத்து வாசிக்கத் தொடங்கினான்.

மூலம் : சீன நாட்டுப்புறக் கதை







P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : S. P. Raju

# அணிலும் அரசனும்



முன்பு ஒரு சமயம் ஒரு அரசன் இருந்தான். அவன் புத்திசாலி, திறமைமிக்க வீரன். ஏராளமான செல்வமும் பெற்றவன்.

ஒரு நாள் அவன் தன் அமைச்சருடன் தோட்டத்தில் உலாவிக் கொண்டிருந்தான். பேச்சுவாக்கில் அரசன், "என்னிடம் யாரும் தன்னைப்பற்றிப் பெருமையாகப் பேசமுடியாது. ஏனென்றால் எல்லா விதத்திலும் நானே சிறந்தவன்," என்றான்.



அதற்கு அமைச்சர், "மன்னிக்க வேண்டும் அரசே! ஒவ்வொருவருக்கும் தன்னைப் பற்றிய பெருமை இருக்கத்தான் செய்யும். சிலர் உங்கள் பெருமை அறியாமல் தம்மைப் பற்றிப் பெருமையாகப் பேசலாம். நீங்கள் அதைப் பொருட்படுத்தாமல் இருப்பதுதான் நல்லது," என்றார்.

அவர்கள் பேசிக் கொண்டிருக்கும்போதே அங்கு ஒரு அணில் வந்தது. அதன் கையில் ஒரு நாணயம் இருந்தது. அரசன் அதைக் கூர்ந்து கவனித்தான். அப்போது அணில்,

*செல்வத்தில் சிறந்தவன் நான்தானே*
*ராஜாவுக்கு என்மேல் பொறாமை தானே!*

என்று பாடியது.



இதைக் கேட்ட அரசன் அதிர்ந்தான். கோபத்துடன் அணிலைப் பிடிக்கத் தாவினான்.

அணில் நாணயத்தைப் போட்டுவிட்டு ஓடிவிட்டது. அரசன் அதை எடுத்தான். புன்சிரிப்புடன் வீடு திரும்பினான்.

மாலை நேரம். அரசவை கூடியது. அப்பொழுது அங்கு வந்த அணில் உரத்த குரலில்,

*ராஜாவின் பெருமையெல்லாம் என் செல்வத்தால்தானே*
*இதை ஊருக்கு எல்லாம் உரக்க நான் சொல்வேனே!* என்று பாடியது.

அரசன் ஆத்திரம் அடைந்தான். ஆனால் எல்லோர் முன்னாலும் அவனால் ஒன்றும் செய்ய முடியவில்லை.

மறுநாள் காலை. அரசன் ஏழைகளுக்கு தானம் செய்து கொண்டிருந்தான். அப்பொழுது அங்கு வந்த அணில்,

*அதோ ராஜா செய்கிறார் தானம் - அது*
*என் செல்வத்தால்தான் என்பேன் நானும்!* என்று பாடியது.



அரசன் "அந்த அணிலைப் பிடித்து வாருங்கள்," என்றான். அதற்குள் அணில் ஓடிவிட்டது. மதியம் அவன் உணவு அருந்த அமர்ந்தான். அப்பொழுதும் அங்கு வந்த அணில்,

*ராஜாவின் சாப்பாடு விதம் விதம் - அவர்*
*என் செல்வத்தால் சாப்பிடுகிறார் தினம் தினம்!* என்று பாடியது.

அரசன் கடும் கோபத்துடன் எழுந்தான். அவனால் சாப்பிட முடியவில்லை. இரவு சாப்பிடும்போதும் அணில் வந்தது. மதியம் பாடிய பாட்டைப் பாடியது. கோபத்துடன் அரசன் நாணயத்தை அணில் மேல் விட்டெறிந்தான். உடனே அணில்,

*கொடுத்துவிட்டார், கொடுத்து விட்டார் - பயம் கொண்ட*
*ராஜா என் செல்வத்தைக் கொடுத்துவிட்டார்!*
என்று பாடியது.



இரவெல்லாம் அரசனால் தூங்கவே முடியவில்லை. காலையில் அமைச்சரிடம், "நம் படைகளை அனுப்பி நாட்டில் இருக்கும் எல்லா அணில்களையும் கொல்லப் போகிறேன்," என்றான்.

அதற்கு அமைச்சர், "வயல்கள், அடர்ந்த காடுகள், பெரிய மலைகள் இவற்றில் வாழும் கோடிக்கணக்கான அணில்களைப் பிடிப்பது சுலபம் அல்ல. அப்படியே பிடித்தாலும் வேறு நாடுகளிலிருந்து அணில்கள் இங்கு வரலாம் இல்லையா? மேலும் நம் வீரர்கள் அணில்களுடன் போரிடுவதை விரும்புவார்களா? அப்படியும் நீங்கள் தேடிக் கொண்டு இருக்கும் அணில் தப்பிவிட்டால் முயற்சி எல்லாம் வீணாகிவிடுமே!" என்றார்.

மேலும் அமைச்சர், "அது மட்டுமல்ல வருங்காலச் சரித்திரத்தில் *'அணில்களுடன் போரிட்ட அரசன்'* என்று உமது பெயர் கேலிக்கு உரியதாகிவிடும்," என்றார்.

"நான் என்ன தான் செய்வது?" என்றான் அரசன். "அணிலைப் பொருட்படுத்தாதீர்கள். முதல் முதலில் அணில் தற்பெருமை பேசிய போதே நீங்கள் கோபப் பட்டிருக்கக்கூடாது. அப்படிச் செய்திருந்தால் நீங்கள் நிம்மதி இழந்து இருக்க மாட்டீர்கள்," என்றார் அமைச்சர்.







அடுத்த நாள் அணில் வந்தது. மீண்டும் பாடத் தொடங்கியது. அதற்கு அரசன்,

*யாருக்குத்தான் தெரியாது? அறிவிலும் செல்வத்திலும்*
*அணிலே சிறந்தது என்று யாருக்குத்தான் தெரியாது!* என்று பாடினான்.

அணில் அதிர்ச்சி அடைந்தது. ஆச்சரியத்துடன் அரசனைப் பார்த்தது. மறுவார்த்தை பேசாமல் அங்கிருந்து மறைந்துவிட்டது.

மூலம் : மனோஜ்தாஸ் எழுதிய கதை




P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : Uma Krishnaswamy



# வாரி வழங்கும் மரம்

அது ஒரு பெரிய மரம். தினந்தோறும் ஒரு சிறுவன் அதனிடம் வருவான். இலைகளைச் சேகரிப்பான். அவற்றால் கிரீடம் செய்து தலையில் வைத்துக் கொள்வான். காட்டு ராஜா போல நடித்து விளையாடுவான்.

மரத்தில் ஏறுவான். கிளைகளில் ஊஞ்சலாடுவான். பழங்களைத் தின்பான். மரத்துடன் கண்ணாமூச்சி விளையாடுவான். களைப்பு ஏற்பட்டால் மர நிழலில் தூங்குவான். சிறுவன் மரத்தை மிகவும் நேசித்தான். மரமும் மகிழ்ச்சியாக இருந்தது.

இப்படியே ஆண்டுகள் பல கடந்தன. சிறுவன் இளைஞன் ஆகி விட்டான். மரம் தனிமையில் வாடியது.

ஒருநாள் இளைஞன் மரத்திடம் வந்தான். மரம் அவனிடம், “வா, கண்ணா! என் கிளைகளில் ஏறு! ஊஞ்சலாடு! பழங்களைச் சாப்பிடு! என் நிழலில் விளையாடி மகிழ்!” என்றது.





இளைஞன், "நான் பெரியவனாகி விட்டேன். மரம் ஏறி விளையாடும் வயது இல்லை. இப்போது நான் பல பொருட்களை வாங்கி மகிழ்ச்சியாக இருக்க விரும்புகிறேன். உன்னால் எனக்குப் பணம் கொடுக்க முடியுமா?" என்றான்.

மரம், "என்னிடம் பணம் இல்லை. இலைகளும், பழங்களும் தான் இருக்கின்றன. பழங்களைப் பறித்து விற்றுப் பணமாக்கிக் கொள்! மகிழ்ச்சியாக இரு," என்றது.

இளைஞன் மரத்தில் ஏறினான். பழங்களைப் பறித்தான். கடைக்குக் கொண்டுபோனான். மரம் மகிழ்ச்சியாக இருந்தது.



வெகு நாள்கள் சென்றன. இளைஞன் திரும்பி வரவேயில்லை. மரம் வேதனைப்பட்டது.

ஒரு நாள் இளைஞன் வருவதைப் பார்த்த மரம், "வா மகனே! என் கிளைகளில் ஏறி ஊஞ்சலாடு! மகிழ்ச்சியாக இரு," என்றது.

இளைஞன், "மரம் ஏற நேரமில்லை. எனக்கு ஒரு வீடு வேண்டும். மனைவி, குழந்தையுடன் அதில் பாதுகாப்பாக வாழ வேண்டும். உன்னால் எனக்கு ஒரு வீடு தர முடியுமா?" என்று கேட்டான்.



"எனக்கென்று வீடு இல்லை. இந்தக் காடுதான் என் வீடு. நீ என் கிளைகளை வெட்டி வீடு கட்டிக் கொள். மகிழ்ச்சியாக இரு," என்றது மரம்.

இளைஞன் கிளைகளை வெட்டி எடுத்துச் சென்றான். இப்போதும் மரம் மகிழ்ச்சியாக இருந்தது.

வருடங்கள் உருண்டன. ஒருநாள் இளைஞன் மீண்டும் வந்தான். மரம் அவனைப் பார்த்தது. மகிழ்ச்சியால் பேசக்கூட முடியவில்லை. மெல்லிய குரலில், "வா மகனே! விளையாடு!" என்றது.

"நான் மிகவும் கவலையாக இருக்கிறேன். விளையாடும் வயதில் நான் இல்லை. நான் கடல் தாண்டிச் செல்ல வேண்டும. எனக்கு ஒரு படகு கொடுக்க முடியுமா?" என்றான்.

மரம், "என்னிடம் இருக்கும் இந்த அடித் தண்டை வெட்டிப் படகு செய்து கொள்," என்றது. இளைஞன் மரத்தை வெட்டிப் படகு செய்தான். கடலைக் கடந்தான்.

மரம் மகிழ்ச்சியாக இருந்தது. ஆனால் அது உண்மையான மகிழ்ச்சி இல்லை.

பல வருடங்கள் கடந்தன. இளைஞன் முதியவனாகித் திரும்பி வந்தான். அவனைப் பார்த்து மரம், "மன்னித்துக் கொள் மகனே! உனக்குத்தர என்னிடம் ஒன்றுமே இல்லை. பழம்கூட இல்லை!" என்றது.





முதியவன், "பழத்தைக் கடித்துச் சாப்பிட என் பற்களில் பலமில்லை," என்றான்.

"ஊஞ்சலாட என்னிடம் கிளைகளும் இல்லை," என்றது மரம். "எனக்கு வயதாகிவிட்டது. என்னால் ஊஞ்சலாட முடியாது," என்றான் முதியவன்.

"நீ என் மேல் ஏறுவதற்கு என் தண்டும் இல்லை," என்றது மரம்.

"நான் மிகவும் தளர்ந்து விட்டேன். தண்டின் மேல் ஏறுவதற்கு சக்தி இல்லை," என்றான்.

"உனக்கு ஏதாவது கொடுக்க விரும்புகிறேன். ஆனால் என்னிடம் ஒன்றும் இல்லையே! வெறும் அடிமரக்கட்டைதான் இருக்கிறது," என்றது மரம்.

"இப்போது எனக்கு அதிகமாக எதுவும் தேவையில்லை. அமைதியாக உட்கார்ந்து ஓய்வெடுக்க ஒரு இடம் தேவை. நான் மிகவும் களைப்பாக இருக்கிறேன்," என்றான் முதியவன்.

"இதோ என் அடிமரக்கட்டையின் மேல் உட்கார். ஓய்வு எடுத்துக் கொள்," என்றது மரம்.

முதியவன் அதன்மேல் அமர்ந்தான்.

இப்போது மரம் மிகவும் மகிழ்ச்சி அடைந்தது.

மூலம் : "Giving Tree" by Sylverstine






P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : Sylverstine

# புலிமேல் சவாரி செய்தவன் 

காட்டில் அன்று அடை மழை. எங்கும் கும்மிருட்டு. அவ்வப்போது மின்னல் 'பளிச் பளிச்' என்று மின்னியது. பலத்த புயல் காற்று வீசியது. இடி இடித்தது. பல மரங்கள் வேருடன் சாய்ந்தன. பயந்து போன ஒரு புலி ஓடி அடுத்துள்ள கிராமத்தை அடைந்தது. ஒரு குடிசையின் சுவரோரம் ஒதுங்கிக் கொண்டது.



அந்தக் குடிசைக்குள் ஒரு பாட்டி, "இரண்டு நாள்தான் எனக்கு நிம்மதி. மீண்டும் வந்துவிட்டது இந்த ஓயாத தொல்லை," என்று புலம்பிக் கொண்டே இருந்தாள். வீடு முழுதும் நீர் சொட்டிக் கொண்டே இருந்ததால் மேசைகளையும் பெட்டிகளையும் நகர்த்தினாள். 'டமால்! டுமீல்!' என்று அவை மோதும் சத்தம்! சுவரே கிடுகிடுத்தது.

இதைக் கேட்ட புலி பயந்து போனது. 'ஓயாத தொல்லையா? அது என்ன? பெரிய பூதமோ!' என்று நினைத்தது புலி.

அப்போது காளியப்பன் தன் கழுதையைத் தேடிக் கொண்டே அந்தப் பக்கமாக அங்கு வந்தான். இருட்டில் பாட்டி வீட்டுச் சுவரோரம் ஒரு விலங்கு நிற்பதைப் பார்த்தான். அது தன் கழுதைதான் என்று நினைத்துவிட்டான். கோபத்துடன் அதன் காதைப் பிடித்துத் திருகினான். "உனக்கு அறிவிருக்கிறதா? கொட்டும் மழையில் உன்னை எங்கெல்லாம் தேடுவது?" என்று கத்தினான். எரிச்சலுடன் புலியின் மேல் ஏறி அதை ஓட்டிச் சென்றான்.

இதுவரை புலியின் காதை யாருமே இப்படித் திருகியதில்லை! புலி நடுங்கியது. அவன் இழுத்த இழுப்புக் கெல்லாம் பணிந்தது. வீட்டை அடைந்ததும் புலியை வாசலில் கட்டிப் போட்டுவிட்டுத் தூங்கச் சென்றான் காளி.

பொழுது விடிந்தது. அவன் மனைவி வாசலுக்கு வந்தாள். வாசலில் கட்டப்பட்டிருந்த புலியைப் பார்த்து அலறினாள். அவள் போட்ட கூச்சலில் பதறியடித்து ஓடிவந்தான் காளி.

புலியைப் பார்த்ததும், "ஐயோ" என்று அலறிக் கொண்டே உள்ளே ஓடினான். மீண்டும் வாசல் பக்கம் திரும்பவே இல்லை. இருவரும் கதவை இழுத்து மூடிக் கொண்டனர்.

காளியின் வீட்டு வாசலில் கட்டியிருந்த புலியைப் பார்த்ததும் ஊர் மக்களும் அலறி அடித்துக் கொண்டு நாலாபுறமும் ஓடினர். மிரண்டுபோன புலி கயிறைக் கடித்து அறுத்தது. காட்டுக்குத் தப்பிச் சென்றது.

காளியப்பன் புலிமேல் சவாரி செய்த செய்தி ஊரெங்கும் பரவியது.



எல்லோரும் அவனைப் பார்க்க வந்தனர். "நீ புலி மேல் சவாரி செய்தாயாமே!" என்று வியப்புடன் கேட்டனர். அதற்குக் காளி, "சவாரி மட்டுமா செய்தேன்! புலியின் காதையும் பிடித்துத் திருகினேன்!" என்றான் பெருமையாக. இந்தச் செய்தி மன்னனின் காதுக்கும் எட்டியது. மன்னன் காளிக்கு ஏராளமான பரிசுகளை வழங்கினான்.

சில மாதங்கள் சென்றன. எதிரி நாட்டு வீரர்கள் மன்னனைத் தாக்க வந்தனர். உடனே மன்னன், "புலி மேல் சவாரி செய்த வீரனை அனுப்புங்கள். அவன் எதிரிகளைத் தவிடு பொடியாக்கி விடுவான்! இதோ இந்த வலிமையான குதிரையை அவனுக்குக் கொடுங்கள்," என்று கட்டளை இட்டான்.

மன்னனின் கட்டளையைக் கேட்டுத் திகைத்தான் காளி. 'வேறு வழியில்லை. போய்த்தான் ஆகவேண்டும்,' என்று கஷ்டப்பட்டுக் குதிரையின் மேல் ஏறினான். "நான் கீழே விழுவதற்குள் என்னைக் குதிரையோடு இறுகக் கட்டிவிடு," என்று மனைவியிடம் கூறினான். அவளும் அவன் உடல், கால், கை, கழுத்து என்று எல்லாவற்றையும் குதிரையோடு சேர்த்துக் கட்டினாள்.



குழம்பிப் போன குதிரை தலை தெறிக்க ஓடியது. வயல்கள் ஆறுகளைக் கடந்து எதிரிப் படைகளை நோக்கிப் பாய்ந்தது.

"ஐயோ அங்கே போகாதே!" என்று அலறினான் காளி. குதிரையை எப்படி நிறுத்துவது? இரண்டு கைகளைத் தூக்கி ஒரு மரக் கிளையைப் பிடித்தான். ஆனால் குதிரை ஓடிக் கொண்டே இருந்தது. மண் ஈரமாக இருந்ததால் மரம் வேருடன் பிடுங்கிக் கொண்டு கையோடு வந்துவிட்டது.

கையில் மரத்தைச் சுழற்றிக் கொண்டு குதிரையில் வேகமாக வரும் காளியை எதிரிகள் பார்த்தனர்.

“ஐயோ! அந்த மனிதனைப் பார்த்தீர்களா! மரத்தையே பிடுங்கிக் கொண்டு சண்டை போட வருகிறான்! நிச்சயம் அவன்தான் புலிமேல் சவாரி செய்தவன்,” என்றனர். உயிருக்குப் பயந்து ஓட்டம் பிடித்தனர்.

குதிரை ஒரு முறை திமிறிக் கொண்டு நின்றது. கயிறு அறுந்து கட்டு அவிழ்ந்தது. காளி கீழே விழுந்தான். நல்லவேளை! அப்போது அங்கு யாரும் இல்லை.

“எப்படியோ தப்பித்தேன்,” என்று குதிரையைப் பிடித்தபடி வீட்டை நோக்கி நடந்தான் காளி. இனி அவன் குதிரையில் ஏறுவானா என்ன?

அவன் நடந்து வருவதைப் பார்த்த மக்கள், “இவன் ஒருவனே எல்லா எதிரிகளையும் விரட்டி விட்டான். இவ்வளவு பெரிய சாதனை புரிந்துவிட்டுச் சாதாரணமாக நடந்து வருகிறான் பார்!” என்று வியந்தனர்.

மூலம் : இந்திய நாட்டுப்புறக்கதை




P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : S. P. Raju

# தருமனின் நேர்மை



*(பாண்டவர்களின் பன்னிரண்டு வருட வனவாசம் முடியும் காலம்..)*

ஒரு நாள் பாண்டவர்கள் காட்டில் ஒரு மானைத் துரத்தினர். அது வெகுதூரம் ஓடி மறைந்துவிட்டது. களைத்துப்போய்ப் பாண்டவர்கள் ஓர் ஆலமரத்தின் அடியில் அமர்ந்தனர். "தம்பி! தாகமாயிருக்கிறது," என்றார் தருமர்.

"நான் போய்த் தண்ணீர் கொண்டு வருகிறேன்," என்று கிளம்பினான் நகுலன். குளத்தை அடைந்ததும் நீரில் கை வைத்தான். அப்போது வானிலிருந்து ஒரு குரல்!

"நில்! என் கேள்விகளுக்குப் பதில் சொல்லிவிட்டுப் பிறகு தண்ணீரைக் குடி," என்றது அந்தக் குரல்.





ஆனால் நகுலன் அதைப் பொருட்படுத்தாமல் தண்ணீரைக் குடித்தான். உடனே கீழே விழுந்து விட்டான்.

வெகுநேரம் ஆகியும் நகுலன் திரும்பி வரவில்லை. தருமர் கவலை கொண்டார். சகாதேவனை அனுப்பினார். குளத்தை அடைந்த சகாதேவன் நீரில் கை வைத்தான். மீண்டும் அதே குரல் ஒலித்தது. அவனும் அதை அலட்சியப்படுத்தித் தண்ணீரைக் குடித்தான். கீழே விழுந்தான். அடுத்து அவர்களைத் தேடி அர்ஜுனன் குளத்துக்கு வந்தான்.

"நான் சொன்னதைக் கேட்காமல் உன் தம்பிகள் இறந்து போனார்கள். என் கேள்விகளுக்கு பதில் சொல்லாமல் தண்ணீரைக் குடித்தால் உனக்கும் இதே கதிதான்," என்றது அந்தக் குரல்.

அர்ஜுனன் கோபத்துடன், "மறைந்து நின்று பேசும் எதிரியே! உன்னை என்ன செய்கிறேன் பார்!" என்று அம்பை எடுத்தான். பிறகு தண்ணீர் குடித்துவிட்டுத் தெம்பாகப் போரிடுவோம் என்று தண்ணீர் குடித்தான். உடனே கீழே விழுந்தான். அதற்குப் பின் பீமன் அங்கு வந்தான். அவனும் தன் சகோதரர்களைப் போலத் தண்ணீர் குடித்துக் கீழே விழுந்தான். கடைசியில் தருமர் வந்தார். தனது தம்பிகளின் நிலையைப் பார்த்துக் கதறி அழுதார்.

"உன் தம்பிகள் என் பேச்சைக் கேட்காமல் தண்ணீரைக் குடித்தார்கள். நீயாவது என் கேள்விகளுக்குப் பதில் சொல்லிவிட்டுத் தாகம் தீர்த்துக்கொள்," என்றது ஒரு குரல். அது யட்சனின் குரல் என்று தருமர் புரிந்து கொண்டார். "உன் கேள்விகளைக் கேள்," என்றார்.

யட்சன் நிறுத்தாமல் கேள்விகளைக் கேட்டான். தருமரும் சளைக்காமல் பதில் சொன்னார்.

*"மனிதனுக்கு எப்போதும் துணையாக இருப்பது எது?"*

*"தைரியம்."*

*"வெற்றியின் முதல்படி எது?"*

*"விடாமுயற்சி."*

*"மிக உயர்ந்த மகிழ்ச்சி எது?"*

*"மனநிறைவு."*

*"துன்பத்திற்குக் காரணம்?"*

*"ஆசை, கோபம்."*

*"மனிதனை எல்லோரும் விரும்புவது எப்போது?*

*"கர்வத்தை விடும்போது."*

*"உண்மையான நட்பை எப்போது பெறலாம்?"*

*"அன்புடன் உதவும் போது."*





*"மனிதன் எப்படிப் புத்திசாலி ஆகிறான்?"*

*"சிறந்த பெரியோர்களிடம் பழகி."*

*"வெளியூர் செல்பவனுக்குத் துணையாக இருப்பது எது?"*

*"கற்ற கல்வி."*

*"லாபத்தில் சிறந்தது எது?"*

*"நோய் இல்லாமல் இருப்பது."*

இப்படிப் பல கேள்விகளுக்குத் தருமர் தயங்காமல் பதில் சொன்னார். முடிவில் யட்சன், "உன் பதில்களால் மகிழ்ந்தேன். இறந்த சகோதரர்களில் நீ யாரை விரும்புகிறாயோ அவரை உயிர் பெறச் செய்கிறேன்," என்றான்.

"நகுலன் உயிர் பிழைக்கட்டும்," என்றார் தருமர். உடனே யட்சன் நேரில் தோன்றி, "பீமன் பதினாறு ஆயிரம் யானைகளின் பலம் கொண்டவன். அர்ஜுனன் வில் வித்தையில் வல்லவன். இவர்களை விட்டுவிட்டு ஏன் நகுலனைக் கேட்கிறாய்?" என்று கேட்டான்.

"என் தந்தைக்குக் குந்தி, மாத்ரி என்று இரண்டு மனைவிகள். நான் குந்தியின் மகன். அதனால் மாத்ரியின் மகன் நகுலன் பிழைக்க விரும்புகிறேன்," என்றார் தருமர்.

"தருமா! உன் நேர்மையைப் பார்த்து நான் பெருமைப் படுகிறேன். உன் எல்லாச் சகோதரர்களையும் உயிர் பிழைக்க வைக்கிறேன்," என்றான் யட்சன்.







P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation. Chennai

Artist : Uma Krishnaswamy

# கண்டுபிடிப்போம் 96



தரையில் போட்ட கோட்டுக்கு
முடிவும் இல்லை, ஆரம்பமும் இல்லை - *அது என்ன?*

இரு வட்டம் சுழல
எட்டுக் கால் இழுத்துச் செல்ல
கடக்கா, முடக்கா கடைவீதியில் போகுது - *அது என்ன?*



உயரே பறந்திடும் - பறவையும் அல்ல
அழகான வாலுண்டு - குரங்கும் அல்ல
மேகத்தில் மறைந்திடும் - நிலவும் அல்ல - *அது என்ன?*

வேகமாக ஓடும், சத்தமாக ஓடும்
இரண்டு கோட்டிலே ஓடும்
காட்டிலும் மலையிலும் போகும்
ஆற்றைக் கடந்து போகும்
நாம் ஏறினால் நம்மையும்
தூக்கிக் கொண்டு ஓடும் - *அது என்ன?*





சுமைகள் சுமப்பவன்
மிதிக்க மிதிக்க ஓடுகிறான்

- அவன் யார்?

இணை பிரியமாட்டார்கள் - நண்பர்கள் அல்ல
ஒன்று சேர மாட்டார்கள் - பகைவர்கள் அல்ல

- யார் அவர்கள்?



கையில்லாமல் நீந்துவான்
கால் இல்லாமல் ஓடுவான்

- அவன் யார்?




ஓர் ஆளின் துணை கொண்டு
ஐம்பது பேரைச் சுமந்தோடுவான் - அவன் யார்?

உதைத்த பிறகே உருமுவான், உருளுவான்

- அவன் யார்?



வாய் இல்லை வார்த்தைகள் சொல்வேன்
உயிர் இல்லை ஊருக்குப் போவேன்
கால் இல்லை வீட்டுக்கு வருவேன்

*- நான் யார்?*



இருந்த இடத்தில் இருந்தபடி
சேதிகளை நகர்த்தும் மாயப்பெட்டி!

*- அது என்ன?*

வீடு தேடி வருவார்:
தேடும் சேதி தருவார்

*- அவர் யார்?*




ஓசையிட்டு அழைக்கும்
காதில் ரகசியம் பேசும்

*- அது என்ன?*

காசு கொடுத்து வாங்கியதைக்
கட்டையால் குத்துகிறார்கள்

*- அது என்ன?*



சேதி எல்லாம் கண்ணுக்குள்ளே

*- அது என்ன?*



அதிகாலை புறப்படுவான்
ஆயிரம் கருத்துடையான் - *அவன் யார்?*

காற்றிலே வருபவன்
விசை வாலை முறுக்கியதும்
விரும்பும் இசை கொடுப்பவன் - *அவன் யார்?*



சொன்னதையெல்லாம் வாங்கி வைத்துக் கொள்வான்
தேவைப்படும் போது திருப்பிக் கொடுப்பான் - *அவன் யார்?*

சைக்கிள், பஸ், மாட்டுவண்டி, ஸ்கூட்டர், ரோடு, ரயில்
தண்டவாளம், ரயில், படகு, தொலைபேசி, விமானம்,
தபால்காரர், தபால்பெட்டி, கடிதம், தபால்தலை,
ரேடியோ, டி.வி, டேப் ரெக்கார்டர், செய்தித்தாள்






P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : Uma Krishnaswamy

# தைரியப் பரிட்சை



ஜப்பான் நாட்டில் ஒரு வித்தியாசமான பள்ளி. பழைய ரயில் பெட்டிகள்தான் அங்கு வகுப்பறைகள். அதில் டோட்டோசான் எனும் சிறுமி படித்து வந்தாள்.

அவர்கள் பள்ளியில் வகுப்பு நிகழ்ச்சிகள் எல்லாமே மகிழ்ச்சியாக இருக்கும். குழந்தைகள் தங்களுக்கு விருப்பமான செயல்பாடுகளைத் தாமே தேர்ந்தெடுக்கலாம். நாள் முழுதும் சிறு குழுக்களில் வேலைகளில் ஈடுபடலாம்.

அருகில் உள்ள இடங்களுக்குக் குழந்தைகள் அடிக்கடி செல்வார்கள். தகவல்கள் சேகரித்து வகுப்பில் பகிர்ந்து கொள்வார்கள். சில சமயம் கூடாரங்கள் அமைத்துப் பள்ளியிலேயே தங்குவார்கள்.

ஒரு நாள் எல்லோரும் கூடாரத்தில் தங்கி இருந்தனர். தலைமை ஆசிரியர், "உங்கள் எல்லோருக்கும் தைரியப் பரிட்சை வைக்கப் போகிறேன். அது கோவில் மைதானத்தில் நடைபெறும். யார் யார் பேயாக ஒளிந்து கொள்ள விரும்புகிறீர்கள்?" என்று கேட்டார். ஏழு குழந்தைகள் கையை உயர்த்தினர். தைரியப் பரிட்சைக்கான நாள் நிச்சயிக்கப்பட்டது.

அந்த நாளும் வந்தது. டோட்டோ சானின் அம்மா, "பயந்துபோய்த் தோற்றுவிடாதே," என்று சொல்லி அவளைப் பள்ளிக்கு அனுப்பினாள்.

மாலை வந்தது. பேயாகப் போகும் குழந்தைகள் பேய்களுக்கான உடையை அணிந்து கொண்டனர். கோவில் பகுதியில் ஒளிந்து கொள்ளச் சென்றனர்.



போகும்முன் அவர்கள், மற்ற குழந்தைகளைப் பார்த்து, "உங்களை எப்படியெல்லாம் பயமுறுத்தப் போகிறோம் பாருங்கள்!" என்று மிரட்டிவிட்டுச் சென்றனர்.

"பேய்களைச் சந்திக்கப் போகும் தைரியசாலிகள் ஒரு இருட்டான பாதையைக் கடக்க வேண்டும். பிறகு கோவில் பகுதிக்குப் போய்ப் பேய்களைச் சந்திக்க வேண்டும்! மீண்டும் பள்ளிக்குத் திரும்ப வேண்டும். யாராவது முழு சுற்றையும் முடிக்காமல் பாதியிலேயே திரும்பி விட்டாலும் பரவாயில்லை," என்று தலைமை ஆசிரியர் சொன்னார்.



இருட்டிவிட்டது. தலைமை ஆசிரியர் குழந்தைகளைக் குழுக்களாகப் பிரித்தார். ஒவ்வொரு குழுவும் சிறு சிறு இடைவேளைக்குப் பிறகு பேய்களைச் சந்திக்கக் கிளம்பியது.

"வழியில் எந்தப் பேயும் வராது. கோவில் பகுதிக்குப் போன பின்தான் பேய்களைப் பார்க்க முடியும்," என்று முன்பே தலைமை ஆசிரியர் சொல்லி இருந்தார். ஆனாலும் குழந்தைகள் அதை நம்பவில்லை.

அன்று நிலா இல்லை. எங்கு பார்த்தாலும் இருட்டு. மரங்கள் காற்றில் சலசலத்தால்கூடக் குழுவில் சிலர் "ஊய்ய்..." என்று ஊளையிட்டனர். காலில் எது இடறினாலும் 'பேய்' என்று பயந்தனர். நண்பர்கள் கையைப் பிடித்தாலும் பேய் மாதிரி தோன்றியது. பாழடைந்த சிறு கட்டிடங்கள் இருட்டில் பயங்கரமாகத் தெரிந்தன.

டோட்டோசான், "தைரியப் பரிட்சை என்னவென்று தெரிந்துவிட்டது. திரும்பிப் போய்விடலாம்," என்று நினைத்தாள். அதே போலத்தான் குழுவில் மற்றவர்களும் நினைத்தனர். எல்லோருமாகச் சேர்ந்து ஒரு முடிவு எடுத்தனர். அவர்களால் எவ்வளவு வேகமாக ஓட முடியுமோ அவ்வளவு வேகமாக ஓடிப் பள்ளியை அடைந்தனர்.

மற்ற குழுவினர் அவர்களுக்கு முன்பே அங்கு வந்திருந்தனர். யாருமே பேய்களைப் பார்க்கப் போகவில்லை!



சிறிது நேரத்தில் பேயாக ஒளிந்து கொண்ட ஒரு சிறுவன் அழுதுகொண்டே திரும்பி வந்தான். யாருமே பார்க்க வராததால் அவன் பயந்துவிட்டான். பேய்களைக் கண்காணிக்க அங்கே இருந்த ஆசிரியர் அவனை அழைத்து வந்தார்.

அடுத்து மேலும் சில 'பேய்கள்' அழுதுகொண்டே வந்தன. ஒரு 'பேய்' இன்னொரு 'பேயை' வேறு யாரோ என்று நினைத்து பயமுறுத்தப் போய் இருவரும் முட்டிக் கொண்டனராம். இதைக் கேட்டு எல்லாக் குழந்தைகளும் சிரித்தனர். 'பேய்களும்' அழுது கொண்டே சிரித்தன.

கடைசியாகச் செய்தித்தாள்களை ஆடையாக அணிந்த ஒரு 'பேய்' திரும்பி வந்தது. "என்னைப் பார்க்க ஏன் யாருமே வரவில்லை?" என்று கோபத்துடன் கேட்டது. அவன் கைகளிலும் கால்களிலும் கொசுக்கடி. "கொசுக்கள் கடித்தபேய் இதோ!" என்று எல்லோரும் சிரித்தனர்.



அன்று முதல் டோட்டோசானின் பள்ளிக் குழந்தைகள் பேயைக் கண்டு பயப்படுவதில்லை. ஏனென்றால் 'பேய்கள்' கூடப் பயப்படுகின்றனவே!

மூலம் : 'டோட்டோசான்'
டெட்சுகோ குரோயாநாகி




P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

# நினைவுகள்



சிறுவயதில் நான் என் தந்தையின் மேசை மீது ஒரு புத்தகத்தைப் பார்த்தேன். அது கண் தெரியாத தன் பெற்றோருக்கு சிரவணன் பணிவிடை செய்ததைப் பற்றியது. அதை மிகவும் ஆர்வத்துடன் படித்தேன்.

அதே சமயத்தில் சிரவணன் தன் பெற்றோரைக் கூடையில் தூக்கிச் செல்லும் படத்தை ஒரு புகைப்படக்காரர் காண்பித்தார். புத்தகமும், படமும் என் மனதைத் தொட்டன.

சிரவணன் இறந்தபோது அவன் பெற்றோர் கதறியது எனக்கு இன்னும் நினைவு இருக்கிறது. சிரவணனைப் போல நானும் பெற்றோரிடம் அன்பு காட்ட வேண்டும் என்று முடிவு செய்தேன்.



இதே போல் அரிச்சந்திரன் நாடகமும் என் மனதைக் கவர்ந்தது. அப்பாவின் அனுமதியுடன் நாடகத்தைப் பார்த்தேன். எத்தனை முறை பார்த்தாலும் அந்த நாடகம் எனக்கு அலுக்கவே இல்லை. அந்த நாடகத்தின் காட்சிகள் மீண்டும் மீண்டும் என் மனதில் தோன்றிக் கொண்டே இருந்தன.

அரிச்சந்திரன் எத்தனை துன்பங்களைச் சந்திக்க நேர்ந்தது! அப்போதும் அவன் உண்மையே பேசினான். என்னையே அரிச்சந்திரனாகப் பலமுறை மனதில் நினைத்துக் கொண்டேன். 'ஏன் எல்லோரும் அரிச்சந்திரனைப் போல் உண்மையாக நடந்துகொள்ளக் கூடாது?' இந்தக் கேள்வி என் மனதில் இரவும் பகலும் எழுந்தது.

என் வாழ்க்கையில் நடந்த இன்னொரு நிகழ்ச்சியை என்னால் மறக்கவே முடியவில்லை. அந்த நிகழ்ச்சியை நினைத்து நான் இன்றும் வருந்துகிறேன்.

உயர்நிலைப் பள்ளியில் எனக்கு ஒரு நண்பன் இருந்தான். எல்லோரும், "அவனுடைய பழக்கங்கள் சரியல்ல. அவனுடன் சேராதே," என்று சொன்னார்கள். நான் அதைக் கேட்கவில்லை.

நாளடைவில் அந்த நண்பன் என் மனதை மெதுவாக மாற்றிவிட்டான். ரகசியமாக அவனுடன் சேர்ந்து புகை பிடிப்பது போன்ற சில தீய பழக்கங்களில் ஈடுபட்டேன். ஆனால் விரைவிலேயே என்னுடைய மனசாட்சி விழித்துக் கொண்டது. என் தவறுகளை எண்ணி வருந்தத் தொடங்கினேன்.

என் தந்தையிடம் நான் செய்த குற்றங்களை ஒப்புக் கொள்ள நினைத்தேன். ஆனால் தயக்கமாக இருந்தது. நடந்ததை எல்லாம் ஒரு காகிதத்தில் எழுதினேன். இனி நான் அவ்வாறு நடக்கமாட்டேன் என்று உறுதிமொழியும் எழுதினேன். எழுதிய காகிதத்தைக் கொடுத்துவிட்டுத் தந்தை முன் அமர்ந்தேன்.






கடிதத்தை அவர் முழுவதும் படித்தார். அவர் கண்களிலிருந்து நீர் வடிந்தது. கடிதம் நனைந்தது. ஒரு நிமிடம் அவர் கண்களை மூடினார். பிறகு கடிதத்தைக் கிழித்து விட்டார்.

நானும் அழுதேன். அவருடைய வேதனையைப் புரிந்து கொண்டேன். அந்தக் கண்ணீர்த் துளிகள் என் குற்றங்களைக் கழுவியது. அவருடைய அன்பு என்னைப் புது மனிதன் ஆக்கியது.

அஹிம்சை பற்றி முதன் முதலில் நான் தந்தையிடம்தான் கற்றுக் கொண்டேன். தண்டனையைவிட அன்பால் தான் இதயங்களை வெல்ல முடியும் என்று உணர்ந்தேன்.

மூலம் : சத்திய சோதனை - காந்திஜி






கதை அருவிக் குழு 2003
P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : S. P. Raju

# விக்கிரமாதித்தனின் சிம்மாசனம் 99

முன்னொரு காலத்தில் இந்தியாவில் உஜ்ஜயினி நகரம் ஒரு புகழ்பெற்ற நகரமாகத் திகழ்ந்தது. அங்கு ஏராளமான அறிஞர்களும், காளிதாசன் போன்ற கவிஞர்களும் வாழ்ந்து வந்தனர்.

பேரரசன் விக்கிரமாதித்தன் உஜ்ஜயினியில் இருந்துதான் ஆட்சி புரிந்தான். அவன் மிகச் சிறந்த நீதிபதி எனப் பெயர் பெற்றவன். வலிமையான மன்னன். மக்களிடம் நேர்மையாகவும், மென்மையாகவும் நடந்து கொண்டான். மக்கள் அவனை நேசித்தனர். கடவுளைப் போலக் கருதினர்.

பல நூற்றாண்டுகள் கடந்தன. நகரங்கள் அழிந்து மாற்றங்கள் ஏற்பட்டன! மாடமாளிகைகள், கூடகோபுரங்கள் மண்ணில் புதையுண்டன!
விக்ரமாதித்தனை மக்கள் மறந்துவிட்டனர்!

ஒரு சமயம் மாடு மேய்க்கும் சிறுவர்கள் சிலர் ஓர் இடத்தில் விளையாடிக் கொண்டிருந்தனர். அந்த இடத்தில் சிற்பங்கள் செதுக்கப்பட்ட கற்கள், தூண்கள் கிடந்தன. பல மண்மேடுகள் ஆங்காங்கே இருந்தன. அவற்றில் ஒன்று பசுமையாகவும், உயரமாகவும் இருந்தது.



ஒரு சிறுவன் ஓடிப் போய் அதன் மேல் அமர்ந்து கொண்டான். விளையாட்டாக நண்பர்களிடம், "நான் தான் நீதிபதி! உங்கள் வழக்குகளை என்னிடம் கொண்டு வாருங்கள்," என்றான்.

மற்ற குழந்தைகளுக்கும் இந்த விளையாட்டு பிடித்திருந்தது. உடனே அவர்கள் கூடித் தங்களுக்குள் ஒரு வழக்கை உருவாக்கினர். இரு சிறுவர்கள் முன்வந்து நீதிபதியிடம், "மாண்புமிகு நீதிபதி அவர்களே! என் பக்கத்து வீட்டுக்காரனுக்கும் எனக்கும் உள்ள நிலப் பிரச்சனையைத் தீர்த்து வையுங்கள்," என்று வாதாடினர்.

அப்போது சிறுவர்கள் ஒரு அதிசயத்தைக் கண்டனர். அதுவரை விளையாட்டாகப் பேசிய நீதிபதியின் முகம் பிரச்சனையைக் கேட்டதும் மாறியது. உண்மையான நீதிபதியைப் போலவே பேசினான். வழக்கில் சரியான தீர்ப்பைக் கொடுத்தான்.

அவன் பேச்சைக் கேட்ட சிறுவர்கள் பயந்தனர். ஆனாலும் விளையாட்டைத் தொடர்ந்தனர். இன்னும் ஒரு புதிய பிரச்சனையை உருவாக்கி நீதிபதியிடம் வழக்கை எடுத்துச் சென்றனர். மிக நீண்ட கால அனுபவம் பெற்றவன் போல் இந்த முறையும் சிறுவன் தீர்ப்புக் கூறினான். இப்படியே மணிக்கணக்காகக் குழந்தைகள் விளையாடினர்.

வீடு செல்லும் நேரம் வந்தது. சிறுவன் மண்மேட்டிலிருந்து குதித்தான். வழக்கம் போல் நண்பர்களுடன் சிரித்துப் பேச ஆரம்பித்தான். அன்றைய தினத்தைக் குழந்தைகளால் மறக்கவே முடியவில்லை.

அதன் பிறகு உண்மையாகவே பிரச்சனை வந்தபோதெல்லாம் குழந்தைகள் அச்சிறுவனை மண்மேட்டின் மேல் உட்காரச் செய்வார்கள். சிறுவனும் பிரச்சனைகளுக்குச் சரியான தீர்ப்புக் கூறுவான்.

இச்செய்தி எல்லா ஊர்களுக்கும் பரவியது. கிராம மக்கள் எல்லோரும் தங்கள் பிரச்சனைகளைச் சிறுவனிடம் கொண்டு வந்தனர். மண்மேட்டில் அமர்ந்து அவன் சொல்லும் தீர்ப்பு எப்போதும் சரியானதாகவே இருந்தது.

இதைப்பற்றிக் கேள்விப்பட்ட அரசன், 'அந்தச் சிறுவன் விக்கிரமாதித்தனின் சிம்மாசனத்தில்தான் அமர்ந்திருக்க வேண்டும்,' என்று ஊகித்தான். தன் ஆட்களை அனுப்பி மண்மேட்டைத் தோண்டச் செய்தான். அவன் நினைத்தது போலவே அங்குச் சிம்மாசனம் இருந்தது. அதில் பறக்கத் தயாராக இருப்பது போன்ற இருபத்து ஐந்து தேவதை சிலைகள் இருந்தன.

ஊரில் ஒரே பரபரப்பு, கோலாகலம், கொண்டாட்டம். சிம்மாசனம் ஊர்வலமாக அரண்மனைக்குக் கொண்டு வரப்பட்டது. "நான் இந்தச் சிம்மாசனத்தில் அமர்ந்து வழக்குகளைக் கேட்பேன். அப்போது விக்கிரமாதித்தனின் அருள் என் மீது இருக்கும். என்னால் சரியாகத் தீர்ப்புச் சொல்ல முடியும்," என்றான் அரசன்.

அரசன் சிம்மாசனத்தில் அமர நல்ல நாள் ஒன்று குறிக்கப்பட்டது. மங்கள இசை முழங்கியது. மன்னன் சிம்மாசனத்தில் உட்காரப் போனான்.

அப்போது தேவதை சிலைகளில் ஒன்று, "நில்! இந்தச் சிம்மாசனத்தில் உட்கார உனக்கு அருகதை உள்ளதா என்று சிந்தித்துப் பார்! பிற மன்னரது நாடுகளை ஆள நீ ஆசைப் பட்டதில்லையா?" என்று கேட்டது.





"ஆம்! எனக்கு இந்தச் சிம்மாசனத்தில் உட்கார அருகதை இல்லைதான்," என்றான் அரசன்.

"மூன்று நாட்கள் விரதமிருந்து தியானம் செய்துவிட்டு வா!" என்று கூறித் தேவதை தன் இறக்கைகளை விரித்துப் பறந்துவிட்டது. அது இருந்த இடம் காலியாக இருந்தது.

அரசனும் மூன்று நாட்கள் விரதம் இருந்து மீண்டும் சிம்மாசனத்தில் ஏறப்போனான். அப்போது மீண்டும் ஒரு தேவதை தோன்றி, "நீ மற்றவரின் செல்வத்திற்கு ஆசைப்பட்டதுண்டா?" என்று கேட்டது.

"ஆம்! ஆசைப்பட்டது உண்டு!" என்றான். அவனைத் தியானம் செய்யச் சொல்லிவிட்டு இந்தத் தேவதையும் பறந்துவிட்டது.

இப்படியே நூறு நாள்கள் கடந்தன. கடைசி நாள் சிம்மாசனத்தில் ஒரே ஒரு தேவதைதான் இருந்தது. அது மன்னனிடம், "ஒரு குழந்தையின் மனதைப் போல் உன் மனம் தூய்மையாக உள்ளதா?" என்று கேட்டது.

"இல்லை!" என்றான் அரசன். அதைக் கேட்ட தேவதை சிம்மாசனத்தைத் தூக்கிக் கொண்டு வானில் பறந்து மறைந்தது. அதன் பிறகு யாரும் அந்த சிம்மாசனத்தைப் பார்க்கவில்லை.

ஒரு நாள் அரசன் தனிமையில் சிந்தித்தபோது அவனுக்குச் சிம்மாசனத்தின் புதிர் புரிந்தது. யாரிடம் ஒரு குழந்தையைப் போல தூய்மையான உள்ளம் இருக்கிறதோ அவர்களால்தான் நேர்மையாக இருக்க முடியும்! அதனால்தான் எந்த அரசனும் அமர முடியாத விக்கிரமாதித்தன் சிம்மாசனத்தில் மாடு மேய்க்கும் சிறுவனால் அமர முடிந்தது. தீர்ப்பு சொல்ல முடிந்தது.

மூலம் : சகோ. நிவேதிதாவின் குழந்தைக் கதைகள்



# மூன்று நாள் மட்டும்...



*(ஹெலன்கெல்லர் ஒரு அதிசயப் பெண்மணி. பிறவிலேயே கண் பார்வையை இழந்தவர். காதும் கேளாதவர். தொட்டு உணர்ந்தே உலகை அறிந்து கொண்டவர். தன் வாழ்நாள் முழுவதும் பிறருக்கென உழைத்தவர். அவர் எழுதிய கட்டுரையிலிருந்து...)*

மனிதர்கள் கண்பார்வை பெற்றிருந்தும் அதன் மதிப்பை உணர்வதில்லை. சில சமயம் நான் நினைப்பதுண்டு - மனிதர்கள் சில நாட்கள் எதையும் பார்க்க முடியாமல், கேட்க முடியாமல் இருந்தால் நிச்சயம் அந்த அனுபவத்திலிருந்து நிறையக் கற்பார்கள். இருட்டு அவர்களுக்குப் பார்வையின் மதிப்பை உணர்த்தும். அமைதி அவர்களுக்கு ஒலிகளின் அருமையை உணர்த்தும்.

பார்வைத் திறன் உள்ள என் நண்பர்கள் என்னவெல்லாம் பார்க்கிறார்கள் என்று அவ்வப்போது நான் சோதித்துப் பார்ப்பதுண்டு.

சமீபத்தில் என் தோழி காட்டில் நீண்ட தூரம் நடந்துவிட்டுத் திரும்பியிருந்தாள். அவளிடம், "நீ காட்டில் என்னவெல்லாம் பார்த்தாய்?" என்று விசாரித்தேன். அவளோ, "சொல்லும்படி ஒன்றும் இல்லை," என்றாள். ஒரு மணிநேரம் காட்டில் சுற்றிவிட்டு ஒன்றுமே பார்க்கவில்லையா? அது எப்படி!

பார்வையில்லாத எனக்கே நூற்றுக்கணக்கான பொருள்கள் தென்படுகின்றன. அவற்றைத் தொட்டுப் பார்த்தே நான் அறிந்து கொள்கிறேன். இலையின் மென்மையான அமைப்பை உணர்கிறேன். சில மரங்களின் வழவழப்பான பட்டைகளையும், வேறு சில மரங்களின் சொர சொரப்பான பட்டைகளையும் அன்புடன் வருடிப் பார்க்கிறேன்.

வசந்த காலத்தில் மொட்டுகள் இருக்கும் என்ற நம்பிக்கையில் மரக்கிளைகளைத் தொட்டுப் பார்க்கிறேன். அதிர்ஷ்டவசமாகச் சில சமயம் கிளைகளில் பறவையின் பாட்டு ஒலி அதிர்வுகளை உணர்கிறேன்.



இவற்றையெல்லாம் பார்க்க வேண்டும் என்ற ஏக்கத்தால் சில சமயம் என் இதயம் அழும். தொட்டுப் பார்க்கும் போதே எனக்கு இவ்வளவு மகிழ்ச்சி ஏற்படுகிறது என்றால் அவற்றைக் கண்ணால் பார்க்கும்போது எவ்வளவு அழகாக இருக்கும்!

'மூன்றே மூன்று நாட்கள் மட்டும் பார்வை கிடைத்தால் நான் எதையெல்லாம் பார்க்க வேண்டும்' என்று கற்பனை செய்து வைத்திருக்கிறேன்.

முதல் நாளில் அன்பும் பாசமும் காட்டி என் வாழ்க்கையை அர்த்தமுள்ளதாக்கிய மனிதர்களைப் பார்க்க விரும்புவேன்.

கண்களால் என் நண்பர்களின் இதயத்தை எப்படிப் பார்ப்பது என்று எனக்குத் தெரியாது. விரல் நுனிகளால் முகவடிவங்களைத் தொட்டுப் பார்த்துத்தான் அவர்களை அறிந்துள்ளேன். அவர்களது சிரிப்பு, சோகம் போன்ற எல்லா உணர்ச்சிகளையும் என்னால் புரிந்து கொள்ள முடிகிறது.

நாம் பெரும்பாலும் மனிதர்களின் வெளித் தோற்றத்தைத்தான் பார்க்கிறோம். கண் பார்வையால்





நண்பர்களின் உள் மனதைப் பார்க்க முயற்சி செய்கிறோமா?

அடுத்ததாக எனக்குப் படித்துக் காட்டப்பட்ட புத்தகங்களைப் பார்க்க விரும்புவேன். அவைதான் மனித வாழ்க்கையின் ஆழத்தை எனக்குப் புரிய வைத்தன.



மேலும் விசுவாசமுள்ள என் நாயின் கண்களைப் பார்க்க விரும்புவேன். அன்று மாலை காட்டுக்குள் வெகுதூரம் நடந்து சென்று இயற்கையின் அழகை ரசிப்பேன். வண்ணமயமான சூரிய அஸ்தமனத்தைக் காணவிரும்புவேன்.

இரண்டாம் நாள் காலை. இருளை நீக்கித் தூங்கும் உலகத்தை எழுப்பும் சூரிய ஒளியைக் கண்டு களிக்க விரும்புவேன். அன்று நான் அருங்காட்சியகத்துக்குச் சென்று மறைந்த விலங்குகள், பூமி உருவான கதை, மனிதனின் வளர்ச்சி இவற்றைப் பார்ப்பேன். உலக வரலாற்றை அறிய முயலுவேன்.

பிறகு சிற்பக் கண்காட்சிகளைப் பார்க்க விரும்புவேன். இதுவரை தொட்டுப் பார்த்த சிலைகளைக் கண்ணால் பார்ப்பேன். ஓவியங்களைப் பற்றி ஓவியர்கள் விவாதிப்பதைக் கேட்டிருக்கிறேன். அவற்றை இப்போது பார்த்துப் புரிந்து கொள்ள முயல்வேன்.



மாலை திரை அரங்குக்குச் சென்று நாடகங்கள் மற்றும் நடனங்களைப் பார்க்க விரும்புகிறேன். இதுவரை நடனங்களின் அழகை மேடையில் நடக்கும் கால் அடிகளின் அதிர்வுகளாலும், இசை ஒலி அதிர்வுகளாலும் மட்டுமே உணர்ந்திருக்கிறேன்.

மூன்றாவது நாள் காலை அன்றாட வாழ்க்கையில் உலகம் எப்படி இயங்குகிறது என்பதைக் காண விரும்புவேன். நெரிசலான ஒரு சாலையில் நின்று கொண்டு மனிதர்களின் எல்லாவிதமான முகங்களையும் பார்ப்பேன். அவர்களைப் புரிந்துக் கொள்ள முயல்வேன். அங்கிருந்து குடிசைப் பகுதிகள், தொழிற்சாலைகள், குழந்தைகள் விளையாடும் பூங்காக்கள் என்று சுற்றுவேன்.

மகிழ்ச்சி-துக்கம் இவை இரண்டையும் காண எப்போதும் என் கண்களைத் திறந்து வைத்திருப்பேன். இந்த அனுபவங்களிலிருந்து மக்கள் எப்படி உழைக்கிறார்கள், வாழ்கிறார்கள் என்று ஆழமாகச் சிந்தித்துப் புரிந்து கொள்வேன்.

மூன்றே நாட்களுக்குள் உலகில் நான் விரும்பிய எல்லாவற்றையும் பார்க்க முடியாதுதான்! மீண்டும் என்னை இருள் சூழ்ந்த பின்னர்தான் நான் எதையெல்லாம் பார்க்காமல் விட்டுவிட்டேன் என்பதை உணர்வேன்.

நீங்கள் ஓரிரு நாட்கள் பார்க்க முடியாமல் இருந்துவிட்டுப் பின் மீண்டும் பார்க்க முடியும்போது நிச்சயம் பார்வையை முழுமையாகப் பயன்படுத்துவீர்கள். நீங்கள் பார்ப்பவை எல்லாம் அரிதாகத் தோன்றும். அப்போதுதான் நீங்கள் உண்மையாகப் பார்ப்பீர்கள். ஒரு புதிய அழகான உலகம் உங்கள் முன் விரியும்.

பார்வையற்ற நான் பார்வையுள்ள உங்களுக்குத் தரும் குறிப்புகள் இதோ - இன்று மட்டுமே உங்களால் பார்க்க முடியும் என்ற உணர்வோடு எல்லாவற்றையும் பாருங்கள். இதே போலவே மற்ற புலன்களையும் பயன்படுத்துங்கள். மனிதர்கள் மற்றும் பறவைகளின் குரல் இசையைக் கேளுங்கள். தொடு உணர்வு நாளை இருக்காது என்பது போல் ஒவ்வொரு பொருளையும் தொட்டு உணருங்கள். பூக்களின் மணம், உணவின் ருசி எல்லாவற்றையும் கவனியுங்கள்.

ஒவ்வொரு புலனையும் முழுமையாகப் பயன்படுத்துங்கள். எல்லாப் புலன்களையும் விடப் பார்வைதான் அதிக மகிழ்ச்சி தரக்கூடியது என்று நான் உறுதியாகச் சொல்வேன்.




P.Saraswati V.Vijayakanthi
L.S.Saraswathi S.Rajalakshmi

Rajalakshmi Srinivasan
Memorial Foundation, Chennai

Artist : S. P. Raju